# பாண்டிநாட்டுத் திருப்பதிகள்





ஸ்ரீதேவி தோதாத்திரிநாதர் பூதேவி

பேராசிரியர்
டாக்டர் ந.சுப்புரெட்டியார்

# பாண்டி நாட்டுத் திருப்பதிகள்




பேராசிரியர் டாக்டர் ந. சுப்புரெட்டியார்

# வேண்டுகோள்!

ஏனம்ஆய் நிலம்கீண்ட என்அப்பனே! கண்ணா
என்றும் என்னை ஆளுடை
வான நாயகனே! மணிமா
ணிக்கச் சுடரே!
தேன மாம்பொழில் தண்சிரீ வரமங்கலத்
தவர்கை தொழஉறை
வான மாமலை யே!அடி
யேன்தொழ வந்தருளே[1]

—நம்மாழ்வார்

1. திருவாய் 5.7:6

# பாண்டிநாட்டுத் திருப்பதிகள்

(இரண்டாம் பதிப்பு : ஆசிரியரின் பவள விழா வெளியீடு-1990)

**ஆசிரியரின் மணிவிழா வெளியீடு-1977**

'அருங்கலைக் கோன்' 'ஸ்ரீசடகோபன் பொன்னடி'
பேராசிரியர் டாக்டர் ந. சுப்புரெட்டியார்
எம்.ஏ., பி.எஸ்சி., எல்.டி., வித்துவான். பிஎச்.டி.,
முன்னாள் : தமிழ்ப்பேராசிரியர்-துறைத்தலைவர்
திருவேங்கடவன் பல்கலைக் கழகம், திருப்பதி.
இந்நாள் : தகுநிலைப் பேராசிரியர் (கண்ணியப் பொறுப்பு)
தமிழ் இலக்கியத் துறை
சென்னைப் பல்கலைக் கழகம்.

விற்பனை உரிமை :
**பாரி நிலையம்**
184, பிரகாசம் சாலை
சென்னை—600 108

First Edition-March 1977
Second Edition-December, 1990


(Author's Second Son)
AD-13 (Plot. No. 3354
Anna Nagar, Madras-600 040.
Ph: 6 21 15 83

விலை : ரூ. 28-00

PAANDI NAATTUT—TIRUPPATIKAL

Venkatam Publications
AD - 13 (Plot 3354)
ANNA NAGAR, MADRAS-600 040
Ph : 6 21 15 83

அச்சிட்டோர் : ஸ்ரீகோமதி அச்சகம்
41, சூரப்பமுதலி தெரு, திருவல்லிக்கேணி,
சென்னை—600005 தொலைபேசி எண் 844554

## அன்புப் படையல்

நீண்டவன் குணத்தில் தோய்குரு கூரன்
நேயத்தோ டருள்கனிச் சாறும்
வேண்டிய தளிக்கும் வடமொழி தந்த
வித்தக நான்மறைத் தேனும்
ஈண்டியெஞ் ஞான்றும் பாய்தலால் அமுதாம்
இதயத்தைப் பெற்றிடு **சீமத்**
**ஆண்டவன்** பாத மலரினில் வண்டாய்
அருளினைத் துய்க்க இந் நூலே.

## தோழி தாயருக்குக் கூறுதல்

பின்னை கொல், நில மாம கள்கொல்
　　திருமாம கள்கொல், பிறந்திட்டாள்?
என்ன மாயங்கொ லோ! இ வள்நெடு
　　மாலென் றேநின்று கூவுமால்
முன்னி வந்தவள் நின்றி ருந்துறை—
　　யும்தொ லைவில்லி மங்கலம்
சென்னி யால்வணங் கும்அவ் வூர்த்திரு
　　நாமம் கேட்பது சிந்தையே[2]

—நம்மாழ்வார்

2. திருவாய் 6.5:10

# பதிப்புரை

''மூர்த்திதலம் தீர்த்தம்
முறையால் தொடங்கினர்க்கோர்
வார்த்தைசொலச் சற்குருவும்
வாய்க்கும் பராபரமே''

என்று தாயுமான அடிகள் அருளியுள்ளபடி இந் நூல் ஆழ்வார் பெருமக்களால் மங்களா சாசனம் செய்யப் பெற்ற பாண்டி நாட்டுத் திருத்தலப் பயணத்தைப் பற்றியது. படிப்போருக்குப் பயணத்தின் பயனை நல்க வல்லது; பக்தி சுவையையும் ஊட்ட வல்லது.

பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் சற்றேறக்குறைய இருபது ஆண்டுகள் தமிழகத்திலும் மற்றுமோர் இருபது ஆண்டுகள் ஆந்திரத்திலும் தமிழ்ப் பணியாற்றிய பெருமகனார். அவருடைய பல நூல்கள் எங்கள் மூலம் வெளிவந்துள்ளன. எனினும், இந்த நூலை அவர்களின் 'மணிவிழா வெளியீடாகக் கொணர்ந்து பெருமை அடைகின்றோம்.

தமிழகம் இந்நூலுக்கு ஆதரவு காட்டின் அது பேராசிரியர் ரெட்டியார் அவர்களின் தமிழ்த்தொண்டினைத் தக்க முறையில் பாராட்டுவதற்கொப்பாகும்!

எஸ். ஆர். சுப்பிரமணிய பிள்ளை
பதிப்பகத்தார்

# அணிந்துரை

ஜஸ்டிஸ் பா. ச. கைலாசம்,
(உச்ச நீதிமன்றம் புதுடில்லி.)

**த**ண்ணார் தமிழளிக்கும் தண்பாட்டி நாட்டின் பதினெட்டு திவ்விய தேசங்களைத் தாம் சென்று தரிசித்த தோடு நில்லாமல் நம்மையும் தன்னோடு கூடவே தம் அருமையான எழுத்தாற்றலால் அழைத்துச் சென்று வைணவ தரிசனம் செய்துவைக்கின்றார் பேராசிரியர் **ந. சுப்புரெட்டியார்.** திருக்கோட்டியூரிலே தொடங்குகின்ற இவர்தம் பக்திப் பயணம் திருக்குறுங்குடியிலே போய் முடிவடைகின்றது. இத்தனைத் திருப்பதிகளையும் இவரோடு தரிசிக்கின்ற நாம் 'மறந்தும் புறந்தொழா மாந்தராய்' மாறி விடுகின்றோம்.

'தேவகாரியம் செய்து வேதம் பயின்று வாழ்வோர்கள்' நிறைந்த திருக்கோட்டியூரிலேயே நமக்கு எட்டெழுத்து உபதேசம் ஆகிவிடுகின்றது. 'புகல் ஒன்று இல்லா அடியேன் உன் அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே' என்ற சரணாகதி தத்துவம் தொடர்கின்றது. 'சோராத காதல் பெருஞ் சுழிப்பால் தொல்லை மாலை ஒன்றும் பாராது' அவனுக்குப் பல்லாண்டு பாடும் பான்மையினை நினைத்து நெகிழ்கின்றோம். 'தான் அறப் பெய்யும் காளமேகத்தைத்' திருமாலிருஞ் சோலை மலையிலே 'அறு கால் வரி வண்டு கள் ஆயிரம் நாமம் சொல்லிச் சிறுகாலையிலே பாடும்'

அருமையை அநுபவிக்கின்றோம். 'மாயனை — மன்னு வடமதுரை மைந்தனை—தூய பெரு நீர் யமுனைத் துறைவனை—வாயினால் பாடி—மனத்தினால் சிந்தித்து— அறிவொன்று மில்லாத ஆயர்குலத்துப் பெண்களின்' நிலையிலிருந்து அநுபவித்த ஆண்டாளின் அருள் வெள்ளத்திலே கும்மாளம் அடித்து விட்டு திருத்தண்காலூர் சென்று அப்பனைத் தரிசிக்கின்றோம்.

'இதுவோ திருநகரி ஈதோ பொருநை? இதுவோ பரம பதத்து எல்லை—இதுவோதான், வேதம் பகர்ந்திட்ட மெய்ப் பொருளின் உட் பொருளை, ஓதும் சடகோபன் ஊர்' என்று நம்மை மறந்து ஆழ்வார் திருநகரிலேயே நின்று விடுகின்றோம். வானுற வளர்ந்து விளங்கிய திவ்வியமான பேரொளியைக் கண்டு நம்மாழ்வாரைத் தெரிந்து கொண்டு தனது குருவாக ஏற்றுக் கொண்ட மதுரகவி பிறந்த மண்ணிலே— திருக்கோளூரிலே - வைத்தமா நிதியைக் கண்டு மகிழ்கின்றோம். சிறுவர்களின் விளையாட்டின் சுவையிலே ஈடுபட ஆசைப்பட்டு அங்கிருந்த பெரிய திருவடியை 'சற்றே நகர்ந்திடு, கருடா' என்று கூறிய மகர நெடுங்குழைக் காதனின் விளையாட்டு ஆசையை எண்ணி வியக்கின்றோம். 'குழகன்' என்றால் மகானாக இருக்கும் தனது மேன்மையினைப் பாராது சிறியாரோடும் கலந்து பழகுபவன் என்று பொருள் சொல்லும் பேராசிரியர் சுப்புரெட்டியார் நாம் அப் பொருளில் உணர்ந்து உருகி 'அவன்' அழகையும் அருளையும் பருகும் வகையில் அப் பேரருளாளனின் பெருமையனைத்தையும் உணர்த்தி விடுகின்றார்.

கீதையின் பதினெட்டு அத்தியாயங்கள் பதினெட்டு யோகங்களைச் சொல்வது போல இவர்தம் பதினெட்டுக் கட்டுரைகளும் பல்வேறு பக்தித் திருப்பதிகளின் பெருமை களை விளக்குகின்றன. திருமந்திரத்தின் பெருமையை— நலந்தரும் சொல்லை—பரத்துவம், வியூகம், விபவம்,

அந்தர்யாமித்துவம், அர்ச்சை என்ற எம்பெருமானின் ஐந்து நிலைகளை—பக்தி, பிரபத்தி வழிகளை பிராரத்தம், சஞ்சிதம், ஆகாமியம் ஆகிய வினைகளின் தொகுதியை - எம்பெருமானின் திருமேனியாக வைணவ சித்தாந்தம் பேசும் சித்து அசித்துபற்றி—சகல வேத சாரத்தைத் தன்னுள்ளேயே அடக்கி வைத்துள்ள முதல் பதமாகிய பிரணவம் பற்றி மிகவும் எளிதிலே புரிந்து கொள்ளும் வகையில் மிக அழகாக விளக்கியிருக்கும் நேர்த்தி உள்ளத்தைக் கவர்கிறது. எத்தனை முறை படித்தாலும் தெவிட்டாத அழகிய தீந்தமிழ் உள்ளத்தின் ஆழத்திலே ஒரு குளுமையை ஏற்படுத்துகிறது. வைணவ நூல்களை எவ்வளவு ஆழமாகப் படித்திருக்கிறார் பேராசிரியர் சுப்புரெட்டியார் என்பது புரிகின்றது. இது போல இன்னும் பல நூல்களை எழுதி மொழிக்கும் முதல்வனுக்கும் தொண்டாற்றிய வண்ணமிருக்க எம்பெருமான் அருள் புரிய வேண்டுகிறேன்.

—ஜஸ்டிஸ் பா. ச. கைலாசம்

# நூல் முகம்

விடங்கலந்து அமர்ந்த அரவணைத் துயின்று
விளங்கனிக்கு இளங்கன்று விசிறி
குடங்கலந்து ஆடி குரவைமுன் கோத்த
கூத்த, எம் அடிகள்தம் கோயில்
தடங்கடல் முகந்து விசும்பிடைப் பிளிற
தடவரைக் களிறுஎன்று முனிந்து
மடங்கல்நின்று அதிரும் மாலிருஞ் சோலை
வணங்குதும் வாமட நெஞ்சே![3]

— திருமங்கையாழ்வார்

சென்னைப் பல்கலைக் கழக விதி பி. எஸ். சி. எல். டி. பட்டங்களுடன் உயர்நிலைப் பள்ளியில் தலைமையாசிரியராகப் பணி புரிந்த என்னை தமிழ் எம். ஏ. தேர்வு எழுத அனுமதிக்கவில்லை. இதனால் பத்தாண்டுகள் தாமதாயிற்று எம். ஏ. பட்டம் பெற மீண்டும் பிஎச். டி. பட்டத்திற்கு ஆராய்ச்சி செய்யப் பல்கலைகழக விதி குறுக்கிட்டது. தமிழகத்தைத் துறந்து ஆந்திரம் வந்தும் நிழல் தொடர்வது போல இங்கும் அதே விதி தடையாக இருந்தது. நான்கு ஆண்டுகள் முயன்று ஏழுமலையான் திருவருளால், கருணையுள்ளம் கொண்டதுணைவேந்தர் திரு. எஸ், கோவிந்தராஜுலு அவர்களின் துணையால், சிறியேனது சிறுமதியால் இந்த விதியை வென்றேன். பதிவு பெறுவதற்கே பதினைந்து ஆண்டுகள் கடந்தன. 1964-இல் பிஎச். டி. பட்டத்திற்குப் பதிவு செய்து கொள்ள இசைவு வழங்கியது திருப்பதிப் பல்கலைக் கழகம். உலோகாயதப் பொருளை நீக்கி இறைவனையே பொருளாகக் கொண்ட 'நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தை' ஆய்வுப் பொருளாகத் தேர்ந்தெடுத்துக் கொண்டேன். திருவேங்கடவன் பல்கலைக்

3. பெரியதிருமொழி, 9. 5. 6

கழகத்தில் வடமொழித்துறையைச் சார்ந்த கற்று உணர்ந்து அடங்கிய சான்றோராகிய துணைப் பேராசிரியர் டாக்டர் வி வரதாச்சாரியார் என் ஆய்வுக்கு வழித்துணையாக அமைந்தது ஏழுமலையான் திருவுள்ளத்தாலேயாகும். ஐந்தாண்டுகள் ஆய்ந்து 1969-ல் பிஎச் டி. பட்டமும் பெற்றேன். இருபத்தைந்து ஆண்டுகள் இப்படிக் கழிந்தன. சிறியேனே இப்பல்கலைக்கழகத்தில் தமிழ்த் துறையில் முதல் பிஎச். டி. பட்டம் பெற்றவன்.

ஐம்பது அகவைக்குமேல்தான் பிஎச். டி. பட்டம் வரும் என்பது உறுதியானதால் ஆய்வுக் காலத்தில் 'புண்ணியத்தையும் புருஷார்த்தத்தையும்' குறிக்கோட் பொருளாகக் கொண்டு 'மூர்த்தி தலம் தீர்த்தம்' இவற்றை முறையாக அடையப் பெறும் நோக்கத்துடன் திவ்விய தேச யாத்திரையைத் தொடங்கினேன். என் இளையமகன் திரு. இராம கிருஷ்ணன் என்னுடன்வர பாண்டி நாட்டு யாத்திரை 1965 செப்டம்பரில் தொடங்கியது. பாண்டி நாட்டில் திருக்கோட்டியூர், திருமெய்யம், திருப்புல்லாணி, திருக்கூடல் (மதுரை), திருமோகூர், திருமாலிருஞ்சோலை சீவில்லிப்புத்தூர், திருத்தண்கால்' என்ற திருப்பதிகளை யும்; சோழநாட்டில் திருவரங்கம், உறையூர், கரம்பனூர் (உத்தமர் கோயில்), திருவெள்ளறை, அன்பில், திருப்பேர் நகர் (கோயிலடி) ஆகிய திருப்பதிகளையும் சேவிக்கும் பேறு பெற்றேன். அதன் பிறகு 1969ஜூன் திங்கள் என் துணைவி, மக்கள் இருவருடன் பாண்டிநாட்டில் ஏனைய திருப்பதிகளையும், மலைநாட்டுத் திருப்பதிகளையும் தரிசித்தேன். இந்தப் பயணத்தில்பாண்டிநாட்டுத் திருப்பதி யாத்திரையும், மலை நாட்டுத் திருப்பதி திருப்பயணமும் ஒருவாறு முற்றுப்பெற்றன. மலைநாட்டுத் திவ்வியதேச யாத்திரையின் அநுபவம் "மலை நாட்டுத்திருப்பதிகள்" என்ற தலைப்பில் 1971 மார்ச்சுத் திங்களிலும்; "தொண்டை நடுநாட்டு யாத்திரையின் அநுபவம் "தொண்டை நாட்டுத் திருப்பதிகள்" என்ற தலைப்பில் 1973 ஆகஸ்டிலும் நூல் வடிவங்கள் பெற்றன.

இப்போது பாண்டியநாட்டு திவ்விய தேச யாத்திரையில் யான் பெற்ற அநுபவம் "பாண்டி நாட்டுத் திருப்பதிகள்" என்ற பெயருடன் நூல் வடிவம் பெறுகின்றது. ஏனைய இரண்டு நூல்களையும் படித்த அன்பர்கள் இதனையும் அன்புடன் வரவேற்பர் என்ற நம்பிக்கை என்றும் என்பால் உண்டு.

இந்த நூலிலுள்ள பதினெட்டுக் கட்டுரைகளிலும் ஆழ்வார்களின் பக்தியுணர்ச்சி, அவர்களின் இறையநுபவம், அவர்கள் அருளிய பாசுரங்களின் சொல்வளம், அவற்றில் அகப்பொருள் துறைகள் அமைந்த அருமைப்பாடு முதலியவற்றைக் காணலாம். என் சிறிய உள்ளம் ஆழ்வார்களின் திருப்பாசுரங்களில் ஆழங்கால்பட்ட முறையைக் கட்டுரைகள் ஒருவாறு விளக்கும். இந்நூலைப்படிப்போரின் உள்ளங்களையும் பிணித்து, அத் திருப்பாசுரங்களைச் சேவித்து அநுபவிக்கத் தூண்டும் கருவிகளாக அவை அமையுமாயின் அதனை யான் பெற்ற பெரும் பேறாகக் கருதி மகிழ்வேன்.

இந்த நூலிலுள்ள 3-எண்ணுள்ள கட்டுரை இராமேசுவரம் திருக்கோயில் குட முழுக்கு மலரில் (5-2-1975) வெளிவந்தது. அதனை வெளியிட்ட மலராசிரியருக்கு என் நன்றி என்றும் உரியது.

பாண்டிநாட்டுத் திருப்பதிகளில் நவதிருப்பதிகளை விரைந்து நலமாகச் சேவிப்பதற்கு திருநெல்வேலி எஸ், ஆர் சுப்பிரமணிய பிள்ளைப் பதிப்பகத்தார் தமது சிற்றுந்தை (Van) உதவி அருளினார்கள். இதனால் கதிரவன் கொடுமையாகக் காயும் சூன் திங்களில் எங்கள் யாத்திரை சிரமமின்றி நிறைவு பெற்றது. இந்த வசதிகள் அளித்த மேற்படி பதிப்பகத்தாருக்கும் சிறப்பாக அதன் அதிபர் திரு. S. சங்கர சுப்பிரமணிய பிள்ளை அவர்கட்கும் என் உளங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகின்றேன்.

இந்த நூலை யான் எழுதி வெளியிடுவதற்கு இசைவு தந்த திருவேங்கடவன் பல்கலைக் கழக ஆட்சிக் குழுவினருக்கும் (Syndicate) சிறப்பாகப் பல்கலைக் கழகத்தை இயக்கி வரும் அதன் துணைவேந்தர் பேராசிரியர் **கே. சச்சிதானந்த மூர்த்தி** அவர்கட்கும் என் நன்றி கலந்த வணக்கத்தைப் புலப்படுத்திக் கொள்ளுகின்றேன்.

காலத்திற்கேற்ற நூல்களை, சிறப்பாகப் பக்திப் பனுவல்களை, வெளியிட்டுச் சிறந்த முறையில் தமிழ்ப் பணியாற்றி வருபவர்கள் எஸ். **ஆர். சுப்பிரமணியபிள்ளை** பதிப்பகத்தார். ஏற்கெனவே எனது **'மலைநாட்டுத் திருப்பதிகள்'**, **'தொண்டை நாட்டுத் திருப்பதிகள்'** என்ற நூல்களை வெளியிட்டதைத் தொடர்ந்து இந்த நூலையும் மணமுவந்து ஏற்று வெளியிட்டமைக்கு அவர்கட்கும், அவர்களது சென்னைக் கிளையைச் சிறந்த முறையில் திறம்பட இயக்கிவரும் அதன் பொறுப்பாளர் கந்தன் அடிமை திரு. எஸ். பி. **சண்முகம்பிள்ளை** அவர்கட்கும் என் உளங்கனிந்த நன்றியைப் புலப்படுத்துகின்றேன்.

டில்லி உச்சநீதி மன்றத்து (Supreme Court) நீதிபதி திரு. **பா. ச. கைலாசம்** அவர்களின் அரிய நட்பினைப் பெற்றது இறைவனது திருவருளாலாகும். பல்லாண்டுகள் சென்னை உயர்நீதிமன்றத்தில் வழக்குரைஞராகப் பணியாற்றிப் பெரும்புகழ் ஈட்டிய இவரை அரசு உயர்நீதி மன்றத்து நீதிபதியாக்கியது. பல ஆண்டுகள் அப்பொறுப்பை வகித்துப் பணியாற்றித் தமது நேர்மையாலும் திறமையாலும் 'சமன் செய்து சீர்தூக்கும் கோல் போல் அமைந்து ஒருபால் கோடாமையாலும்' தலைமைநீதிபதியானார். ஓராண்டுக்குமேல் அப்பொறுப்பில் பணியாற்றிப் புகழ் மாலைகளைச் சூடிய இவருக்கு டில்லி அரசு உச்ச நீதி மன்றத்தில் நீதிபதிப் பதவியை வழங்கியது. இவருடைய அமைதி, அடக்கம், சீலம், பரிவு முதலிய அருங்குணங்கள் அறிஞர்களின் கவனத்தைக் கவர்ந்தன; இவருக்குப் பெருமதிப்பையும் நல்கின.

இறையன்பிலும் மெய்ப்பொருள் கருத்துகளிலும் ஆழங்கால் பட்டு நிற்பவரும் 'பண்புடையார் பட்டுண்டு உலகம்' என்ற பொன்மொழிக்கு இலக்கியமாகத் திகழ்பவருமான இப் பெரியாரின் அணிந்துரை இந் நூலின் பெருமையை உயர்த்துகின்றது என்பது என் திடமான நம்பிக்கை. அணிந்துரை அருளிய பெரியாருக்கும் என் இதயம் நிறைந்த நன்றி என்றும் உரியது.

வைணவ உலகில் திருவரங்கம் ஸ்ரீமத் ஆண்டவன் சுவாமிகளை அறியாதார் இலர். இராமாநுசர் காலத்தில் திருவரங்கத்திலிருந்த பக்தி சூழ்நிலையை இன்று அத் திரு நகரில் நிலவும்படிச் செய்தவர் இவர். குருகூர்ச் சடகோபன் அருளிச் செயல்களின் சாற்றினை நான்மறைகளின் தேனுடன் குழைத்து பக்த கோடிகட்கு அமுத தாரை போல் வழங்கி வரும் ஞானச் செல்வர். நாடு முழுவதும் கால் நடையால் யாத்திரை செய்து சமய ஒளிபரப்பி வரும் சீலர். உபநிடத முனிவர்போல் நமக்கெல்லாம் காட்சி தரும் இப் பெரியார் பொன்னார் திருவடிகளில் இந் நூலை அன்புப் படையலாக்குகின்றேன். அன்னாரது ஆசியால் ஆழ்வார்களின் அருளிச் செயல்களிலும், ஆசாரியர்களின் உரைகளிலும் எனக்குத் தெளிவும் பக்தியும் மேலும் மேலும் பெருகும் என்பது என் திடமான நம்பிக்கை.

இந்த நூலை யான் எழுதிவெளியிடுவதற்கு என்னுள்ளே தோன்றாத் துணையாக நின்று எனக்கு எல்லா நலன் களையும் ஈந்து என்னை இயக்கி நன்னெறிப் படுத்தும் திருவேங்கட முடையானை மனம் மொழி மெய்களால் வாழ்த்தி இறைஞ்சி வணங்குகின்றேன்.

ஏன்றேன் அடிமை; இழிந்தேன் பிறப்பு இடும்பை;
ஆன்றேன் அமரர்க்கு அமராமை; ஆன்றேன்—
கடன்நாடும் மண்நாடும் கைவிட்டு, மேலை
இடம்நாடு காண, இனி.[4] —திருமழிசையாழ்வார்.

திருப்பதி
10-3-1977

**ந. சுப்புரெட்டியார்.**

---

4. நான். திருவந்—95.

# உள்ளுறை

# 1. திருக்கோட்டியூர் எந்தை

'திருக்கோட்டியூர்' என்றாலே வைணவ பரமாசாரியாரான இராமாநுசரின் பெருங்கருணை நினைவிற்கு வரும்; நல்லார் பொல்லார் என்று பாராது எல்லார் மாட்டும் கருணை கொண்டு கோயிலின் மதில்மேலிருந்து கொண்டு 'திருமந்திர தானத்தை'—திருமங்கையாழ்வார் எக்களிப்புடன் பாராட்டும் 'நலந் தரும் சொல்லை'—வாரி வழங்கிய மாமுனி அன்றோ இவர்? இந்தக் கருணைப் பெருஞ் செயலை நினைத்து,

> ''காரேய் கருணை இராமாநுசா!
> இக்கட லிடத்தில்
> ஆரே அறிபவர் நின் அருளின்
> தன்மை?''[1]

என்று திருவரங்கத்து அமுதனார் பாராட்டுகின்றதையும் நாம் அறிவோம். குருவும், சீடரின் செயலையும் தேர்த் தட்டிலிருந்து கொண்டு பலர் காதிலும் விழும்படியாகப் பார்த்தனுக்குக் கீதை அருளிய கருணைக் கடலின் செயலையும் ஒப்பிடுகின்றார். உடனே 'எம்பெருமானாரே!' என்று அழைத்து அவரைக் கட்டித் தழுவுகின்றார். ''பரம வைதிக சித்தாந்தம் என்று பெயர் பெற்றிருந்த வைணவ தரிசனம் இன்று முதல் 'எம்பெருமானார் தரிசனம்' என வழங்குவதாகுக!'' என்று ஆசியும் கூறுகின்றார். இங்ஙனம் 'தான் அறப் பெய்து மாயும் தடமுகில்' என்று வருணிக்கப்பெறும் இராமாநுசரின் செயற்கருஞ்

1. இராமா. நூற்-25

செயலை நினைந்த வண்ணம் திருக்கோட்டியூர் என்ற திவ்விய தேசத்தைச் சேவிக்க எண்ணுகின்றோம்.

தண்ணார் தமிழளிக்கும் தண்பாண்டி நாட்டிலுள்ள பதினெட்டுத் திவ்விய தேசங்களுள் திருக்கோட்டியூரும் ஒன்று. இத் திருப்பதி இராமநாதபுரம் மாவட்டத்தில் திருப்புத்தூர் வட்டத்திலுள்ள ஒரு சிற்றூர். மானா மதுரை-திருச்சி இருப்பூர்திப் பாதையில் 'கல்லல்' என்ற நிலையத்தில் இறங்கி எட்டு மைல் மேற்கு நோக்கிச் சென்று இவ்வூரை அடையலாம்; அல்லது சிவகங்கை யில் இறங்கி பேருந்து மூலம் வடக்கு நோக்கிப் பதினாறு மைல் பயணம் செய்து இவ்வூரைச் சேரலாம். மதுரை திண்டுக்கல், புதுக்கோட்டை, காரைக்குடியிலிருந்து வருபவர்கள் திருப்புத்தூர் வந்து அங்கிருந்து தெற்கு நோக்கிச் சிவகங்கை செல்லும் பேருந்தில் ஏறிச் சென்றும் இவ்வூருக்குப் போகலாம். நாம் காரைக்குடியிலிருந்து பேருந்து மூலம் திருப்புத்தூர் வழியாக இவ்வூருக்குப் பயண மாகின்றோம்.

பேருந்தில் செல்லும் பொழுதே 'திருக்கோட்டியூர்' என்ற பெயரைப் பற்றி நம் மனம் ஆராயத் தொடங்கி விடுகின்றது. முதலில் புராணக் கண் திறக்கின்றது. மணிமுத்தாற்றின் கரையிலுள்ள இந்தத் திருப்பதி முற்காலத்தில் கதம்ப முனிவரின் புண்ணிய ஆசிரம மாக இருந்தது. இரணியன் மூவுலகங்களையும் ஆட்சி செய்து தேவர்களை நைகின்றான். அவனை எப்படி ஒழிப்பது என்று தெரியாது திகைக்கின்றனர் தேவர்கள். கதம்ப முனிவர் உறையும் இத் திருத்தலத்தில் அரக்கன் எவனும் புக முடியாது என்ற சாபமிருந்ததால், மும்மூர்த்திகளும் தேவர்களும் சூழ்ந்து ஆழ்ந்து யோசிக்க இவ்விடத்தைத் தேர்ந்து எடுத்து ஒன்று கூடுகின்றனர். திருமால் நரசிங்க அவதாரம் எடுத்துத் தன் வாளுகிரினால் இரணியனை வதைப்பது என்று முடிவு செய்கின்றனர். தேவர்கள் யாவரும் கோஷ்டியாகக்

(கூட்டமாகச்) சேர்ந்து ஆலோசனை செய்த இட மாதலின் இதனைக் 'கோட்டியூர்' என்று வழங்குகின்றனர். 'திரு' என்ற அடையுடன் இவ்வூர் 'திருக்கோட்டியூர்' என்ற திருநாமம் பெற்று வழங்கலாயிற்று என்பதாக அறிகின்றோம். இக்காரணம்பற்றியே இத்தலத்தில் மும்மூர்த்திகளும் காட்சி அளிக்கின்றனர்.

பெயர்க்காரணம் காண்பதில் நம் யுக்தியும் செயற் படுகின்றது. 'திருக்கோட்டியூர்' என்பதைத் திருக்கு+ ஓட்டி+ஊர் எனப்பிரித்து 'பிறவியில் செய்த வினை களை+நீக்கும் எம்பெருமான்+கோயில் கொண்டுள்ள தலம்' என்று நம் மனம் எண்ணிப் பொருள் காண்கின்றது. மேலும், 'கோட்டம் – கோயில்'; கோயிலையும் விமானத் தையும் கொண்ட ஊர்' என்று பொருள் கொள்ளவும் முயல்கின்றது. இன்னும், 'கோஷ்டி+கூட்டம்; வித்துவான் கள் கூட்டம் நிறைந்திருக்கும் ஊர்' என்றும் பொருள் காணவும் முற்படுகின்றது.

பேருந்தில் வந்து கொண்டிருக்கும்போதே ஊரின் நீர்வளம், நில வளத்தைக் கண்ணுறுகின்றோம். ஊரின் நாற்புறமும் உள்ள எண்ணற்ற பாசனக் கண்மாய்கள் இவ்வளங்கட்குத் துணை செய்கின்றன.

ஊரின் இயற்கைச்சூழல் ஆழ்வார் பாசுரங்களை நினைக்கத் தூண்டுகின்றது. பெரியாழ்வார்,

**"சீதநீர் புடைசூழ்**
**செழுங்கழனியுடைத் திருக்கோட்டியூர்"**[2]

[சீதநீர்-குளிர்ந்தநீர்; புடைசூழ்-சுற்றிலும்
சூழப் பெற்ற; கழனி—வயல்.]

என்றும், திருமங்கையாழ்வார்,

2. பெரியாழ், திரு. 4,4:11

"அணிபொழில்
சேல்கள் பாய்கழனித் திருக்கோட்டியூர்"[3]
[அணிபொழில் - அழகிய சோலைகள்; சேல்கள்-மீன்கள்.]

என்றும் குறிப்பிட்டிருப்பதை எண்ணி மகிழ்கின்றோம். ஆழ்வார்கள் பாசுரங்களில் காட்டப் பெற்றுள்ள இயற்கை வருணனையில் நம் மனம் ஆழங்கால் படத் தொடங்கு கின்றது. திருக்கோட்டியூர் அருகிலுள்ள மணிமுத்தாற்றில் சில நீர்ப்பெருக்குகள் குதிரை தாவுமாப்போலத் தாவி தாவி ஓடுகின்றன.[4] அந்தப் பெருக்குகளில் கொந்தளிக்கின்ற அலைகள் சாமரைக் கற்றை, சந்தனக்கட்டை முதலியவை களை உந்தித் தள்ளி வருகின்றன.[5] ஆறுகள் கால்வாய் களாகப் பிரிந்து கழனிகள் பாயும் நிலையில் காட்சிகளை அற்புதமாக விளக்குவர் பெரியாழ்வார். கால்வாய் நீர்களில் இளமை பொருந்திய வாளை மீன்கள் ஆமைகளின் முதுகின்மேல் குதித்துக்கொண்டும், நன்மலர்களை உழக்கிக் கொண்டும் களிப்புடன் விளையாடுகின்றன என்று காட்டுவர்.[6] செந்தாமரை மலர்களையுடைய வயல்களில் திரள்திரளாகப் பரவியிருக்கின்றன அன்னப் பறவைகள். அவை ஆழ்வாருக்கு எம்பெருமானின் திருச்சங்கின் வெண்மை நிறத்தை நினைவூட்டுகின்றன.[7]

அடுத்து, ஆழ்வார் காட்டும் சோலைக் காட்சியில் நம் மனம் ஈடுபடுகின்றது. சோலைகளில் வண்டுகள் விளை யாடும் முல்லை, மல்லிகை முதலிய மலர்களின் நறு மணத்தை அணவிக்கொண்டு மாருதம் விசுகின்றது என்று காட்டுவர் திருமங்கையாழ்வார்.[8] இளவண்டு கள் மணம் மிக்க செண்பக மலரையும் மல்லிகை மலரையும் தழுவிய வண்ணம் நறுமணமுள்ள தேனில்

3. பெரி. திரு. 9. 10: 10
4. ஷை 9. 10: 1
5. ஷை 9. 10: 3
6. பெரியாழ். திரு. 4.4:5
7. ஷை 4. 4: 4
8. பெரி. திரு. 9. 10 : 2

வாய் வைத்துப் பருகிக் களிக்கும் என்று கூறி மகிழ்வர். சோலைகளிலுள்ள உயர்ந்த பலா மரங்களில் வருக்கைப் பலாப் பழங்களும், மாமரங்களில் தேமாங்கனிகளும், வாழைத்தோட்டங்களில் திரண்ட வாழைப்பழங்களும் நிறைந்து அவற்றின் மணமும் நம் மூக்கைத் துளைப்பது போன்ற உணர்ச்சியைப் பெறுகின்றோம். சோலைகளில் நெருங்கிய கிளைகளில் தங்கியுள்ள குயில்கள் கண்ணபிரானின் சீர்மைகளைப் பாடுவதாக உணர்ந்து மகிழ்கின்றோம்.[9] இங்ஙனம் இயற்கைக் காட்சிகளில் மனம் ஈடுபட்டுள்ள போது நாம் ஏறியிருக்கும் பேருந்து கோயிலுக்கு அருகில் வந்து நிற்கின்றது.

ஊரினுள்ளும் நறுமணத்திற்குக் குறைவில்லை மலை முல்லைப் பூக்களின் நறுமணத்தையும், சமநிலத்திலுள்ள கொடி மல்லிகையின் இனிய மணத்தையும் முகந்து கொண்டு வரும் தென்றல் ஊரிலுள்ள வீதிகளிலும் 'கம்' என்று மணத்தைப் பரப்பி நிற்கின்றது.[10] இங்ஙனமே சீரும் சிறப்பும் மிக்க, செந்நெலார் வயலும் வண்ணமாடங்களும் சூழ்ந்த திருக்கோட்டியூரின் மீது நம் கண் வட்டத்தைச் செலுத்துகின்றோம். இப்பொழுது உள்ள ஊர் மிகவும் சிறிய ஊரே. ஆழ்வார் காலத்து ஊரை நாம் அவர் பாசுரங்கள் மூலம் காண்கின்றோம். புரூரவன் என்னும் அரசன் கங்கை நீராடத் தேரின்மீதேறிச் செல்லுங்கால் கதம்ப முனிவரின் ஆசிரமத்திற்கருகில் அவன் இவர்ந்து வந்த தேர் மேல் செல்ல இயலாதபடி தடுத்து நிறுத்தப்பெற்றது. அரசன் தேரினின்றும் இறங்கிக் கதம்ப முனிவரை வணங்கினான். பின் அவர் விருப்பப்படி இத்தலத்தில் அந்தணர் குடியிருப்பை (அக்கிரகாரம்) உண்டுபண்ணுவதாக வாக்களித்தான். அங்ஙனமே, கங்கைக் கரையிலிருந்த ஆயிரத்து ஐந்நூறு பாகவதர்களை அழைத்துக் கொண்டு வந்து நகர் அமைத்து அவர்களைக் குடியேறச் செய்தான் என்பது புராண வரலாறு.

9. பெரியாழ். திரு. 4. 4 : 9 10. பெரி.திரு. 9. 10 : 7

இங்ஙனம் நிறுவப்பெற்ற ஊரிலுள்ள வீடுகளின் சுவர்களில் நன்னிற மணிகளும் பச்சைக் கற்களும் ஒழுங்குபட இழைக்கப் பெற்றுள்ளதனால் அவை திண்ணைகளில் ஒளி வீசி நின்றனவாம்.[11] இந்த வீடுகளில் வாழும் வைணவர்கள் பயனில் சொல் பாராட்டுவதில்லை; அவர்கள் நாடோறும் வைணவர்கட்கும் அடியார்கட்கும் செல் விருந்தோம்பி வருவிருந்து பார்த்திருக்கும் உத்தம சீலர்கள்; தவறாது நான்மறை யோதிக்கொண்டு காலம் போக்குபவர்கள். இவர்களையும் பெரியாழ்வார்,

> ''நாவகாரியம் சொல்லிலாதவர்
> நாடொறும் விருந் தோம்புவார்
> தேவகாரியம் செய்து வேதம்
> பயின்று வாழ்திருக் கோட்டியூர்''[12]

[நாவகாரியம்—நாவினால் சொல்ல வொண்ணாதவை.]

என்று குறிப்பிடுவர். மேலும், அவர்கள் உடலாலும், பொருளாலும், உயிராலும் பாகவத கைங்கரியத்தை மேற்கொண்டிருப்பவர்கள்; அவர்கள் முகமலர்ச்சிக்காக ஐந்து மாபெரும் வேள்விகளை விடாது மேற்கொள்ளுபவர்கள்[13]. எம்பெருமானுடைய திருக்குணங்களில் ஆழங்கால் பட்டும், அவனுக்கு விழாவெடுத்தும் இரவு பகலென ஓயாது ஆடியும் பாடியும் மகிழ்ந்து பொழுது போக்குபவர்கள்.[14]

உணவுப் பஞ்சமும் விலைவாசி உயர்வும் தலைவிரித்தாடும் இக் கால வணிகர்கள், செல்வர்கள் இவர்களின் நடத்தையை நாம் நன்கு அறிவோம். ஆழ்வார் காலத்துத் திருக்கோட்டியூரில் வாழ்ந்த மக்கள் வற்கட காலத்திலும் பொருள்களை மறைத்திடாது , பிரதிபலனை எதிர்பாராது,

11. பெரியாழ். திரு. 4. 4 : 3
12. ஷை 4. 4 : 1
13. ஷை 4.4 : 5
14. ஷை 4. 4 : 7

அதிதிகட்கு உணவளித்துப் புகழை ஈட்டிக் கொள்பவர்கள். இவர்களை,

> ''காசின் வாய்க்கரம் விற்கிலும்
> கரவாது மாற்றிலி சோறிட்டு
> தேச வார்த்தை படைக்கும்
> வண்கையி னார்கள்''[15]

[காசின் வாய்—ஒரு காசுக்கு; கரம்—ஒரு பிடிநெல்; கரவாது—மறைக்காமல்; மாறுஇலி—பிரதி பயனை எதிர்பாராது; தேச வார்த்தை—புகழ் சொல்; வண்கை—வள்ளண்மை]

என்று பாராட்டிப் பேசி மகிழ்வர் ஆழ்வார். வேறு இடங்களில் இவர்களை ''ஏதமொன்றும் இவாத வண்கையினார்கள்'[16] என்றும், ''செற்றமொன்றும் இலாத கையினார்கள்'[17] என்றும் குறிப்பிடுவதைக் காண்கின்றோம்.

இங்ஙனம் ஊரையும் ஊரிலுள்ள மக்களையும் சிந்தித்த வண்ணம் திருக்கோயிலை நோக்கி வருகின்றோம். கோயிலை நோக்கி நடந்துகொண்டே வருங்கால் நாற்புறமும் நம் கண்ணைச் செலுத்துகின்றோம். கோவிலுக்கு முன்புறம் இருப்பது 'திருப்பாற்கடல்'; அதன் வடகிழக்கில் நடுமண்டபத்துடன் கூடிய தெப்பக்குளம் நம் கண்ணில் படுகின்றது. கோயிலின் மேற்கே ஐயனார் சிவகங்கையும், வடக்கே காவடிக்குளமும் உள்ளன. நெடுந்தூரம் வரை காணக்கூடிய திருக்கோபுரத்துடனும் திரு அட்டாங்க விமானத்துடனும் திருக்கோயில் திகழ்வதைக் காண்கின்றோம். கோயில் பெரிய கோயிலே. இதன் கீழ் மேல் நீளம் 472 அடி; தென்வடல் 270 அடி. கம்பீரமாக நிற்கும் இராசகோபுரத்தின் உயரம் 85 அடி, இதன்

15 பெரியாழ். திரு. 4. 4: 10
16. ஷை 4 4. 6
17. ஷை 4, 4; 2

அடிவாரம் கீழ்மேல் 40 அடி; தென்வடல் 50 அடி; திருவாசல் 10 அடி. கோயிலின் முதன்மையான பகுதி அட்டாங்க விமானமே. இதன் உயரம் 96 அடி. இதன் உச்சியிலுள்ள தங்கக் கலசம் 5 அடி உயரமும் $6\frac{3}{4}$ அடி சுற்றளவும் உள்ளது. தஞ்சைக் கோபுரத்தின் நிழல் எப்போதும் தரையில் விழுவதில்லை என்பதை நாம் அறிவோம். அங்ஙனமே, இந்த விமானத்தின் நிழலும் தரையில் விழுவதில்லை .மூலைக்கு இரண்டாக நான்கு மூலைகளிலும் எட்டு விமானங்கள் அமைந்திருத்தலினால் இஃது அட்டாங்க விமானம் எனப்பெயர் பெற்றது. ஒன்றன் மீது ஒன்றாக மூன்று தளங்களையுடைய இந்த விமானத்தின் மேல்தளத்தில் திசைக்கொன்றாக எட்டுத் திசைகளிலும் எட்டு விமானங்கள் இருப்பதைக் காண்கின்றோம். இரணியவதத்திற்கும் பிறகு கதம்ப முனிவரின் வேண்டுகோளுக்கிணங்க நான்முகன் ஆணையினால் மயனும் விசுவகர்மாவும் இவ்விமானத்தை நிர்மாணம் செய்தனர் என்பது புராண வரலாறு. எட்டு விமானங்களும் திருமந்திரத்தின் எட்டெழுத்துகள் போலவும், விமானத்தின் மூன்று தளங்களும் திருமந்திரத்தின் மூன்று பதங்கள் (ஓம் + நமோ + நாராயணாய) போலவும், மூன்றெழுத்துக்களுடன் கூடிய (ஓம் = அ + உ + ம) பிரணவம் போலவும் அமைந்திருப்பதாக ஐதிகம்.

இராசகோபுரத்தைக் கடந்து முதல் தளத்திற்கு வருகின்றோம். முதல் தளத்தின் முன் மண்டபம் 'திருமாமணி மண்டபம்' என்ற திருநாமமுடையது; கண் கவர் வனப்புடையது. திருக்கோபுர வாயிலைக் கடந்து இந்த மணி மண்டபத்தை அடைந்ததும் முதலில் நமக்குக் காட்சி அளிப்பவர் சரபேசுவரர் கோலத்திலிருக்கும் சிவபெருமான். ஒரு சிறு கோயிலில் எழுந்தருளியிருக்கிறார் இவர். இவர் சுயம்பு மூர்த்தி தாமே முளைத்தெழுந்தவர். இரண்டு துண்டாக வெட்டப்பெற்ற நிலையில் காட்சி தருகின்றார். திருமால் நரசிங்கராக வந்தபோது

சிவபெருமான் சரபேசராக வந்ததாகக் கூறும் புராண வரலாற்றை விளக்குவதாக அமைந்ததே இம்மூர்த்தி போலும். இவரை வலம் வந்த பிறகுதான் கோயிலின் மணி மண்டபத்தில் நுழைகின்றோம். அங்கே நம் கண்முன் சேவை சாதிப்பவர் காளிங்கன்மீது நடனம் புரியும் கண்ணன். இதே மண்டபத்தில் சந்தான கிருட்டிணனும் காட்சி தருகின்றார். இந்த மணிமண்டபத்தின் தென் புறத்தில் நரசிங்க மூர்த்தியின் சந்நிதியும், வடபுறத்தில் இராமபிரான் சந்நிதியும் உள்ளன. நரசிங்கரின் (தெற்காழ் வான்) திருமுன்புதான் திருக்கோட்டியூர் நம்பி இராமா நுசருக்குத் திருமந்திரத்தின் பொருளை உபதேசித்ததாக வரலாறு. அந்த உண்மையை விளக்குவதுபோல் தெற் காழ்வான் சந்நிதிக்கு முன்னால் இராமாநுசரும் திருக் கோட்டியூர் நம்பிகளும் குருசீடர் பாவனையில் எதி ரெதிராக எழுந்தருளியுள்ளனர். இவர்களையெல்லாம் சேவித்துக்கொண்டு முதல் தளத்தில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமான் சந்நிதிக்கு வருகின்றோம.

இங்கு எழுந்தருளியிருக்கும் எம்பெருமான் திருப் பாற்கடல் நாதன்; இவர் சயனத் திருக்கோலத்தில் சேவை சாதிக்கின்றார். இவர் பள்ளி கொண்டிருக்கும் பாற்கடல் வெண்மை நிறமுடையது. அதன்மீது இவருக்குப் படுக்கை யாக இருக்கும் ஐந்துதலைஅநந்தன் தங்க நிறமுடையவன். அரவணையின்மீது அறிதுயில கொண்டிருப்பவர் நீலமணி போன்றவர். இவர் தேவர்களின் நடுவிலிருந்ததால் 'ஸ்தித நாராயணர்' என்ற திருநாமத்தால் வழங்கப் பெறுபவர். அநந்தன்மீது சயனித்திருப்பதால் இவரைப் பெரியாழ்வார் 'உரக மெல்லணையான்'[18] என்று மங்களா சாசனம் செய்கின்றார். இந்தப் பாசுரத்தைக் காண்போம்.

18. வடமொழியில் 'பன்னக மிருது சர்ப்ப சாயி' என வழங்கப் பெறுவர்.

உரக மெல்லணை யான் கையிலுறை
சங்கம்போல் மடஅன்னங்கள்
நிரைகணம்பரந் தேறும்செங்கம
லவயல் திருக்கோட்டியூர்
''நரகநாசனை நாவிற்கொண்டழை
யாதமானிட சாதியர்
பருகுநீரும் உடுக்குங்கூறையும்
பாவம்செய்தன தாம்கொலோ''[19]

[உரகம்—பாம்பு; நிரைகணம் — திரளான கூட்டம்; பரந்து – பரவி; நரகநாசன்—எம்பெருமான்; கூறை — ஆடை]

என்பது பாசுரம். இந்தச் சந்நிதியில் எம்பெருமானைச் சேவிக்கின்றோம். பூதத்தாழ்வாரின் பாசுரம் நம் மனத்தில் குமிழியிடத் தொடங்குகின்றது.

''இன்றா அறிகின்றேன் அல்லேன் இருநிலத்தைச்
சென்றாங் களந்த திருவடியை,—அன்று
கருக்கோட்டி யுள்கிடந்து கைதொழுதேன் கண்டேன்
திருக்கோட்டி எந்தை திறம்.''[20]

[இருநிலம்—அகன்ற நிலம்; ஆங்குசென்று—அங்கங்கே பரவி; அன்று—முன்பு; கருக்கோட்டியுள்—கருப்பத்தில்; திறம்—தன்மை.]

என்ற பாசுரத்தை மிடற்றொலி கொண்டு ஓதி உளங் கரைகின்றோம். 'சென்றாங்...திருவடியை' என்பதற்கு 'அவன் அளக்கிறவிடத்திலே பூமி சென்றதோ? பூமி கிடந்த விடமெல்லாம் தானே சென்று அளத்தானித் தனையன்றோ' என்ற பெரியவாச்சான் பிள்ளையின் உரையினையும் அநுபவிக்கின்றோம். குருக்கத்தி மலரிலே திருவவதரித்த இந்த ஆழ்வாருக்குக் 'கருப்பவாசம்'

19. பெரியாழ்.திரு 4. 4: 4 20. இரண்.திருவந்-87.

இல்லையே; அங்ஙனமிருக்க 'கருக்கோட்டியுள் கிடந்து' என்ற கருத்துதான் யாது? என்ற வினா எழுகின்றது. 'நான் இவ்விருள்தருமா ஞாலத்தில் வந்து தோன்று வதற்கு முன்னமே எம்பெருமானுடைய கருணைக்குப் பாத்திரமானவன்' என்று சொல்ல வேண்டும் என்பதே ஆழ்வாரின் கருத்தாகும் என்க.

அடுத்து, திருமழிசை பிரான் அருளிய பாசுரம் நினைவிற்கு வருகின்றது.

**''குறிப்பெனக்குக் கோட்டியூர் மேயானை ஏத்த**
**குறிப்பெனக்கு நன்மை பயக்க—வெறுப்பனோ**
**வேங்கடத்து மேயானை மெய்வினைநோய் எய்தாமல்**
**தான்கடத்தும் தன்மையான் தான்.''[21]**

[குறிப்பு—ஆசை (முதல்); ஏத்த—துதித்த; குறிப்பு—களிப்பு, மகிழ்ச்சி; வினை—கருமம்; நோய்—வியாதி கடத்தும் - போக்கும்.]

என்ற பாசுரத்தைப் பாடிப் பரவி பக்தி வெள்ளத்தில் ஆழ்கின்றோம்.

இங்ஙனம் மூலவரை வணங்கிய பிறகு உற்சவர்—திருவிழா நாயகர்—சௌமிய நாராயணன்மீதும் நம் கவனம் செல்லுகின்றது. இவருக்கு 'மாதவன்' என்ற திருநாமமும் உண்டு திருமங்கையாழ்வார் இவரை 'திருமாமகட்கு இனியான்'[22] 'குலமாமகட்கு இனியான்'[23] 'நிலமாமகட்கு இனியான்'[24] என்றும், 'வெள்ளியான் கரியான் மணிநிற வண்ணன்'[25] என்றும் மங்களாசாசனம் செய்துள்ளார். எம்பெருமான்

21. நான். திருவந்-34
22. பெரி. திரு. 9. 10:21. திருமாமகள்-பெரியபிராட்டியார்.
23. ஷை 9. 10:4 குலமாமகள்-நப்பின்னைப்பிராட்டியார்.
24. ஷை 9. 10:7 நிலமாமகள்-பூமிப் பிராட்டியார்.
25. ஷை 9. 10: 3.

ஒவ்வொரு யுகத்திலும் ஒவ்வொரு நிறத்தை மேற் கொள்வன் என்பது சாத்திரப் பிரமாணம். அவன் கிருத யுகத்தில் உள்ளவர்கள் சத்துவ குணம் நிறைந்தவர் களாகவும் தூய்மையான நிறத்தை உகக்குமவர்களாக வும் இருப்பதால் அவர்கட்காகப் பால்போன்ற வெண் ணிறத்தைக் கொள்வன் எம்பெருமான்; அந்நிறமே 'வெள்ளியான்' என்று அநுசந்திக்கப் பெற்றது. கலி யுகத்தில் எந்தநிறங் கொண்டாலும் ஈடுபடுவாரின்மை யால் இயற்கையான கரிய நிறத்தைக் கொள்வன்; அந்த நிறமே '**கரியான்**' எனப்பட்டது. துவாபரயுகத்தில் எம்பெருமான் பசுமை நிறம் கொள்வானாகையால் அந்த நிறத்தை '**மணிநிறவண்ணன்**' என்று அநுசந்தித்தார் ஆழ்வார். இங்ஙனம் நாம் சிந்தித்த நிலையில் நம் கவனம் திருமஞ்சனமூர்த்தியின்மீது (தீர்த்தபேரர்) செல்லு கின்றது. இவரையே திருமங்கையாழ்வார் '**தேவதேவ பிரான்**'[26] என்று பாடியுள்ளார். நித்திய உற்சவரை நம் கண் தேடுகின்றது. இவரைப் பெரியாழ்வார் '**குளிர்ந்துறை கின்ற கோவிந்தன்**'[27] என்று மங்களாசாசனம் செய்துள் ளார். **நரகநாசன்**[28] என்று இந்த ஆழ்வாரால் மங்களா சாசனம் செய்யப்பெற்றவரே பலிபேரர் (வேள்வி மூர்த்தி). இவர்களையெல்லாம் தனித்தனியே சேவிக்கின்றோம். இந்தப் பஞ்ச பேரருடன் காளிங்க நடனம் புரியும் கண்ண னும், ஊஞ்சலில் சந்தானகிருட்டிணனும் எழுந்தருளி யுள்ளனர். இங்குத் தெற்குப்புறத்தில் கதம்ப முனிவரும், மேற்கே நான்முகனும் வெள்ளைத்தாமரை நாயகியும், தேவர்களும், வடக்கே மதுகைடவர்களும் தேவேந்திரனும் பூரூர்வ சக்கரவர்த்தியும் இருப்பதைக் காண்கின்றோம். கதம்பமுனிவர் 'உரகமெல்லணையானை' வழிபட்டு வருங்கால் இந்திரன், 'வெள்ளியான் கரியான்' என்று வழங்கப்பெறும் உற்சவரின் திருமேனியை மூன்று

26. பெரியாழ். திரு. 9. 10 : 9.
27. ஷை 4. 4 : 8. 28. ஷை 4. 4: 4

பிராட்டிமார் திருமேனிகளுடன் தேவலோகத்தினின்றும் கொணர்ந்து எழுந்தருளப் பண்ணி மாமுனிவரிடம் அளித்ததாகப் புராணவரலாறு. இந்தச் சந்நிதியில் தீர்த்தம் திருத்துழாய் பெற்றுச் சடகோபம் சாதிக்கப் பெற்றதும் தாயார் சந்நிதிக்குப் போகச் சித்தமாகின்றோம்.

விமானத்திற்குத் தெற்கிலிருப்பது தாயார் சந்நிதி; திருமாமகள் நாச்சியார் என்ற திருநாமமுடைய இவரையும் வடபுறத்தில் தனிக் கோயில் கொண்டுள்ள ஆண்டாளையும் சேவித்து நடுத்தளத்திற்குச் செல்லுகின்றோம்.

நடுத்தளத்தில் இருப்பவர் 'நின்ற நாராயணன்'; இவர் பெரிய பிராட்டியாருடனும் பூமிப்பிராட்டியாருடனும் சேவை சாதிக்கின்றார். இப்பெருமான் 'நின்ற நம்பி' என்றும் 'உபேந்திரன்' என்றும் திருநாமம் பெற்றிருப்பவர். இந்தத் தளம்இந்திரலோகம் இங்கு ஏழுமுனிவர்களும் தேவர்களும் ஓவியங்களில் தீட்டப்பெற்றுள்ளனர். இந்த எம்பெருமான் திருவருளைப் பெற்று வெளியில் வருகின்றோம். இந்தத் தளம் உட்சுற்று, வெளிச்சுற்றுகளுடனும் நான்கு புற வாயிலோடும் விளங்குவதைக் காண்கின்றோம். அன்றியும், இங்கு மூலைக்கு இரண்டாக உள்ள எட்டு விமானங்களின் உட்கூட்டையும் பார்க்கின்றோம்.

அடுத்து, மேல்தளத்திற்கு வருகின்றோம். இது 'பரமபதம' என்ற திருநாமம் பெறும். இங்கு, பெரிய பிராட்டியார் பூமிப்பிராட்டியார் இருபுறமும் இருக்கும் நிலையில் பரமபதநாதன் வீற்றிருக்கும் திருக்கோலத்தில் எழுந்தருளியிருக்கின்றார். மூன்றுபுறச் சுவர்களிலும் நித்திய சூரிகள், முக்தர்கள், ஆழ்வார்கள், தேவர்கள், முனிவர்கள், திருப்பாற்கடல், மணிமுத்தா நதி, பத்து அவதாரங்கள் இவற்றின் ஓவியங்கள் வரையப் பெற்றுள்ளன. இத்தளத்தின் முன்வாசலில் இத்தலத்தில் உடல்

நீப்பவரின் ஆன்மா முக்தியடையும் நிலைகள் விரிவாக ஓவியங்களால் விளக்கப்பெற்றுள்ளன. இவற்றையெல்லாம் கண்டு களித்த வண்ணம் எம்பெருமானைச் சேவித்துத் திரும்புகின்றோம்.

பரமபத வாயிலின் வெளிச்சுற்றில் வடபுறத்தில் நரசிங்கமூர்த்தி இரணியனுடன் போரிடும் கோலமும், போரிட்டுக் கொல்லும் கோலமும் ஆக இரண்டு கோர உருவங்கள் உள்ளன. அவை கண்டவர் நெஞ்சம் திடுக்கிடச் செய்யும் தன்மையன. இவற்றில் முற்காலத்தில் போரிடும் மூர்த்தி முதல் தளத்திலுள்ள நரசிம்மன் சந்நிதியிலும், சங்காரமூர்த்தி இராமபிரான் சந்நிதியிலும் வைக்கப்பெற்றிருந்தன என்றும், அவற்றின் பயங்கர உருவங்களைக் கண்டு மக்கள் அஞ்சவே அவை ஈண்டுக் கொணர்ந்து வைக்கப் பெற்றுள்ளன என்றும் அறிகின்றோம். இவற்றையெல்லாம் பார்த்துக் கொண்டு திரும்புகின்றோம்.

இத்தலத்து எம்பெருமானைப் பெரியாழ்வார்[29] திருமங்கையாழ்வார்[30], பூதத்தாழ்வார்[31], பேயாழ்வார்[32], திருமழிசைபிரான்[33] என்ற ஐந்து ஆழ்வார்கள் மங்களாசாசனம் செய்துள்ளனர்.

இறுதியாக உரகமெல்லணையானை வணங்கி விடை பெறுங்கால் திவ்விய கவியின் பாடல் நம் சிந்தையில் எழுகின்றது.

---

29. பெரியாழ். திரு. 1. 1; 2. 6: 2; 4. 4.
30. பெரி. திரு. 7. 1: 3; 9. 10;30 1: 9
31. இரண். திருவந். 46, 87.
32. மூன். திருவந். 62.
33. நான். திருவந் 34,

''வான்பார்க்கும் பைங்கூழ்போல் வாளா வுனதருளே
யான்பார்க்க நீபார்த்து இரங்கினாய்—தேன்பார்ப்பின்
ஓசைத் திருக்கோட்டி ஊரானே இன்னமும்என்
ஆசைத் திருக்கோட்டி ஆள்.''[34]

[பைங்கூழ்—பசிய பயிர்; வாளா—எப்போதும்; ஆசை திருக்கு— உலகப்பற்றாகிய மாறுபாடு; ஓட்டி—போக்கி; ஆள்—ஆட்கொள்வாய்]

என்ற பாசுரத்தைமிடற்றொலி கொண்டு சேவித்து எம்பெரு மானிடம் பிரியாவிடை பெறுகின்றோம்.

இறுதியாகக் கோயிலின் முன்புறவாயிலினுள் இருக்கும் ஏகாதசிக் கொட்டகையில் வந்து அமர்கின்றோம் அண்மைக் காலத்தில் பக்திச்செல்வர் திரு வயி. கரு. சௌமிய மூர்த்தி தொண்டைமான் (இலங்கை நாடாளு மன்ற உறுப்பினர்) என்ற அன்பரால் ரூ. 10000-செலவில் அட்டாங்க விமானம் பழுது பார்த்துப் புதுப்பித்து வண்ணம் தீட்டப்பெற்றதையும், ரூ. 10000 செலவில் கோயில் முழுவதும் மின் விளக்குகள் போடப்பெற்றதையும் அறிந்து மகிழ்கின்றோம். அண்மையிலேயே ஏகாதசிக் கொட்டகையும் திறம்படக் கட்டப்பெற்றுள்ளது. இக் கொட்டகைக்குத் தென்புறம் திருக்கோட்டியூர் நம்பிகட்கும் அவர் மாணவர் இராமாநுசருக்கும் தனித்தனிக் கோயில்கள் இருப்பதையும் காண்கின்றோம்.

**வேறு செய்திகள்:** இக்கோயில் ஆட்சியை வழி வழியாகத் தெய்வபக்தியில் சிறந்து விளங்கும் சிவ கங்கை மன்னர்கள் மேற்கொண்டுவருகின்றனர். அவர் களே வழிவழிவரும் அறநிலையப் பாதுகாப்பாளர்கள். மெய்யன்பர்கள் பலரால் ஏற்று நடத்தப்பெறும் திருப்பணி களும், கட்டளைகளும், விழாக்களும் உள்ளன. நாடோறும்

34. நூற். திருப். அந். 42

ஆறுகால பூசை நடைபெறுகின்றது. கோயிலுக்கென மானிய நிலங்களும் இதர சொத்துகளும் உள்ளன.

சங்க நூலாகிய நற்றிணையில் 21-ஆம் பாடலைப் பாடிய புலவர் **கோட்டியூர் நல்லாந்தையார்** என்பவர் இவ்வூரைச் சார்ந்தவரே என்று ஆய்வாளர்கள் கருதுகின்றனர். இத்தலத்தில் வடமொழி தென்மொழிப் புலவர்கள் பலர் வாழ்ந்ததாக அறிகின்றோம். **கவிஞர் சுப்பராயர்** என்ற மாத்துவ அந்தணர் 'திருக்கோட்டியூர் பிள்ளைத் தமிழ்' என்ற நூலையும், பெருங் கருணை சதாவதானம் **முத்தழகர் அய்யங்கார்** என்ற புலவர் 'திருக்கோட்டியூர்க் கலம்பகம்' என்ற நூலையும் இயற்றியுள்ளதாக அறிகின்றோம். மேலும் பராசரபட்டர் ஆண்டாள்மீது அருளியுள்ள 'நீளாதுங்க'[35] என்று தொடங்கும் வடமொழிச்சுலோகம் இவ்வூரில் இயற்றப்பெற்றதாகவும் அறிகின்றோம். இந்த அறிஞர் சௌமிய நாராயணன்மீது **'கோஷ்டீஸ்தவம்'** என்ற வடமொழி நூலையும் இயற்றியுள்ளார் என்றும் தெரிந்து கொள்ளுகின்றோம்.

பல பெரியோர்கள் இவ்வூருடன் தொடர்பு கொண்டிருந்ததாக அறியக் கிடக்கின்றது. பெரியாழ்வார் வாழ்வுடன் இத்திவ்விய தேசம் நெருங்கிய தொடர்புடையது. ஸ்ரீ வல்லபனது புரோகிதராகவும் பரமபாகவதராகவும் இருந்த செல்வநம்பி அத்திவ்விய தேசத்தைச் சேர்ந்தவர்.

**''அல்வழக்கு ஒன்றும்இல்லா**
**அணிகோட்டியர்கோன் அபிமானதுங்கன்**
**செல்வனைப்போலே திருமாலேநானும்**
**உனக்குப் பழஅடியேன்''**[36]

---

35. திருப்பாவை தனியனாகத் திகழ்வது இதுவே.
36. திருப்பல். 10

[அல்வழக்கு—அநியாயங்கள்; அணி—அழகிய கோட்டியர்கோன்—கோட்டியூர் மக்கள் தலைவன்; அபிமானதுங்கன்—அபிமானத்தில் சிறந்தவன்; செல்வன்—செல்வநம்பி.]

என்ற திருப்பல்லாண்டுப் பாசுரப்பகுதி இதனை வலியுறுத்துகின்றது. பெரியாழ்வாரும் செல்வநம்பியும் ஒரு ஸ்ரீஜயந்தி நாளன்று செளமிய நாராயணமூர்த்தியைச் சேவித்துக் கொண்டிருந்தபொழுது அந்தத் திருமேனி கண்ணன் பிறந்த அவதார காலத்தையே நினைவுறுத்தி முதலாவது ஸ்ரீஜயந்தியையே கொண்டாடத் தூண்டி விட்டது. அத்திருக்கோயில் நந்தகோபன்மாளிகையாகவும், திருக்கோட்டியூர் கோகுலம் என்ற ஆயர்பாடியாகவும் மாறிவிட்டன. அந்த அநுபவம்,

> "வண்ண மாடங்கள் சூழ்திருக் கோட்டியூர்
> கண்ணன் கேசவன் நம்பி பிறந்தினில்
> எண்ணெய் சுண்ணம் எதிரெதிர் தூவிடக்
> கண்ணன் முற்றம் கலந்தளறு ஆயிற்றே."[37]

என்ற தொடக்கமான பல பாசுரங்களாகப் பரிணமித்த வரலாற்றை நாம் அறிவோம். இத்திவ்விய தேசத்து வைணவ அடியார்களையும் நினைந்து பெரியாழ்வார் பாடியுள்ளார், 'பிள்ளைத் தமிழ்' என்ற பிற்கால இலக்கியத்தின் வித்து முதன்முதலில் இல்வூரிலேயே இடப்பெற்றது என்ற உண்மையையும் அறிகின்றோம்.

இராமாநுசர் திருமந்திரத்தின் பொருளைத் திருக்கோட்டியூர் நம்பியிடமிருந்து அறிந்தது இந்த ஊரிலேயே என்பதை முன்னரே குறிப்பிட்டுள்ளோம். மூன்றாவது மந்திரமாகிய சரமசுலோகத்தையும் அதன் உட்பொருளையும் சின்னாட்கழித்து இராமாநுசருக்கு எடுத்துரைத்தார்

37. பெரியாழ். திரு. 1.1:1

நம்பிகள். வைணவர்கட்குக் கண்ணனைய இரண்டு மந்திரங்களையும் உபதேசம் செய்து இராமாநுசருக்கு ஆசாரியார் ஆனார்.

திருக்கோட்டியூரில்அக்காலத்தில் வாழ்ந்தஅடியார்களுள் தலைசிறந்து தொண்டருள் தொண்டராக விளங்கியவர் செல்வநம்பி என்ற பெரியார். உரக மெல்லணையானுக்கு இவர் மிக அணுக்கராயிருந்து அந்தரங்கக் கைங்கரியம் புரிந்து வந்தார் என்று அறிகின்றோம். பலனைக் கருதாது பணிபுரிவது இவருடைய சிறப்பு. திருக்கோட்டியூர் செங்கண்மால் தானே இவரைச் சேவகங் கொண்டாராம். செல்வநம்பியின் வாழ்க்கைத் துணைவியான நங்கையார் கணவனின் கருத்தறிந்து ஒழுகும் கற்புமிக்க உத்தமி. எட்டாம்பத்து பத்தாம் திருவாய்மொழியை ஓதுபவர்கள்,

"நல்ல பதத்தால் மனைவாழ்பவர்
கொண்ட பெண்டிர் மக்களே."[38]

என்று பலனைக் கூறுவர் நம்மாழ்வார். இவ்விடத்தில் ஈட்டில் குறிப்பிடப்பெறும் இதிகாசம் இந்த உத்தமியைப் பற்றியதாகும். திருவனந்தபுரத்திற்குப் பெருந் திரளாகச் சென்று கொண்டிருந்த பாகவதர்கள் வழியில் திருக்கோட்டியூரில் செல்வநம்பியின் இல்லத்தில் சென்று சேர, அப்போது கணவர் வெளியே சென்றிருந்தாராம். விருந்தோம்பலில் தலைசிறந்தவர் நம்பி; அதற்கு உறுதுணையாக இருந்தவர் நங்கையார். களஞ்சியத்தில் வித்திடக் கட்டி வைத்திருந்த நூறுகோட்டை நெல்லையும் குத்தி அரிசியாக்கி வருந்தியழைத்தாலும் வரமாட்டாத பாகவதர்கள் தாமாகவே வந்தார்கள் என்ற மகிழ்ச்சிப் பெருக்கால் அவர்கட்கு அமுது செய்து படைத்தார். மறுநாள் கணவர் வந்து பார்க்க, விதை நெல் காணாது நங்கையாரை நோக்கி 'நங்காய், நாளை வித்திட வைத்திருந்த நெற்

38. திருவாய் 8. 10 : 11

கோட்டைகள் எங்கே?' என்று வினவ, நங்கையாரும், 'சுவாமி, அவற்றைப் பரமபதத்தில் விளைவதாக வித்தினேன்', என்று பதிலுரைத்து வணங்கினாராம்.

இத்திருக்கோயிலில் பல கல்வெட்டுக்கள் காணப் பெறுகின்றன. இவற்றால் இத்திருக்கோயிலுக்கு நிவந்தமாக அளிக்கப் பெற்ற பல செய்திகளை அறிகின்றோம். இக் கல்வெட்டுகளினால் இக்கோயில் கி.பி. பத்தாம் நூற்றாண்டிலேயே புகழ்மிக்கோங்கி இருந்தது என்பதையும் அறிகின்றோம். இன்னோரன்ன பல செய்திகளை அறிந்த நிலையில் மனநிறைவுடன் காரைக்குடிக்குத் திரும்புகின்றோம்.

# 2. திருமெய்யத்து இன்னமுதம்

ஸ்ரீவசன பூசணத்தில் ஒரு சூத்திரம் நம் மனத்தில் எழுகின்றது.

> "பூகதஜலம் போலே அந்தர் யாமித்வம்; ஆவரண ஜலம் போலே பரத்வம்; பாற்கடல் போலே வ்யூகம், பெருக்காறு போலே விபவம்; அதிலே தேங்கின மடுக்கள் போலே அச்சாவதாரம்."*

[பூகதம்—பூமிக்குள் இருப்பது; ஆவரணம்—மூடிக் கொண்டிருப்பது; மடுக்கள்—சிறு நீர் நிலைகள்.]

என்ற சூத்திரம் எம்பெருமானின் ஐந்து நிலைகளையும் விளக்குவது. இது பரத்துவம், வியூகம், விபவம், அந்தர் யாமித்துவம் என்ற நான்கு நிலைகளின் அருமையையும் அர்ச்சையின் எளிமையையும் எடுத்துக்காட்டுகளால் விளக்குகின்றது.

தண்ணீர் வேட்கை உண்டானவனுக்குத் தான் இருக்கின்ற இடத்தில் பூமிக்கு அடியில் நீர் இருந்தாலும் கொட்டும் குந்தாலியும் கொண்டு கல்லினால் அன்றி பருக நீர் அகப்படாது கண்டு பற்றவேண்டும் என்று ஆசைப்பட்டாருக்கு எம்பெருமான் அவர் மனத்தில் எழுந்தருளியிருந்தாலும், 'கட்கிலீ! உன்னைக் காணுமாறு அருளாய்'[1] என்று பராங்குச நாயகி கூறுகின்றபடி நமது கண்களால் காணமுடியாதபடி அட்டாங்க யோக முயற்சி

---

* ஸ்ரீ வச பூஷ—சூத்திரம் 42 (புருடோத்தம நாயுடு பதிப்பு)

1. திருவாய் 7. 2 : 3

யால் காணவேண்டும்படியாக இருப்பது அந்தர்யாமித்துவம் என்ற இறைவனின் நிலை.

ஆவரணஜலம் இந்த அண்டத்திற்குமேல் மூடிக் கொண்டிருப்பதாகக் கருதுவது புராணம். தாகவிடாய் கொண்டவனுக்கு இந்த நீரும் பயன்படாது. கண்டு பற்ற வேண்டும் என்று ஆசைப்படுவாருக்கு எம்பெருமான்,

**''மூவுலகும் கடந்தப்பால் முதலாய் நின்ற**
**அளப்பரிய ஆரமுது''[2]**

என்று திருமங்கை மன்னன் கூறுகின்றபடி இந்த லீலா விபூதிக்கு அப்பாற்பட்டிருப்பவன் பரத்துவ நிலை எம்பெருமான்.

நெடுந்தூரம் என்று சொல்லவொண்ணாதபடி இந்த உலகத்திற்குள்ளே பாற்கடல் இருப்பினும்,

**''பாலாழி நீ கிடக்கும்**
**பண்பையாம் கேட்டேயும்.''[3]**
[ஆழி—கடல்]

என்று நம்மாழ்வார் கூறுகின்றபடி அது நம்மால் பலர் சொல்லக் கேட்டிருக்கும் நிலையேயன்றி சென்று காண அரிதாயிருப்பவன் வியூகநிலை இறைவன். தண்ணீர் வேட்கைக் கொண்டவனுக்கு அவன் சென்று அடைய முடியாத பாற்கடல் போலிருப்பவன் அவன்.

புயலால் பெருமழை பெய்து ஆறுகளில் நீர்ப் பெருக்கு ஏற்பட்டாலும் அந்த வெள்ளம் ஓடிய காலத் திருப்பவர்கட்கு மட்டிலுமே பயன்படுவது அந்த ஆற்று நீர். அங்ஙனமே எம்பெருமான்,

**''மண்மீது உழல்வாய்.''**

2. திருநெடுந். 14. 3. பெரிய. திருவந். 34.

என்று நம்மாழ்வார் கூறுவதுபோல் பூமியில் அவதாரம் செய்து பல இடங்களில் சஞ்சரித்தாலும் அவன் அக்காலத்தில் இருந்தவர்கட்குமட்டுமே அடையத்தக்கவனாக இருந்து பின்னானாருக்குக் கிட்டாத நிலையிலிருப்பவன் விபவநிலை எம்பெருமான்.

'சௌலப்பியத்திற்கு எல்லை நிலம் அர்ச்சாவதாரம்'[5] என்று முமுட்சுப்படி குறிப்பிடுவதுபோல் எல்லோரும் கிட்டுவதற்கு எளிதாயிருக்கும் இருப்பே எம்பெருமானின் அர்ச்சாவதார நிலை. இங்கு, கண்ணுக்குப் பொருளாக இருக்கும் எம்பெருமான் எல்லோரும் தம் ஊனக் கண்களாலே கண்டு பற்றுவதற்கேற்ப எளியனாயிருக்கின்றான். 'தமருகந்தது எவ்வுருவம் அவ்வுருவம் தானே'[6] என்று பொய்கையாழ்வார் அருளிச் செய்திருப்பதும் எம்பெருமானின் இந்நிலையையே. இந்நிலை எம்பெருமான் கண்டு பற்றவேண்டும் என்று ஆசைப்படும் நம் மனோர்க்குக் காண்பதற்குத் தேசத்தாலும் காலத்தாலும் கரணத்தாலும் சேயதன்றிக்கே, திருக்கோயில்களிலும் திருமாளிகைகளிலும் என்றும் தக்க நம் கண்ணுக்கு இலக்காம்படி 'பின்னானார் வணங்கும் சோதியாக'[7] எழுந்தருளியிருப்பதால் இந்நிலைகளை நினைந்து இந்நிலை எம்பெருமானை 'மடுக்கள் போலே' என்று பன்மையால் அருளிச் செய்யப்பெற்றுள்ளது. அவதாரங்களின் குணங்கள் எல்லாம் அர்ச்சையினிடத்தில் குறைவற்று நிறைந்திருக்கையாலும் அவதாரங்களின் திருமேனிகளை அர்ச்சைவடிவமாகப் பல இடங்களில் எழுந்தருளச் செய்யப்பெற்றிருப்பதாலும் "அதிலே தேங்கின மடுக்கள் போலே" என்று கூறப் பெற்றுள்ளமை எண்ணி உணரத்தக்கது.

இந்த எண்ணங்கள் நம் சிந்தையில் எழுந்த வண்ணம் காரைக்குடியிலிருந்து திருமெய்யத்திற்குப் போகச் சித்த

4. திருவாய் 6. 9 : 5 5. முமுட்சுப்படி—139
6. முதல் திருவந். 44 7. திருநெடுந். 10

மாகின்றோம். 'புதுக்கோட்டை' என்ற பெயர்ப்பலகை தாங்கியுள்ள பேருந்தில் ஏறுகின்றோம். பேருந்தில் வருங்கால்,

**"உலகம் ஏத்தும்**
**கண்டியூர் அரங்கம் மெய்யம்**
**கச்சிபேர் மல்லை என்று**
**மண்டினார் உய்யல் அல்லால்**
**மற்றையோர்க் குய்ய லாமே?"[8]**

*[நத்தும் — துதிக்கும், மண்டினார் — மூழ்கினார்; உய்யலாமே—உய்யவழி உண்டோ]*

என்ற திருமங்கையாழ்வாரின் திருக்குறுந்தாண்டகப் பாசுரப்பகுதி நம் சிந்தையில் எழுகின்றது. எம்பெருமான் உகந்தருளின் திவ்விய தேசங்களிலெங்கும் 'பதியே பரவித் தொழும் தொண்டர்' என்னும்படியாக மூழ்கியிருப்பவர்கள் உய்ய வழி உண்டேயல்லது அப்படித் தொழாதவர்கட்கு ஒரு நாளும் உய்ய வழி இல்லை என்ற ஆழ்வார் கருத்தினை எண்ணியவண்ணம் திருமெய்யத்தை நோக்கி வந்து கொண்டிருக்கின்றோம்.

'திருமெய்யம்' திருச்சிராப்பள்ளிக்குத் தெற்கில் 45 கல் தொலைவிலும் புதுக்கோட்டைக்குத் தெற்கே பதின் மூன்று கல் தொலைவிலும் உள்ளது. இஃது ஒரு வட்டத்தின் (தாலுகா) தலைநகர். திருமெய்யம் இன்று 'திருமயம்' என்று வழங்கி வருகின்றது. 'திருமெய்யம்' என்ற சொல் 'திருமய்யம்' எனத் திரிந்து 'திருமயம்' என்று குறுகியதுபோலும். திருச்சியிலிருந்து பேருந்து மூலம் வருகின்றவர்கள் புதுக்கோட்டை வழியாக வரவேண்டும்; இப்படி வருகின்றவர்கள் இருப்பூர்தியில்வரின் திருச்சி—மானாமதுரை இருப்பூர்திப் பாதையில்

8. திருக்குறுந்—19

'திருமயம்' என்ற நிலையத்தில் இறங்கி இவ்வூரை அடைய வேண்டும். இவர்கள் நிலையத்தில் இறங்கி நான்கு பர்லாங்கு குளக்கரை வழியாக நடந்தால் ஊர் வந்து சேரலாம். நாம் ஏறிவரும் பேருந்து ஒரு மணி நேரத்தில் திருமெய்யம் பேருந்து நிலையத்தை அடை கின்றது. சிறிது தூரம் நடந்து ஊருக்குள் நுழைந்ததும் நம் கண்முன் தட்டுப்படுவது ஒரு சிறிய குன்றும் அதன்மீது உள்ள கோட்டையுமே. இந்தக்கோட்டை யை 'ஊமையன் கோட்டை' என்று வழங்குகின்றனர். முற்காலத்தில் ஊரைச்சுற்றிலும் ஒரு கோட்டை இருந் திருக்கவேண்டும். திருச்சியிலிருந்து வருங்கால ஊர்ப் பக்கத்திலுள்ள இடிந்த கோட்டைச் சுவரும் ஏனையச் சின்னங்களும் இதனை உறுதிசெய்யும். பாஞ்சாலங் குறிச்சி வீரர்களான கட்டபொம்மனும் ஊமைத்துரை யும் தொடர்பு கொண்டிருத்தல் வேண்டும் என்று ஊகம் செய்கின்றோம்.

குன்றின்மீது ஏறுவது மிகவும் எளிது. மலையின் மீதுள்ள கோட்டை வாயில் எப்பொழுதும் பூட்டியே வைக்கப்பெற்றிருக்கும் என்பதை ஊர் மக்கள் சொல்லக் கேட்கின்றோம். ஆகவே, அங்குள்ள காவற்காரனைத் தேடிப்பிடித்துக் கதவைத் திறக்கச் சொல்லி மலையில் ஏறுகின்றோம். அங்குள்ள மேட்டில் பழையகால பீரங்கி ஒன்று வைக்கப் பெற்றிருப்பதைக் காண்கின் றோம். அதன் பக்கத்தில் ஏறி நின்று ஊரைச் சுற்றி நாற்புறமும் உள்ள காட்சிகளைக் கண்டு களிக்கின்றோம். வடபுறத்திலுள்ள ஏரி குளம் பச்சைப்பட்டு விரித்தாற் போன்ற நெல்வயல் இவை மனத்திற்குக் குளிர்ச்சியை நல்குகின்றன. இவற்றைத் தவிர மலைக்கோட்டையில் பார்க்கவேண்டியவை ஒன்றும் இல்லை.

மலையினின்றும் இறங்கி ஊரைச் சுற்றிக் கொண்டு திருக்கோயிலுக்கு வருகின்றோம். 'பெருமாள் கோவில்'

என்று கேட்டுக்கொண்டு வருதல் வேண்டும். கோயிலுக்குக் கிழக்குப் பக்கத்தில் 'சத்தியதீர்த்தம்' என்ற ஒரு சிறு குளம் இருப்பதைக் காண்கின்றோம். திருக்கோயில் பெரும் புகழ் பெற்றது. திரு அரங்கத்திற்கு அடுத்தபடியாகச் சிறப்புடையது என்பது வைணவ பெருமக்களின் கருத்து. அவர்கள் இதனை 'ஆதி ரங்கம்' என்றே வழங்குகின்றனர். திருக்கோயிலைக் கம்பீரமான ஓர் அழகிய இராசகோபுரம் அணி செய்கின்றது. திருக்கோயிலின் தெற்குப் புறத்திலிருக்கின்ற இராசகோபுர வாயிலைக்கடந்து சென்று ஒரு பெரிய மண்டபத்தை அடைகின்றோம். மண்டபத்தின் தூண்களில் நல்ல சிற்ப வடிவங்கள் காட்சி அளிக்கின்றன. இந்த மண்டபத்தில் ஆண்டாள், கண்ணன், சக்கரத்தாழ்வார் ஆகியோரின் சந்நிதிகள் உள்ளன. வலப்புறத்தில் நரசிம்மருக்கு ஒரு சந்நிதி உள்ளது. இவர்களையெல்லாம் வணங்கிக் கொண்டே அர்த்த மண்டபத்தை அடைகின்றோம். இந்த மண்டபத்தையும் கடந்துதான் மகாமண்டபத்தை அடைகின்றோம்.

மகாமண்டபத்தில் எம்பெருமான் சந்நிதியை நோக்கிய வண்ணம் பெரிய திருவடி காட்சி தருகின்றார். இந்த மண்டபத்தை அடுத்திருப்பது சுந்தர பாண்டியன் குறடு. இதன் வழியாகத்தான் எம்பெருமானின் சந்நிதியை அடைதல் வேண்டும். இந்தச் சந்நிதி மலைச் சரிவையொட்டி உள்ளது. சந்நிதியின் தூண்களில் பூப்போதிகைகள், தாமரை மொட்டுகள் கண்கவர் வனப்புடன் செதுக்கப் பெற்றிருப்பதைக் கண்டு களித்தவண்ணம் எம்பெருமானின் கருவறைக்கு வருகின்றோம் நின்ற திருக்கோலத்தில் கிழக்கே திருமுக மண்டலங்கொண்டு சேவை சாதிக்கும் **சத்தியகிரி நாதனைக்** கண்டு வணங்குகின்றோம்.

**''மையார் கடலும்**
**மணிவரையும் மாமுகிலும்**

கொய்யார் குவளையும்
காயாவும் போன்றிருண்ட
மெய்யானை மெய்ய
மலையானைச் சங்கேந்தும்
கையானைக் கைதொழாக்
கையல்ல கண்டோமே''[9]

[மைஆர்-கறுத்த; வரை-மலை; முகில்-மேகம்; கொய் ஆர்-பறிக்கும் விருப்பத்தை தரும்; இருண்ட-கறுத்த; மெய் யான்-திருமேனியையுடையவன்]

என்ற பாசுரத்தை ஓதி உளங்கரைந்து கைபெற்ற பயனை எய்துகின்றோம். எம்பெருமானின் திவ்விய மங்கள விக்கிரகத்தின் பேரழகு சொல்லுந்தரமன்று. அத்திருவழகு கடல்போல் எல்லைகாண வொண்ணாதது; நீல மணியாலான மலைபோல் நெஞ்சங்கவர்வது; காளமேகம்போல் குளிர்ந்து நம் விடாயையெல்லாம் தீர்க்க வல்லது; குவளைப்பூவும் காயாமலரும்போல் வைத்தகண் வாங்காது பார்த்துக்கொண்டே இருக்க வேண்டும்படியான பேரழகு வாய்ந்தது. இத்தகைய திருமேனியையுடைய எம்பெருமான் அடியார்கட்கு முற்றூட்டாகத் தன்னைக் கொடுத்துக்கொண்டு சங்கேந்தும் கையுடன் திருமெய்ய மலையில் எழுந்தருளி யுள்ளான். இவனைத் தொழாத கை கையல்ல, உலக்கையே என்று கூறும் ஆழ்வார் பாசுரத்தில் ஆழங்கால் பட்டவண்ணம் அவனைத் தொழுகின்றோம்.

திருமங்கையாழ்வார் மட்டிலுமே 'மெய்யம் அமர்ந்த பெருமானை' மங்களாசாசனம் செய்துள்ளார். அவருடைய பாசுரங்கள் எல்லாம் ஒன்றன்பின் ஒன்றாக நம் மனத்தில் குமிழியிடத் தொடங்குகின்றன. காவல்மிக்க

9. பெரி.திரு. 11. 7 : 5

காண்டவ வனத்தை அங்கியம் கடவுளுக்கு திருவமுது செய்வித்த எம்பெருமானே மெய்யம் அமர்ந்த பெருமான் என்பது ஆழ்வாரின் திருவுள்ளம்.

> **"கட்டேறு நீள் சோலைக்**
> **காண்டவத்தைத் தீமூட்டி**
> **விட்டானை, மெய்யம்**
> **அமர்ந்த பெருமானை"[10]**

[கட்டுஏறு-காவல்மிக்குள்ள; அமர்ந்த-எழுந்தருளிய; என்பது அவர் திருவாக்கு.]

ஆழ்வார் பெருமக்கள் எம் பெருமானைப் பலவகையாக அநுபவித்து மகிழ்வர் என்றும், அவை அவனுடைய திருநாமங்களைச் சொல்லியநுபவித்தல், அவனுடைய திருக்குணங்களில் ஆழங்கால்பட்டு அநுபவித்தல், அவனுடைய திருமேனி அழகினை வருணித்து அநுபவித்தல், அவனுகந்தருளிய திவ்விய தேசங்களின் வளங்களைப் பேசி அநுபவித்தல், அங்கே வாழும் அடியார்களின் பெருமையைக் கூறி அநுபவித்தல் என்று பலவகையாக விரியும் என்பதை நாம் அறிவோம். இவ்வகைகளில் மிகச் சிறந்த வகை ஆழ்வார் தாமான தன்மையைக் களைந்தெறிந்து பிராட்டிமாருடைய தன்மையை ஏறிட்டுக்கொண்டு வேற்றுவாயாலே அநுபவிப்பதாகும். இங்ஙனம் அநுபவிக்கும் திறத்தில் தாய் பாசுரம், தோழிபாசுரம், மகள் பாசுரம் என்று மூன்று வகுப்புகள் உண்டு என்பதனையும் அறிவோம். அப்போது ஆழ்வாருக்குப் பரகாலர் என்ற ஆண்மைப் பெயர் நீங்கிப் பரகாலநாயகி என்ற பெண்மைப் பெயர் வழங்கப்பெறும் என்பதும் நாம் அறிந்ததே.

10. பெரி திரு-6. 8 : 7

திருஅரங்கம் அழகிய மணவாளன் திறத்தில் ஆழ்வாருக்கு உண்டான கழிபெருங் காதலை அவருடைய திருத்தாயார் எடுத்துரைப்பதாக அமைந்ததாய்ப் பாசுரங்கள் அமைந்த பதிகத்தில் 'திருமெய்யமலையாளன்' பரகால நாயகியைப் படுத்தும் பாட்டைக் காண்கின்றோம்-

**"கலையாளா அகலல்குல் கனவளையும்**
**கையாளா என்செய் கேன்நான்**
**'விலையாளா வடியேனை வேண்டுதியோ**
**வேண்டாவோ?' என்றும், மெய்ய**
**மலையாளன் வானவர்தம் தலையாளன்**
**மராமர மேழெய்த வென்றிச்**
**சிலையாளன் என்மகளைச் செய்தனகள்**
**அம்மனையீர்! அறிகி லேனே!"[11]**

]கலை-ஆடை; ஆளா-தரியாத; கனம்-பொன்; விலை ஆள் வேலைக்காரி; சிலை-வில்]

என்ற பாசுரத்தில் ஈடுபட்டு நிற்கின்றோம். 'என்னை உனக்கே அற்றுத் தீர்ந்த அடியவளாக ஆக்கிக்கொள்ள எண்ணமுண்டா? இல்லையா? சொல்லி விடு' என்று துணிவாகக் கேட்கும் பரகால நாயகியின் பேச்சைக் கேட்கின்றோம். இப்படி இவள் மேனி மெலிந்து போகவும் பெரிய பெரிய பேச்சுகள் பேசவும் நேர்ந்தது அப்பெருமான் படுத்தினபாடு என்பதைப் பாசுரத்தின் பின்னிரண்டு அடிகள் தெரிவிக்கின்றன. திருவரங்கத்து அரவணையானும் திருமெய்ய மலையாளனும் ஒருவனே என்ற விசிட்டாதவைத உண்மையும் இப்பாசுரத்தில் பளிச்சிடுகின்றது. அது மட்டுமா? 'நித்திய சூரிகளின் தலைவனான பரமபத நாதனும் மராமரங்கள் ஏழையும் ஓரம்பால் துளைத்து சுக்கிரீவன் கொண்டிருந்த ஐயத்தைப் போக்கின அவதார மூர்த்தியான இராமபிரானும் அர்ச்சாவதார மூர்த்தியும்

11. பெரி. திரு 5.5 : 2

ஒரே இறைவனின் வெவ்வேறு வடிவங்களே' என்ற உண்மையினை இப்பாசுரம் உணர்த்துவதனையும் அறிகின்றோம்.

தாய்பாசுரமாகச் செல்லும் திருக்கண்ணபுரத்து மங்களாசாசனப் பதிகத்தில் ஒரு பாசுரம் இந்தத் 'திருமெய்யத்து இன்னமுதத்தை'க் குறிப்பிடுகின்றது.

**"'அருவிசோர் வேங்கடம்**
**நீர்மலை' என்றுவாய்**
**வெருவினாள், மெய்யம்**
**வினவி யிருக்கின்றாள்."[13]**

[சோர்-சொரிகின்ற; வெருவினாள்-பிதற்றினாள்]

"பரகால நாயகியை நோக்கி நான் ஏதேனும் சொன்னால் அதனை அவள் செவி ஏற்பதில்லை; அதற்கு அவள் யாதொரு மறுமொழி கூறுவதும் இல்லை. திருவேங்கடம், திருநீர்மலை என்று சதா வாய் வெருவிக் கொண்டு நிற்கின்றாள். சில சமயங்களில் "திரு மெய்யம் என்ற திவ்விய தேசம் ஒன்று இருக்கின்றதே. அதற்கு மெய்யம் என்ற பெயர் வந்ததற்குக் காரணம் என்ன? அடியவர்க்கு மெய்யாகவே நின்று செயல் புரிந்த இடம் என்ற காரணத்திற்காகவா?" என்று அருகிலுள்ளவர்களை வினவுகின்றாள் என்பதாகத் திருத்தாயார் பேசுகின்றார்.

மகள் பாசுரமாகச் செல்லும் திருநாகை சௌந்தரிய ராசன்மீதுள்ள பதிகத்தின் பாசுரம் ஒன்றில் திருமெய்யத்து எம்பெருமான் குறிப்பிடப் பெறுகின்றான். தலைவனது உருவெளிப் பாட்டில் நலியும் மகள் இவ்வாறு பேசுகின்றாள்:

12. பெரி. திருமடல்-கண்ணி-125-126
13. பெரி. திரு 8.2 : 3

''வேயிருஞ் சோலை விலங்கல் சூழ்ந்த
மெய்ய மணாளர்இவ் வையமெல்லாம்,
தாயின நாயக ராவர் தோழி!
தாமரைக் கண்கள் இருந்தவாறு,
சேயிருங் குன்றம் திகழ்ந்த தொப்பச்
செவ்விய வாகி மலர்ந்தசோதி,
ஆயிரம் தோளொ டிலங்கு பூணும்
அச்சோ ஒருவர் அழகிய வா!''[14]

[வேய்-மூங்கில்; விலங்கல்-குன்று; வையம்-உலகம். தாயின-தாவி அளந்த; செவ்வி-அழகு; அச்சோ-ஆச்சரியம்; அழகிய ஆ-அழகிருந்தவாறு]

''தோழி, இவருடைய திருக்கண்களின் அழகை என் சொல்லுவேன்? ஓங்கிப் பரந்த மலைகள் போலே விளங்குகின்ற தோள் வலயங்கள் முதலியவற்றின் புகர் விஞ்சி விளங்கப் பெற்றவையான ஆயிரந் திருத்தோள்களும் அவயவந்தோறும் திருவாபரணங்கள் விளங்கப்பெறும் அழகை என்ன சொல்லுவேன்? இந்த அழகினை நோக்குங்கால் இவர் சாதாரண மனிதராக இருப்பதற்கு நியாயமில்லை. இவர் திருமெய்ய மலையில் எழுந்தருளியவரும் இவ்வுலகங்களையெல்லாம் இரண்டடியால்தாவியளந்தவருமான எம்பெருமானாகவே இருக்க வேண்டும்' என்கின்றாள் ஆழ்வார் நாயகி. இங்ஙனம் திருமங்கையாழ்வார் பெற்ற அநுபவத்தையெல்லாம் அவர் தம் பாடலால் நாம் பெற முயல்கின்றோம். இதற்கும் அவன் அருள் வேண்டுமல்லவா?

எம்பெருமானைச் சேவித்த பிறகு தாயார் சந்நிதிக்கு வருகின்றோம். தாயாரின் திருநாமம் உய்யவந்தாள் நாச்சியார் என்பது. அவரையும் வணங்கி அவர் அருளைப் பெறுகின்றோம்.

14. பெரி. திரு 9. 2 : 3

அடுத்து, எம்பெருமான் சந்நிதிக்கு மேற்குப்புற மாகவுள்ள பாறையில் குடைந்தெடுக்கப்பெற்ற குடை வரையைக் காண விரைகின்றோம். அங்கே எம்பெருமான் போக சயன மூர்த்தியாக எழுந்தருளியுள்ளார். இவர்தம் அனந்தசயனத் திருக்கோலம் கருவறை உட்பட மலையைக் குடைந்து அமைத்ததாகும். இவரையும் திருமங்கை யாழ்வார் மங்களாசாசனம் செய்துள்ளதாகத் தோன்று கின்றது. கடல்மல்லைத் தலசயனத்து எம்பெருமானை மங்களசாசானம் வசய்யும் பொழுது இந்த எம்பெருமான் ஆழ்வார் திருவுள்ளத்திற்கு அநுபவமாகின்றார்.

**''பெண்ணாகி இன்னமுதம் வஞ்சித் தானைப்**
**பிறைஎயிற்றன் அடலரியாய்ப் பெருகி னானை**
**தண்ணார்ந்த வார்புனல்சூழ் மெய்ய மென்னும்**
**தடவரைமேல் கிடந்தானைப் பணங்கள் மேவி,**
**எண்ணானை எண்ணிறந்த புகழி னானை**
**இலங்கொளிசேர் அரவிந்தம் போன்று நீண்ட**
**கண்ணானை, கண்ணாரக் கண்டு கொண்டேன்**
**கடிபொழில்சூழ் கடல்மல்லைத் தலசய னத்தே''**[15]

[பெண்-மோகினி அவதாரம்; பிறை சந்திரன்; எயிறு-பல; அடல்-வண்மை; அரி-சிங்கம்; புனல்-நீர்; தடவரை-பெரிய மலை; பணங்கள்-படங்கள்; மேவி-பொருந்தி; எண் ணானை-யோகியர்களால் சிந்திக்கப் பெறுபவன்; அரவிந்தம்-தாமரை]

என்ற பாடலை மிடற்றொலியுடன் உளங்கரைந்து ஓதி எம்பெருமானைச் சேவிக்கின்றோம். மோகினி அவதாரம் எடுத்து அமுதத்தைத் தேவர்கட்கு வழங்கியவன்; நரசிம்மாவதாரம் எடுத்துப் பிரகலாதனை உய்வித்த வன். திருமெய்யத்தில் சயனத் திருக்கோலம் கொண் டிருப்பவன். உறங்குவான் போல் உலகப் படைப்பினைச்

15, பெரி. திரு 2. 5; 8

சிந்தித்துக் கொண்டிருப்பவன், குணாநுசந்தானம் பண்ணும் அடியார்கள் மனத்தில் தோன்றுபவன்: ஆகிய எம்பெருமானைத் திருக்கடல்மல்லையில் சேவிக்கப் பெற்றதாக இனியராகின்றார் ஆழ்வார். நாமும் அதே நிலையைற பெற முயல்கின்றோம்.

இத்தலத்தில் அரவு அணையானாக இருக்கும் அனந்தன் பெருமானுக்குக் குடைபிடிக்கின்றான். திரு அரங்கத்து எம்பெருமானைப் போலவே இத்தலத்து எம்பெருமானும் இரண்டு திருக்கையனாகவே காட்சி அளிக்கின்றான், ஒரு கை அனந்தனுக்கு அருளுவது போல் உயர்ந்து காணப்பெறுகின்றது. மற்றொரு கை திருமார்பில் 'அகலகில்லேன் இறையும்' என்றிருக்கும் பெரிய பிராட்டியாரைப் பாதுகாக்கும் நிலையில் காணப்பெறுகின்றது. சயனத் திருக்கோல எம்பெருமானைச் சுற்றிக் கருடன் சித்திரகுப்தன். மார்க்கண்டேயர், நான்முகன் இவர்கள் உள்ளனர். வானவீதியில் தேவர்கள் கின்னரர் கிம்புருடர் விரைந்து செல்லும் காட்சி வேறு தலங்களில் காணக் கிடைக்காத கண் கொள்ளாக்காட்சி. பெருமானின் காலடியில் மதுகைடவர் என்ற அசுரர்களும் பூமிப்பிராட்டியும் காணப்பெறுகின்றனர். முன்னொருகால் பூமிப்பிராட்டியாரை மதுகைடவர் தூக்கிச் சென்றபொழுது ஆதிசேடன் அவர்கள்மீது நஞ்சினை உமிழ்ந்து அவர்களை எரித்திருக்கின்றான். பரந்தாமனின் ஆணையின்றி அனந்தன் நஞ்சு உமிழ்ந்ததற்கு வருந்தியிருக்கின்றான். அதனால்அவனைச் சாந்தி செய்யும் திருக்கோலத்தில் இந்த அனந்த சயனர் கிடக்கின்றார் என்பது புராணவரலாறு. இங்குள்ள எம்பெருமானும் *மல்லைத்தலசயனரும் ஒரே கோலத்தவராகக் காணப்பெறுகின்றனர். திருமெய்யத்துக் குடைவரையும் மாமல்லத்துத் திருக்கோயிலும் பல்லவர் பணியன்றோ? திருமங்கையார் திருவுள்ளத்திலும் இவர்கள் இருவரும் சேர்ந்தே அநுபவமாகி இருப்பவர்கள். இங்கு தீர்த்தம், திருத்துழாய் முதலியன பெற்று வெளி வருகின்றோம். இந்

நிலையில் திவ்விய கவியின் திருப்பாசுரம் நினைவிற்கு வருகின்றது.

> "ஆளாய் உனக்கன்பாய் ஆசையாய் நாணிலியா
> வாளா மனைவியென்று வாழ்வேனைக்—கேளாய்
> திருமெய்ய மாயா! சிலைகால் வளைத்து
> வரும்எய்ய மாயா மதன்."[16]

[ஆள்ஆய்-அடிமைப்பட்டு; ஆசையாய் - ஆசைக் கொண்டு; வாளா—வீணாக; கேளாய்-கவனிப்பால்; சிலை — வில்; வரும்-வருவான்; மதன்-மன்மதன்

என்ற பாசுரத்தை ஓதி உளங் கரைகின்றோம். பிரிவு ஆற்றாத தலைவி இரங்கிக் கூறுவதாக அமைந்த இப் பாடல் சீவான்மா பரமான்மாவை நோக்கித் தன்னுடைய ஆரா அன்பைப் புலப்படுத்துகின்றது. நாமும் திவ்வியகவி பெற்ற அநுபவத்தையே பெற முயல்கின்றோம்.

அடுத்து, ஒரு சிறு தெருவினைக் கடந்து சிவபெருமான் திருக்கோயிலுக்கு வருகின்றோம். இத்திருக்கோயிலையும் ஓர் இராஜகோபுரம் அழகு செய்கின்றது. கீழைக் கோயில் என்று ஊர் மக்களால் வழங்கப்பெறும் இத் திருக்கோயிலின் எம்பெருமான் சத்தியகிரீஸ்வரர் என்பவர். இவரையும் வணங்குகின்றோம். இத்திருக்கோயிலும் குடைவரையே. குடைவரையின்மேல் கோடியில் இலிங்கம் உள்ளது. இம் மூர்த்தியும் மலையைக் குடைந்து நிர்மாணிக்கப் பெற்றவரே. மகேந்திரப் பல்லவ மன்னன் சமயவேறுபாடு கருதாமல் மலையைக் குடைந்து இரண்டு திருக்கோயில்களையும் அமைத்த சமரச நோக்கினை எண்ணி வியக்கின்றோம். ஆயினும், இத்திருக்கோயில் எம்பெருமான் தேவாரப் பாடிய மூவராலும் பாடல் பெற வில்லை. இதிலிருந்து அவர்கட்குப் பின்னர் எழுந்த கோயிலாக இருந்திருக்க வேண்டும் என்று ஊகம்செய்கின்றோம்.

16. நூற். திருப் அந்—43

சிவன் கோயிலில் குடுமியான் மலையில் உள்ளது போன்ற இசைக்கலைபற்றிய ஒரு கல்வெட்டு உள்ளது. பெருமாள் கோயிலிலுள்ள கல்வெட்டு ஒன்றின் மூலம் அத் திருக்கோயிலைச் சாத்தான் மாறன் என்பான் புதுப்பித்தான் என்பதை அறிகின்றோம். அவனுடைய அன்னையாரான பெருந்தேவி எம்பெருமானுக்கு நில மானியங்கள் அளித்த செய்தியையும் அறிகின்றோம். இச்சாத்தன் மாறன் இரண்டாம் நந்திவர்மன் காலத்தவன். இவனுக்குப் பிறகு விசயாலய சோழன் வழி வந்த மன்னர்களே இப்பகுதியை ஆண்டவர்கள். ஹொய்சாள மன்னர்களின் தளகர்த்தனான அப்பண்ண தண்டநாயகன் இராமேசுவரம் சென்று திரும்பிய பொழுது இத்திருத்தலத்திற்கு வந்த செய்தியும் இங்கு நமக்குக் கிடைக்கின்றது. அவன் வந்த சமயம் இந்தத் தலத்து இரண்டு திருக்கோயில்களின் அறக்கட்டளை ஆளர்களிடையே இருந்த விவகாரத்தைத் தீர்த்து வைத்த செய்தியையும் அறிகின்றோம். இவனே இரண்டு திருக்கோயில்கட்கும் இடையே நிரந்தரமாக ஒரு பெரிய சுவர் எழுப்பியவன். இதை ஒரு கல்வெட்டிலும் பொறித்து வைத்துள்ளான் அப்பெருமகன். இக் கல்வெட்டு கி. பி. 1245இல் ஏற்பட்டதாகத் தெரிகின்றது. பதினாறு பதினேழாம் நூற்றாண்டுகளில் இப்பகுதி இராமநாதபுரம் சேதுபதிகளின் ஆட்சியில் இருந்ததாகவும், அவர்களுள் விசய ரகுநாத சேதுபதி என்பவர் காலத்தில் இப்பகுதியைப் புதுக்கோட்டைத்தொண்டைமான்களிடம் ஒப்படைத்ததாகவும் அறிகின்றோம்.

மராட்டியர் ஆட்சியில் தஞ்சையிலிருந்து ஆனந்தராவ் புதுக்கோட்டையின் மீது தண்டு எடுத்து வந்தபோது புதுக்கோட்டையை ஆண்ட விசயரகுநாதத் தொண்டைமான் திருமெய்யம் கோட்டையினுள் ஒளிந்து கொண்டிருந்த செய்தியையும் அறிகின்றோம். பாஞ்சாலங் குறிச்சி வீரர்

களான கட்டபொம்மனும் ஊமைத்துரையும் இக்கோட்டை யில் ஒளிந்திருந்தனர் என்பது செவிவழிச் செய்தி; இவற்றி லிருந்து திருக்கோயில்கள் மகேந்திரவர்மன் காலத்தில் ஏற்பட்டவை என்பதும், கோட்டை அதன் பின்னர்க் கட்டப்பெற்றது என்பதும் தெளிவாகும். இச் செய்திகளை எல்லாம் அறிந்த வண்ணம் திவ்விய தேச யாத்திரையால் பெற்ற மனநிறைவுடன் காரைக்குடிக்குத் திரும்பு கின்றோம்.

# 3. திருப்புல்லாணி எம்பெருமான்

உயிர்கள் எம்பெருமானை அடைவதற்குப் 'புருஷ காரமாக'[1] இருப்பவள் பெரிய பிராட்டியார் என்பது வைணவ தத்துவம். கடினசித்தமுடைய கணவனையும் குறும்பு நிறைந்த மக்களையும் பெற்ற ஓர் இல்லத் தலைவி எங்ஙனம் அவர்களை விட்டுத் தாய் வீடு செல்ல மாட்டாளோ, அங்ஙனமே குற்றத்திற்கேற்ற தண்டனைகளை அளிப்பதில் ஊன்றி நிற்கும் கணவனையும் குற்றங்களையே செய்து கொண்டு போகும் மக்களையும் பெற்ற பிராட்டியாரும் எம்பெருமானை விட்டுப் பிரியாள். ஆகவே, பெரிய பிராட்டியாருடன் கூடியிருக்கும் எம்பெருமானே தஞ்சம் என்ற கொள்கையில் ஊற்றம் உடையவர்கள் வைணவர்கள். நம்மாழ்வாரின் சரணாகதித் தத்துவம் இதனையே எடுத்தியம்புகின்றது.

''அகல கில்லேன் இறையும்' என்று
அலர்மேல் மங்கை உறைமார்பா!
நிகரில் புகழாய் உலகம் மூன்(று)
உடையாய் என்னை ஆள்வானே!
நிகரில் அமரர் முனிக்கணங்கள்
விரும்பும் திருவேங் கடத்தானே!
புகல்ஒன் (று) இல்லா அடியேன்உன்
அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே.''[2]

[இறை-சிறிதுநேரம், கணம்; புகல்-பற்றுக்கோடு]

என்ற பாசுரம் இத்தத்துவத்தைக் குறிப்பிடும் உயிர்நிலையான பாசுரம்.

---

1. புருஷகாரம்—தகவுரை கூறுபவள்.
2. திருவாய் 6-10:10.

சேதநன் உபாயமாகப் பற்றுவதற்கு இன்றியமையாதவை எம்பெருமானுடைய 'இணைத்தாமரை அடிகள்.'' இத்திருவடிகள் எம்பெருமானை விடவும், பிராட்டியாரை விடவும் சிறந்தனவாகும் என்பது வைணவர்களின் நம்பிக்கை. இதனைச் சிறிது விளக்குவோம். பிராட்டியார் சேதநனுடைய துன்பநிலையைக் கண்டு மனமிரங்கி அவனை அங்கீகரிக்குமாறு எம்பெருமானுக்குப் புருஷகாரம் செய்கின்றார். இந்நிலையில் அவர் இவனுடைய குற்றங்களைப் பகவானிடம் எடுத்துரையார் என்பது உண்மை. ஆயினும், ஈசுவரன் மனத்தில் இவனை ஏற்றுக் கொள்ளும் எண்ணத்தை ஊன்றுவிப்பதற்காக, ஒரு கால் சில குற்றங்களை எடுத்தியம்புதல் கூடும்; இங்ஙனம் குற்றம் உரைக்கும் முறையில் பிராட்டியார் சேதநனைக் கைவிடுபவராகின்றார். அந்தச் சேதநனிடம் ஊன்றிய அன்புகொண்ட பகவான் தனக்குள்ள வாத்சல்யம் முதலிய குணங்களால்.

'என்னடியார் அது செய்யார்
செய்தாரேல் நன்று செய்தார்[3]

என அவனை அங்கீகரிக்க முன்வந்து நிற்பன். அத்தகைய எம்பெருமானும், ஒருகால் இவனைக் கைவிடுவதுண்டு. இம் முறையில் சேதநனுக்கு நன்மை புரிபவர்களாகிய இருவரும் கைவிடினும், தம் அழகினால் சேதநனை அப்புறம் செல்லாதவாறு அகப்படுத்திக் கொள்ளும் அவனுடைய திருவடிகளோ, சேதநனை விடாது பற்றிக்கொள்ளும் திண்மை வாய்ந்தனவாக இருக்கும். இதனையே,

''பிராட்டியும் அவனும் விடினும்
திருவடிகள் விடாது திண்கழலாயிருக்கும்''[4]

என்ற முமுட்சுப்படி வாக்கியம்விளக்குகின்றது. ஆழ்வாரும்,

''வண்புகழ் நாரணன்
திண்கழல் சேரே.''[5]

3. பெரியாழ். திரு. 4-9:2
4. முமுட்சுப்படி, 146.

எனத் திருவாய் மலர்ந்துள்ளமை ஈண்டு நோக்கத் தக்கது.

இந்த எண்ணங்கள் நம் மனத்தில் குமிழியிட்ட வண்ணம் 'திருப்புல்லாணி' என்ற திவ்விய தேசத்தை நோக்கிப் புறப்படுகின்றோம் காரைக்குடியிலிருந்து. 'புல்லணை' என்ற பெயர் 'புல்லாணி' என மருவிற்று. இராமாயணக் கதை நமக்குத் தெரியும். சீதாப் பிராட்டியாரைக் கவர்ந்து சென்ற இராவணனைப் கொல்லுதற் பொருட்டு இராமபிரான் வானரப்படையுடன் தெற்குக் கடற்கரையை அடைகின்றான். வீடணன் யோசனைப்படி வருணனை வேண்டினால் அவன் கடல் கடக்க வழியமைத்துத் தருவான் எனக் கருதி அவனை வழிபட முனைகின்றான். அதற்காகத் தருப்பையைச் சயனமாக்கி அதிலமர்ந்த வண்ணம் ஏழு நாளளவும்[6] தவக்கோலத்திலிருக்கின்றான். இராமபிரான் தருப்பையில் கிடந்த தலமாதலால் இது வடமொழியில் 'தருப்ப சயனம்' என வழங்கலாயிற்று. 'புல்லணை' என்பது அதற்கு ஏற்ற தமிழ்ப் பெயர். இந்த வரலாற்றைக் கம்பநாடனின்,

> ''தருண மங்கையை மீட்பது
> ஓர் நெறி தருகஎன்னும்
> பொருள் நயந்துநல் நூல்நெறி
> அடுக்கிய புல்லில்
> கருணை அம்கடல் கிடந்தது
> கருங்கடல் நோக்கி
> வருண மந்திரம் எண்ணினன்
> விதிமுறை வணங்கி.''[6]

[தருண மங்கை—இளம் பருவத்தையுடைய சீதை; புல்—தருப்பை; கருணை அம்கடல்—இராபிரான்.] என்ற பாடலால் அறிகின்றோம்.

திருப்புல்லாணி இராமநாதபுரத்துக்குத் தெற்கே கீழக்கரை என்னும் ஊருக்குச் செல்லும் வழியில் ஏழு கல் தொலைவிலுள்ள ஒரு சிறிய ஊர். திருச்சி—இராமேசுவரம்

5. திருவாய் 1. 2 : 10. 6. யுத்த. வருணனைவழி—6.

இருப்பூர்திப்பாதையில் இராமநாதபுரம் என்ற நிலையத்தில் இறங்கி இந்த ஊருக்குச் செல்லவேண்டும். இராமநாதபுரத்திலிருந்து பேருந்து வசதி உண்டு. கடற்கரையைச் சார்ந்த சிற்றூராதலின் மணற்குன்றுகள் எம்மருங்கும் மலிந்து காணப்படுகின்றன. என்றாலும், திருக்கோயில் வாயில் செல்லும் வரை நல்ல சாலை வசதியுண்டு.

இந்த திவ்விய தேசத்தில் இலங்கைக்குச் செல்ல சேது கட்டத் தீர்மானம் ஆனதால் இத்தலம் '**ஆதி சேது**' என்றும் வழங்கப்பெறுகின்றது. இன்றும் இத்தீர்த்தத்துறையில் மூழ்குவோர் "ஸேது மூலே புல்லாரண்ய க்ஷேத்திரே" என்று சங்கல்பம் செய்து கொள்ளும் வழக்கு உண்மையாலும் இஃது உறுதிப்படுகின்றது. மேலும், இன்றும் கன்யாகுமரி ஆதிசேதுவாகவும்[7], தனுஷ்கோடி மத்திய சேதுவாகவும், சோணாட்டுக் கோடிக்கரை அந்த சேதுவாகவும் மக்களால் கருதப்பெறுவதை நாம் கேட்டறியலாம்.

**"எய்த யோசனை ஈண்டொரு நூறுஇவை**
**அய்யி ரண்டின் அகலம் அடைந்திடச்**
**செய்த தால்அணை என்றிது செப்பினார்**
**வைய நாதன் சரணம் வணங்கியே."[8]**

என்ற கம்பநாடனின் திருவாக்கின்படி நூறு யோசனை நீளமும், பத்து யோசனை அகலமும் உடையதாக இராமசேது அமைக்கப்பட்டதாகத் தெரிவதால், குமரி—தனுஷ்கோடி எண்பது மைல் அகலமுள்ள சேதுவால் இணைக்கப்பெற்று ஏறக்குறைய ஒன்றாக இருந்ததென்று

---

7 இராமசேதுவைக் கன்னியாகுமரியதாகக் கூறும் வழக்கும் உண்டு. இன்றும் குமரித்துறையில் நீராடுவோர் "ஆதியேதோ: கன்னியாகுமரி. க்ஷேத்தர மாதுர் பிதுர் தீர்த்தே" என்று சங்கல்பம் செய்துகொள்ளும் வழக்கு உண்டு. கன்னியாகுமரித் தலபுராணமும் இதனையே கூறுகின்றது.

8. யுத்த சேது பந்தனர்—71

கொள்ளினும் அமையும். பலவெள்ளங் கொண்ட வானரசேனை சென்ற வழி இவ்வளவு அகலமுடையதாக இருந்திருக்க வேண்டுமன்றோ?

நாம் ஏறி வரும் இராமேசுவரம் விரைவு வண்டி இராமநாதபுரத்தை அடைந்ததும் நம் மனம் புல்லாணி திவ்விய தேசத்தில் மெல்லஆழங்கால்படத் தொடங்கு கின்றது. திருப்புல்லாணி எம்பெருமானைத் திருமங்கை யாழ்வார் மட்டிலுமே மங்களாசாசனம் செய்துள்ளார்.[9] ஆழ்வார் பாசுரங்கள் நம் சிந்தையில் எழுகின்றன. சோழ நாட்டுத் திருப்பதிகளின் அநுபவம் ஆழ்வார்க்கு திரு நாகைப்பதியுடன் தலைக்கட்டிவிட்டது: திருநாகையிலுள்ள அழகியாரை அநுபவித்த நாயகி பாவனையுடன் திருப் புல்லாணி எம்பெருமானையும் அநுபவிக்கத் தொடங்கு கின்றார். "பிரிந்தவர்கள் இரங்குவது கடற்கரையில்" என்பது அக்த்திணை மரபு. திருப்புல்லாணி என்ற திவ்விய தேசம் கடற்கரையில் அமைந்ததாதலால் ஆழ்வாரின் இரண்டு திருமொழிகளும் நாயகனைப் பிரிந்து வருந்தும் நாயகியின் பாசுரங்களாகச் செல்லுகின்றன.

திருமங்கையாழ்வார் காலத்துத் திருப்புல்லாணியைப் பாசுரங்களில் காண்கின்றோம். அற்புதமான நெய்தல் நிலக் காட்சிகளைப் பாசுரங்களின் மூலமாகக் கண்டு அநுபவிக்கின்றோம். இராமேசுவரத்தில் கடல் அமைதியாக இருப்பதுபோல் திருப்புல்லாணிக் கடல் அமைதியாக இல்லை; அங்கு அது மிகக் கொந்தளிப்புடன் உள்ளது. அச்சத்தை விளைவிக்கக்கூடிய பேரலைகளை அங்குக் காண்கின்றோம். திருமங்கையாழ்வாரும்,

"பொருந்து முந்நீர்க் கரைக்கே
மணியுந்து புல்லாணி"[10]

9. பெரி திரு 9. 3 : 9 . 4.

10. பெரி திரு 9. 3 : 2

[பொருது—அலை எறிந்து; முந்நீர்—கடல்; மணி—இரத்தினம்]

என்று கூறுவதைக் காண்க. இதற்குப் பெரிய வாச்சான் பிள்ளை அருளிச் செய்த உரை:"உத்தேச்யஸித்திற்கு இருந்த விடம் விட்டுப்போக வேண்டாத தேசம்; 'பொருள் வயிற் பிரிகிறேன்' என்று அவனுக்குக் கண்ணழிவு சொல்லவொண்ணாத தேசம்" என்பது. இதனை விவரிப்போம். பிரிந்து செல்லும் தலைவன் நல்வாழ்க்கைக்கு நல் உறுப்பாக உள்ள அரும் பெரும் பொருள்களைத் திரட்டிக் கொணர்வதற்காகத் தொலைநாடு செல்ல அவசியமில்லாதபடி திருப்புல்லாணியில் மனைவாயிலிலே மணியும் முத்தும் மலிந்து கிடக்கின்றனவாதலின், அங்குச் சென்று கூடினோமாயின் பொருள்வயிற் பிரிவும் நேரமாட்டாது என்பது குறிப்பு. மேலும் ஆழ்வார், 'பொங்கு முந்நீர்க் கரைக்கே மணியுந்து புல்லாணி'[11] என்றும், "புணரியோதம் பணிலம் மணியுந்து புல்லாணி[12]" என்றும், "புரவி என்னப் புதம் செய்து வந்துந்து புல்லாணி[13]" என்றும் இங்குள்ள கடலை வருணித்திருப்பதைக் கண்டு மகிழலாம் இந்த ஊர்க் கடற்கரைக்கு 'பொன்னங்கழிக்கானல்' என்று திருநாமம் இட்டு மகிழ்கின்றார் திருமங்கையாழ்வார். வான மாமலையில் 'சேற்றுத்தாமரை[14]' என்ற திருநாமத்துடன் தடாகமும், 'தேனமாம்பொழில்'[15] என்ற திருநாமத்துடன் தோப்பும், திருமோகூரில் 'தாளதாமரை'[16] என்ற திருநாமத்துடன் தடாகமும் நம்மாழ்வார் திருவாக்கில் வந்துள்ளமை ஈண்டு நினைந்து மகிழ்வதற்குரியவை

11. பெரி.திரு. 9.3 : 4. பொங்கு-அலைமோதும்.
12. ஷை 9.3 : 5. புணரி-கடல், ஓதம்-அலை.
13. ஷை 9.3 : 7 பணிலம்-சங்கு. புரவி-குதிரை புதம் செய்தல்—தாவிப் பாய்தல்
14. திருவாய் 5.7 : 1 16. திருவாய் 10.1 : 1
15. ஷை 5.7 : 6

இங்குள்ள கடற்கரைச் சோலைகள் திருமங்கையாழ்வார் திருவாக்கில் மிக அற்புதமாக இடம் பெற்றுள்ளன.

"இலங்கு முத்தும் பவளக்
கொழுந்தும் எழில்தாமரை
புலங்கள் முற்றும் பொழில்சூழ்ந்து
அழகாய புல்லாணி"[17]

[இலங்கு-விளங்குகின்ற; கொழுந்து-துளிர்; எழில்-அழகிய; புலங்கள்-இடங்கள்; பொழில்-சோலைகள்]

என்பது அவர் காட்டும் சோலை. ஒளி மல்குகின்ற முத்துக்களையும் அழகிய பவளத்துளிர்களையும் அலர்ந்த தாமரைப் பொய்கைகளையும் உடைத்தான சோலைகளால் சூழப்பட்டது திருப்புல்லாணி என்ற திவ்விய தேசம் என்கின்றார்; இந்தச் சோலைகளைப் பாசுரங்கள் தோறும் பன்னி உரைக்கின்றார். "தாதுமல்கு தடஞ்சூழ் பொழில்"[18] 'போதுநாளும் கமழ்பொழில் சூழ்ந்த புல்லாணி'[19] "செழுந் தடம் பூஞ்சோலை சூழ்புல்லாணி"[20] "பூஞ்செருந்தி பொன் சொரியும் புல்லாணி"[21] "போதலரும் புன்னைசூழ் புல்லாணி"[22] என்ற அப்பெருமானின் வாக்குகளைக் கண்டு மகிழ்க. மேலும்,

"கள்ளவிழும்மலர்க் காவியும்
தூமடற் கைதையும்
புள்ளும் அள்ளற் பழனங்களும்
சூழ்ந்த புல்லாணி"[23]

17. பெரி.திரு. 9.3 : 10
18. ஷை 9.3 : 3 தாது-பூந்தாது.
19. ஷை 9.3 : 3 போது-பூக்கள்
20. ஷை 9.4 : 6 தடம்-தடாகம்
21. ஷை 9.4 : 8 செருந்தி-சுரபுன்னை, பொன்-பொன்போன்ற மலர்கள்.
22. பெரி.திரு. 9.4 : 9 23. ஷை 9.3 : 6

[கள்-மது; அவிழும்-ஒழுகும்; காவி-செங்கழுநீர்ப்பூ; தூமடல்-வெளுத்தமடல்; கைதை-தாழை; அள்ளல்-சேறு; பழனம்-வயல்.]

என்று அந்தத் திவ்விய தேசத்தின் சூழலை நெய்தல் நிலக் கருப்பொருள்களைக் கொண்டே வருணித்திருக்கும் எழில்நலம் நம் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுகின்றது. ஆயின் இன்று அச்சூழ்நிலையை நாம் காண முடிகின்றதில்லை.

இந்தச் சூழலில் அமைந்த புல்லாணி என்ற ஊர் இன்று விரிச்சோடிக் கிடக்கின்றது. மக்கள் கூட்டம் அதிகம் இல்லை. நாள்தோறும் வரும் பக்தர்களின் எண்ணிக்கையும் குறைவே. திருமங்கையாழ்வாரும் ஒரே ஒரு பாசுரத்தில்,

"புனையார் மணிமாடப் புல்லாணி"[24]

[புனைஆர்-அழகுமிக்க]

என்று மட்டிலுமே குறிப்பிடுகின்றார். ஆகவே, அவர் காலத்திலும் இந்த ஊர் இன்றுள்ளதுபோல் விரிச்சோடிக் கிடந்ததோ என்று கூட எண்ணத் தோன்றுகின்றது,

இந்தச் சூழ்நிலையில்தான் பரகால நாயகி எம்பெருமான்மீது காதல் கொண்டு பொன்நிறம் பெற்றதாகக் கூறுகின்றாள்.

"முன்னம் குறளுருவாய்
மூவடிமண் கொண்டளந்த
மன்னன் சரிதைக்கே
மாலாகிப் பொன்பயந்தேன்"[25]

[மன்னன்-தேவாதிதேவன்; மாலாகி-காதல் உற்று.]

என்பதனால் இதனை அறியலாம். அலம்புரிந்த நெடுந் தடக்கையைக்கொண்டு[26] தானம் பெற்று மூவுலகளந்

24. பெரி.திரு. 9.4 : 7
25. ஷை9.4 : 2
26. திருநெடுந்—6

தான் எம்பெருமான். தன்னிடம் உண்மை அன்பு இல்லாத இந்திரனுக்காக இவ்வளவு செய்தவன் உண்மை அன்புள்ள தனக்கு அப்படிபட்ட செயலை மேற்கொள்ளாவிடினும் முகத்தையும் காட்டாது மேனி பசலைபடரும்படி செய்துவிட்டானே என்று துயரப்படுகின்றாள் ஆழ்வார் நாயகி. இதனையே இன்னொரு பாசுரத்தில்,

"பொன்னை நைவிக்கும் அப்பூஞ்
செருந்தி மண நீழல்வாய்
என்னை நைவித்து எழில்கொண்(டு)
அகன்ற பெருமான்."[27]

(பொன்-பொன் உருவம்; நைவிக்கும்-தோற்கடிக்க வல்ல; செருந்தி-சுரபுன்னை; நீழல்வாய்-நிழலில்; நைவித்து-ஈடுபடுத்தி; எழில்-அழகு; அகன்ற-பிரிந்து சென்ற.]

என்று குறிப்பிடுவதைக் கண்டு மகிழலாம் இதற்குப் பெரியவாச்சான் பிள்ளை அருளியுள்ள "நிறமும் மணமும் நிழலும் இவையெல்லாம் உண்டாயிருக்கிறபடி. ஓரிந்திரியம் கொண்டு ஒதுங்க நிழலில்லை கிடீர்: ஸர்வேந்த்ரியாபஹாரக்ஷமமான தேசம். சக்ஷுந்திரியத்துக்கு நிறம்; க்ராந்திரியத்துக்கு மனம்; ஸ்பர்சேந்திரியத்துக்கு நிழல்" என்ற இன்சுவை மிக்க வியாக்கியானம் பன்முறை படித்து அநுபவிக்கத் தக்கது. இரணியனின் ஆகத்தைப் பிளந்து சிறுக்கனான பிரகலாதனுக்கு அருள் புரிந்த செயலும்[28] உண்ணாது உறங்காது ஒலிகடலை ஊடறுத்து ஒரு பிராட்டிக்காக இலங்கையை நீறு எழச் செய்த செயலும்,[29] திருப்பாற்கடலில் பாம்பணையைக் கைவிட்டு வடமதுரையில் பிறந்து கோகுலத்தில் வளர்ந்து குவலயாபீடம் என்ற யானையைக் கொன்றொழித்த வீரச்செயலும்[30] ஆழ்வார் நாயகியின் உள்ளத்தைக் கவர்ந்து அப்பெருமானிடம் மால்கொள்ளச் செய்கின்றது.

27. பெரி.திரு. 9.3 : 1 29. பெரி.திரு. 9.4 : 5
28. ஷை 9.4 : 4 30. ஷை-9.4 : 8

இத்தகைய எம்பெருமான் முன்பு ஒருநாள் வண்டுகள் மதுவுண்ணும் தாழையின் நிழலில் தன் நெஞ்சு மிக்க ஆவல் கொள்ளும்படி பிரிந்து சென்றான். என்று குறிப்பிடுகின்றாள் பராங்குச நாயகி.[31] தன்னைத் தொடர்ந்து கொண்டு 'பேதாய், இனிமேல் உன்னை என்றும் பிரியேன்' என்று சொல்லிய மகானுபாவன் அப்பெருமான்' என்பதையும் காட்டுகின்றாள்.[32] இங்ஙனம் தோழியிடம் கூறிய ஆழ்வார் நாயகி, 'என்னை நையச் செய்து கொள்வதனால் பயன் என்ன? இங்கே இருந்து கொண்டு கடந்த செயலைச் சிந்திப்பதனால் பயன் என்ன? அவனை தொழுவோம், புறப்படு' என்று திருப்புல்லாணிக்குச் செல்லத் தோழியை ஆயத்தப் படுத்துகின்றாள்.[33] தலைவியிடம் எம்பெருமான் கலவி செய்ததற்கு சான்று பகர்வார் எவரேனும் உளரோ? என்று தோழி வினவ,

> ''கொங்குண் வண்டே கரியாக
> வந்தான் கொடியேற்கு''[34]
> [கொங்கு—தேன்; கரி—சாட்சி]

என்று மறுமொழி பகர்கின்றாள் ஆழ்வார் நாயகி. சான்று பகர்வாரையும் கூட்டிச் சென்று எம்பெருமானை வளைத்து மடக்கிவிடலாம் என்பது தோழியின் நினைப்பு.

அடுத்து, அவன் செய்த கலவி முறைகளை விவரிக்கின்றாள். ''பூங்கொத்துகளையுடைய ஞாழல் மலர்களை என் குழலில் சூட்டினான். இனி ஒரு நொடிப்பொழுது பிரிந்தாலும் உயிர் பிரிந்து விடும் என்னும்படியாக அளவுகடந்த அன்பைக் காட்டிப் பரிமாறினான்.அத்தனையும் பிரிவுக் குறிப்பாகவே செய்தான் போலும். பிரியேன் என்று சொன்ன வாய் மூடுவதற்கு முன்னரே பிரிந்து

31. பெரிதிரு. 9. 3. : 3 33. ஷை. 9. 3 : 1, 2,6.
32. ஷை. 9. 3. 5 34. ஷை. 9. 3 : 4

சென்றுவிட்டான். இவையே என் உள்ளத்தை வேகச் செய்கின்றன'' என்கிறாள்[35]. அப்படிபட்டவன் எழுந்தருளியிருக்கும் புல்லாணி செல்வதற்குத் தோழியை அழைக்கின்றாள். இரவு பகலெல்லாம் கண்துயிலாது வருந்துவதால் பயனில்லை என்கின்றாள்.[36]

''ஓதி நாமம்குளித் துச்சி
தன்னால் ஒளிமாமலர்
பாதம் நாளும் பணிவோம்
நமக்கே நலமாதலில்''[37]
[நாமம்—பெயர்; உச்சி—தலை]

என்று தன்னுடைய உபாய அநுஷ்டானத்தின் உறைப்பை வெளியிடுகின்றாள். பலனைப் பற்றிக் கவலையின்றி பக்தியுடையவளாக இருக்க எண்ணுகின்றாள்.

ஆயினும், ஆழ்வார் நாயகியின் முயற்சி பயன்படவில்லை. கால்நடை தாராதபடி தளர்ச்சியுண்டாயிற்று. ஆகவே, கண்ணிற் கண்ட பறவைகளைத் தூதுவிடுவது, தனக்கு முன் உள்ளார் நோவுபட்ட பொழுது எப்பெருமான் அவர்கட்கு உதவின்படியைச் சொல்வது, உறவினருடைய இதர வார்த்தைகளைக் கேளாதபடியான நிலைமை பிறந்தமையைச் சொல்வது என்ற முறைகளைக் கையாளுகின்றாள்.

''காவார் மடற்பெண்ணை
அன்றில் அரிகுரலும்
ஏவாயி னூடுஇயங்கும்
எஃகிற் கொடிதாலோ
பூவார் மணங்கமழும்
புல்லாணி கைதொழுதேன்
பாவாய்! இது நமக்கோர்
பான்மையே யாகாதே''[38]

35. பெரி.திரு. 9 3 : 5
36. ஷை. 9. 3 : 7
37. ஷை. 9 3 : 8
38. ஷை. 9. 4 : 1

[கா—சோலை; பெண்ணை—பனைமரம்; அரிகுரல் - தழுதழுத்த குரல்; ஏ—அம்பு; எஃகு—வேல்படை; பாவாய் - தோழியே, பான்மை - இயல்பு.]

திருப்புல்லாணியைத் தொழ நினைத்தவளுக்கு அன்றிற் பறவைகள் எழுப்பும் குரல் அம்புபட்ட வாயில் வேற் படை புகுத்தாற்போல் துன்புற்றவளுக்கு மேலும் துன்பத்தை விளைவிக்கின்றது. தனிமையாகத் துன்பப்படுவதே தன் இயல்பாயிற்றுப் போலும் என்று கருதுகின்றாள். இவ்விடத்தில் பெரிய வாச்சான் பிள்ளையின் வியாக்கியானம்: "மாறாடி வருவது மன்றிக்கே இது ஸ்பாவமாய் விட்டதே. நித்தியசூரிகள் நித்தியாநுபவம் பண்ணா நின்றார்கள். இவ்வருகுள்ளார் (சம்சாரிகள்) அநந்யபரராக (வேறிடத்தில் கருத்தற்றவராக) நின்றார்கள். நோவு படுகைக்கென்றே நம்மை மூன்றாம் விபூதியாகப் பண்ணி விட்டதாகாதே என்கிறாள்." இஃது இங்குச் சிந்தித்து மகிழத்தக்கது.

அடுத்து, தன் சிந்தைநோயை எம்பெருமானிடம் சென்று செப்புமாறு பறவைகளைத் தூது விடுகின்றாள். "தெய்வச் சிலையாற்கு என் சிந்தை நோய் செப்புமினே"[39] என்பது ஆழ்வார் நாயகியின் திருவாக்கு. 'அரியுருவாய் வந்து இரணியனை முடித்துப் பிரகலாதனுக்கு அருள் புரிந்த எம்பெருமான் நமக்கு அருள் புரிவது மிக அழகாக இருக்கிறது'![40] என்று தனக்குத் தானே சொல்லிக் கொள்ளுகின்றாள். அரிமலர்க்கண் நீர்ததும்பும் நிலையில். வில்லால் இலங்கையை அழித்த வல்லாளன் பின் போன நெஞ்சம் திரும்பி வருமளவும் பொறுத்திருக்க எண்ணுகிறாள்.

**"எல்லாரும் என்தன்னை**
**ஏசிலும் பேசிடினும்**
**புல்லாணி எம்பெருமான்**
**பொய்கேட் டிருந்தேனே."[41]**

39. பெரி. திரு. 9.4; 3 41. ஷை 9. 4 : 5
40. ஷை. 9. 4 : 4

[ஏசுதல்—பழித்தல்; பேசுதல்—கண்டித்துச் சொல்லுதல்.]

என்பது அவளது மனவுறுதியைக் காட்டுகின்றது. 'எம்பெருமானைத் தவிர மற்றவர்கள் மெய்யே சொல்லினும் அதனால் நமக்குப் பயன் இல்லை. எம்பெருமானது உரை பொய்யேயாயினும் அது தவிர வேறொன்று நமக்குப் புகல் இல்லை' என்கின்றாள் இவ்விடத்தில் பட்டர் சுவையாக அருளிய ''இராமாவதாரத்தில் மெய்யும் கிருஷ்ணாவதாரத்தில் பொய்யுமே நமக்குத் தஞ்சம்'' என்ற திருவாக்கு எண்ணி எண்ணி மகிழத்தக்கது.

அடுத்து, கண்ணனின் ஒரு வீரச்செயலை நினைந்துப் பேசுகின்றாள். 'குவலயாபீடம் போன்ற அசுரர்களை வேரோடு தொலைத்துத் தன் திருமேனியை அன்பர்கட்குக் காட்டி அவர்களைப் பூர்ணாநுபவம் பெறச் செய்த எம்பெருமான் நம் திறத்தில் அருள் செய்த அழகு என்னே!' என்கின்றாள்.[42] எல்லோர்க்கும் தண்ணென்றிருக்கும் இளம் பிறை தனக்கு மட்டிலும் நெருப்புக் கதுவினாற்போலிருக்கும் நிலையை எண்ணி வருந்துகின்றாள்.

**''தேம்பல் இளம்பிறையும்**
**என் தனக்கோர் வெம்தழலே.''[43]**
[தேம்பல்—மிக்க; தழல்—நெருப்பு.]

என்று ஆழ்வார் நாயகி சொல்லி வருந்துவதைக் காண்க. தான் உறக்கமின்றி வருந்துவதை,

**''ஓதமும் நானும்**
**உறங்கா திருந்தேனே.''[44]**
[ஓதம்—கடல்]

என்ற வரியில் வெளியிடுகின்றாள். ஓதவண்ணன் தனக்குப் பிரதிநிதியாக ஓதத்தை ஆளாக்கி வைத்தான் போலும் என்பது ஆழ்வார் நாயகியின் குறிப்பு.

42. பெரி திரு 9.4:8 44. ஷை 9.4:9
43. ஷை 9.4:8

இங்ஙனம் ஆழ்வார் பாசுரங்களில் ஆழங்கால் பட்ட வண்ணம் இருக்கும் நம்மைப் பேருந்து திருக்கோயிலின் வாயில் அருகில் இறக்குகின்றது. எம்பெருமானைச் சேவிக்கும் எண்ணம் உந்த திருக்கோயிலுள் புகுகின் றோம். பிராகாரத்தில் வந்து கொண்டிருக்கும்பொழுதே இராமபிரான் புல்லணைமீது தவக்கோலத்துடன் சேவை சாதிப்பதைக் காண்கின்றோம். அவனை வணங்கி அவ னருள் பெற்று வருங்கால் பட்டாபிராமன் சந்நிதியைக் கண்ணுறுகின்றோம். அப்பெருமானைச் சேவித்துக் கருவறைக்கு விரைகின்றோம். அங்கே வீற்றிருக்கும் திருக்கோலத்தில் கிழக்கே திருமுக மண்டலங்கொண்டு சேவை சாதிக்கின்றார் கல்யாண ஜகந்நாதர். இவரைத் தான் திருமங்கையாழ்வார் ''வேதமும் வேத வேள்வியும் விண்ணும் இருசுடரும் ஆதியும் ஆனான்''[45] என்று மங்களாசாசனம் செய்துள்ளார். தாயாரின் திருநாமம் கல்யாணவல்லி நாச்சியார். ஆதித்தாய் தந்தையர்களாகிய இருவரையும் உளம் உருகச் சேவிக்கின்றோம். திருமங்கை யாழ்வாரின் இரண்டு திருமொழிகளையும் மிடற்றொலியாக ஓதி உளங்கரைகின்றோம்.

''கலங்கல் இல்லாப்புகழான்
கலியன் ஒலிமாலை
வலங்கொள் தொண்டர்க் கிடமாவது
பாடுஇல் வைகுந்தமே.''[46]

[கலங்கல்—கலக்கம்; கலியன் — திருமங்கையாழ்வார், பாடு—துன்பம்]

என்றும்,

''மன்னவராய் மண் ஆண்டு
வான்நாடும் உன்னுவரே''[47]

[மண்—பூமி; வான் நாடு—பரமபதம்; உன்னுவர்— விரைந்தெழுவர்.]

என்னும் ஆழ்வார் கூறும் பலன் நமக்குத் தலைகாட்டியது போன்ற உணர்ச்சியுள் மூழ்கி நிற்கின்றோம்.

45. பெரி திரு. 9.4:9 47. ஷை 9.4:10
46. ஷை 9.3:10

இந்நிலையில் திவ்விய கவியின் பாசுரம் நினைவிற்கு வருகின்றது.

''மதயானைக் கோள்விடுத்து
மாமுதலை கொன்ற
கதையால் இதயம்
கரையும்—முதலாய
புல்லாணி மாலே!
புறத்தோர் புகழ்இருப்பு
வல்லாணி என்செவிக்கு
மாறு.''[48]

[மதயானை-கசேந்திரன்; கோள்-துன்பம்; விடுத்து-போக்கி; கதை-வரலாறு; முதல்ஆய-முழுதற்கடவுளாகிய; புறத்தோர்-பரமதேவதைகள்; இரும்பு-இரும்பாலாகிய;மாறு விரோதமான.]

என்ற பாசுரத்தையும் ஓதி உளங்கரைகின்றோம்.

இத் திருத்தலத்தில் புல்லர் முதலான முனிபுங்கவர்கள் ஜகந்நாதனைச் சரண் அடைந்து பரமபதம் பெற்றதாகப் புராண வரலாறு கூறுகின்றது. கடற் கடவுளும் சக்கரவர்த்தித் திருமகனை சரண் அடைந்து அவனது கருணைக்குப் பாத்திரனானதும் இத் திருத்தலத்தில்தான். ஆதலால் இத் திவ்விய தேசத்தில் சரணாகதி தத்துவத்தை அநுட்டிக்கின்றவர்கள் இம்மை மறுமைப் பயன்கள் எல்லாவற்றையும் எளிதில் பெறுவர் என்பது நம்பிக்கை.

இத்தலத்து எம்பெருமான் இராமபிரானுக்கு வில் ஒன்றை அளித்தான் என்பது புராண வரலாறு. அது காரணமாக இந்த எம்பெருமானுக்குத் தெய்வச் சிலையார், திவ்விய சாபன் என்ற பெயர்கள் நிலைத்துவிட்டன என்பதையும் அறிகின்றோம். திருக்கோயிலில் செப்புப் படிமங்கள் பல பூசையின்றிக் கிடக்கின்றன. இராமர்,

48. நூற். திருப். அந் 44

இலக்குவர், பரதர், சத்துருக்கனர் இவர்கள் படிமங்கள் கவனிப்பாரற்றுக் கிடக்கின்றன. இத் திருத்தலத்தில் புல்லர், கண்ணுவர், காலவர் முதலிய முனிபுங்கவர்கள் முத்தி அடைந்துள்ளனர். புல்லர் விரும்பியபடியே ஜகந்நாதன் தேவியர் மூவரோடும், நான்கு புயங்களோடும், பஞ்சாயுதங்களோடும், ஸ்ரீவத்சம், கௌஸ்துபம் விளங்க, பீதக ஆடை திகழ, திவ்விய ஆபரணங்களுடன் எழுந்தருளியிருப்பதாக வரலாறு கூறுகின்றது.

இத் தலத்தில் ஹேமதீர்த்தம், சக்கர தீர்த்தம் புகழ் பெற்றவை; எல்லாப் பாவங்களையும் போக்கவல்லவை. இத்திருத்தலத்தில் தேவலர் என்னும் முனிபுங்கவர் தவம் செய்யும்பொழுது சப்த கன்னியரும் அங்குள்ள திருக்குளத்தில் நீராடி அவரது தவத்தைக் குலைத்ததாகவும், முனிவர் சினமுற்று அவர்களை யட்சர்களாகச் சபித்ததாகவும் ஒரு வரலாறு வழங்கி வருகின்றது. அவர்கள் முனிவரைச் சாபவிமோசனம் கோரியபொழுது அவரும் புல்லணையில் புல்லர் வழிபட்ட புல்லாணி எம்பெருமானை வழிபட்டு சாபவிமோசனம் பெற்றுய்யுமாறு அருளியதையும் அறிகின்றோம்[49].

'அசுவத்த விருட்சம்' என்னும் அரசமரமே இத்தல விருட்சமாக வழங்கி வருகின்றது. இதற்கும் ஒரு புராண வரலாறு உண்டு. ஆதியில் பரந்தாமன் தன்னிடமிருந்த படைப்புத்தொழிலைத் தான் படைத்த நான்முகனிடம் ஒப்படைத்தார் என்றும், படைத்தல் பொறுப்பை மேற்கொண்ட நான்முகன் தெற்கு நோக்கி வந்தபொழுது கோடிக்கதிரவர்களின் ஒரு பேரொளி தோன்றி மறைந்ததென்றும், அதன் இரகசியம் என்னவென்று நான்முகன பரந்தாமனை, வினவ, அவனும் அதுவே போதிமரம் என்றும், அதன் அடியில்தான் ஜகந்நாதன் தங்குகின்றான் என்றும் கூறியதாக வரலாறு. அது

49. போதி மரத்தடியில் ஞானம் பெற்ற புத்தரையும் விஷ்ணுவின் அவதாரமாகக் கொண்டது இதுவே காரணம் போலும்.

காரணமான போதி என்னும் அரசமரம் ஜகந்நாதனுக்கு நிழல்தரும் தருவாக அமைந்துள்ளது என்பதனையும் அறிகின்றோம்.

இத் திருத்தலத்தில் இரவில் எம்பெருமானுக்குப் படைக்கப் பெறும் திருக்கண்ணமுது (திருக்கன்னல் அமுது?) அதாவது பால் பாயசம் மிக்க சுவையுடையது. பகலில் எம்பெருமானைச் சேவிக்க வரும் அடியார்கள் நினைவாக அர்ச்சகரைக் கேட்டால் அவரும் இதற்காகவே எடுத்து வைத்திருக்கும் திருக்கண்ணமுதினைத் தருவார்; சுவைத்து மகிழலாம்.

இங்குள்ள ஆதிசேதுவின் காவலரே இராமநாதபுரம் மன்னர்கள். சேதுக்கரையையும் சேர்ந்த பகுதியின் மனனர்களர்களாக இருப்பதால் அவர்களைச் சேதுபதிகள் என வழங்கினர். திருப்புல்லாணித் திருக்கோயில் தோன்றிய காலம் உறுதியாகத் தெரியவில்லை. பரராஜ சேகர ராஜா காலத்தில் அது கட்டப் பெற்றதாக வரலாற்றால் அறிகின்றோம். சேதுபதிகள் இக் கோயில் காரியங்கள் நடைபெற இருபத்தேழு கிராமங்களை வழங்கியுள்ளனர். அதற்குத் தாமிர சாசனங்களும் ஓலைச் சாசனங்களும் உள்ளன. கி. பி. பதினேழாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் சேதுபதியாக இருந்த **கிழவன் சேதுபதி** என்னும் **இரகுநாத சேதுபதி** அவர்கள் பதினொரு கிராமங்களைத் தானமாக அளித்த செய்தியை அறிகின்றோம். இவருக்குப் பின்னர் ஆட்சிக்கு வந்த **விஜயரகுநாத சேதுபதி, முத்துராமலிங்க சேதுபதி** முதலியவர்களும் பல நிபந்தங்களை ஏற்படுத்தியுள்ளனர். திருக்கோயிலுக்குச் சொந்தமாகப் பல உப்பளங்கள் உள்ளன. மன்னார் வளைகுடாவில் நடைபெறும் முத்துக் குளிப்பிலும் இத் திருக்கோயிலுக்கு ஒரு பங்கிருப்பதாக அறியக் கிடக்கின்றது. இத்தகைய செய்திகளை அறிந்த வண்ணம் மனநிறைவுடன் **தேவிபட்டணம, நவபாஷாணம்** முதலிய இடங்களைப் பார்க்க வேண்டும் என்ற எண்ணத்துடன் இராமநாதபுரம் திரும்புகின்றோம்.

# 4. மதுரைக் கூடல் அழகர்

பண்டைக்காலத்தில் நம் நாட்டில் தமிழுக்கும் நாகரிகப் பண்பிற்கும் ஒரு வளர்ப்புப் பண்ணையாகத் திகழ்ந்தது மதுரைமாநகர். இன்றும் தமிழ் நாட்டின் ஒரு முக்கிய பெருநகராகத் திகழ்கின்றது அது. மதுரை மாவட்டத்தின் தலைநகராகவும் தமிழகத்தின் இரண்டாவது பெருநகராகவும் விளங்கும் அந்நகர் இரண்டாண்டுகட்கு முன்னர் மாநகராட்சியின் (Corporation) நிலையினையும் அடைந்தது. கோயிலை நடுவாக அமைத்து இந்நகரை நிர்மாணித்த நகர மைப்புப் பொறிஞரின் அறிவு நுணுக்கத்தை இன்றைய பொறிஞர்கள் வியந்து போற்றுகின்றனர். மதுரையின் இதயம் போலமைந்த 'மீனாட்சிக் கோயில்' இன்றும் புகழோங்கி நிற்கின்றது. சிற்பக்கலைஞர்கள் வியந்து போற்றும் வேலைத்திறங்கட்கும் பொது மக்களின் பக்திக் காதலுக்கும் ஒரு கருவூலமாகத் திகழ்கின்றது மதுரைக்கோயில். இந்தக் கோயிலில் பண்டையத் தமிழ்ச் சங்கம் இருந்தது; தமிழாராய்ச்சியும் நடைபெற்றது. மதுரைச் சொக்கலிங்கப் பெருமானும் 'நன்பாட்டுப் புலவனாய்ச் சங்கம் ஏறி' புலவரோடு புலவராக, தமிழ்ப் பெரும் புலவராக இருந்தார் என்று தமிழுள்ளம் கற்பனை செய்துள்ளது.

மதுரையைத் தலைநகரமாகக் கொண்டு ஆண்டவர்கள் பாண்டிய மன்னர்கள். அவர்கள் பாரத காலத்திலேயே பெரும் புகழ் பெற்றிருந்தனர். பாண்டியன்

மகள் சித்திராங்கதை அர்ச்சுனனை மணந்து கொண்ட கதை வடநாட்டுடன் தென்னாட்டைத் தொடர்புறுத்தி தேசிய ஒருமைப்பாட்டின் சிறப்பினை விளக்குவதாக அமைந்துள்ளது. அது மட்டுமா? கிரேக்க நாட்டுடனும் உரோமாபுரி ஏகாதிபத்தியத்துடனும் வாணிக உறவு கொண்டு,

"யாதும் ஊரே; யாவரும் கேளிர்!"[1]

என்பது போன்ற உயர்ந்த குறிக்கோள்கட்கு ஒருவளர்ப்புப் பண்ணையாகவும் திகழ்ந்தது பாண்டியராட்சி. ஜாவா, சுமத்ரா, கடாரம் முதலிய வெளிநாடுகளுடன் வாணிகத் தொடர்பும் கலைத் தொடர்பும் தமிழகம் பெறுவதற்கு மதுரை மன்னர்களும் பெருமுயற்சியினை மேற்கொண்டிருத்தல் வேண்டும். மதுரைமாநகரம் பாண்டியராட்சியில் உலகப் புகழ் பெற்று அடைந்திருந்த அரசியல் சிறப்பு, வாணிகச் சிறப்பு, கல்விச் சிறப்பு, கலைச்சிறப்பு ஊரமைப்புத் திறம் முதலிய செய்திகளை 'சிலப்பதிகாரம்' என்ற செந்தமிழ்க் காவியத்தால் அறியலாம். வரலாற்றுப் புகழும், காவியப் புகழும், புராணப்புகழும், பிரபந்தப் புகழும் ஒருங்கே திகழப் பெற்ற மதுரை பெரியாழ்வாரின் பாமாலை ஒன்றும் சூடிப்பெருமிதம் பெற்றிருப்பதை அறிகின்றோம்.

பெரியாழ்வார் காலத்துப் (8-ஆம் நூற்றாண்டு) பாண்டிய அரசனை ஸ்ரீவல்லபதேவன் என்று வைணவ ஆசாரியார்கள் குறிப்பிட்டுள்ளதை அறிகின்றோம். இந்த அரசனை கோநெடுமாறன்[2] என்று குறிப்பிடுவர் பெரியாழ்வார். இந்தப் பாண்டியனைப் பராந்தகன்-நெடுஞ்சடையனின் தந்தையாகிய மாறவர்மன் என்று கருதுவர் பேராசிரியர் மு. இராகவய்யங்கார் அவர்கள்.[3] இவன் காலத்தில்தான் மதுரைக்குப் பெரியாழ்வாரின்

1. புறம்-192.
2. பெரியாழ் திரு-4.2:7
3. சாஸனத் தமிழ்க் கவிசரிதம்.

பாமாலை கிடைத்தது. இந்தப் பாமாலை பிறந்த இடம் தான் 'திருக்கூடல்' என வழங்கும் தென் மதுரையாகும். அந்தத் திவ்விய தேசத்துக்கு இன்று புறப்பட வேண்டும் என்பது நமது திட்டம்.

இருப்பூர்தி நிலையத்திற்கு எதிரிலுள்ள நாம் தங்கியிருக்கும் மங்கம்மாள் சத்திரத்தில் அதிகாலையில் எழுந்து நீராடுகின்றோம். தூய ஆடை அணிந்து திருக்கோயிலுக்குப் போகச் சித்தமாகின்றோம். இந்தத் திருக்கோயில் சத்திரத்திற்கு அருகிலுள்ளது. சத்திரத்திலிருந்து தெற்கு நோக்கி நடந்தால் சுமார் 100 கெஜ தூரத்தில் உள்ளது கட்டபொம்மன் சிலை. மதுரைப் பேருந்து நிலையத்திற்கு வெளியில் நாற்சந்தியிலுள்ள இந்தச் சிலையைக் கடந்து தெற்குநோக்கி நடந்து டி. வி. எஸ். தொழிற்சாலையை அடைகின்றோம். அதற்கு நேராகக் கிழக்கு நோக்கிச் செல்லும் சாலை வழியாக மேலும் 100 கெஜ தூரம் நடந்து உயர்ந்த மதில்களால் சூழப்பெற்றுள்ள திருக்கோயிலை அடைகின்றோம். இராஜகோபுரத்தைக் கடந்து முதல் பிராகாரத்தை அடைகின்றோம். பிராகாரத்தின் தென்புறத்தில் தனி வளைவில் தாயார் சந்நிதியும் அதன் வடபுறத்தில் தனி வளைவில் ஆண்டாள் சந்நிதியும் உள்ளன. கூடலழகர் சந்நிதி மூன்று தளங்களில் அமைந்துள்ளது.

தரைத்தளத்தில் (Ground Floor) மூலவர் ஆகூய வரதன் வீற்றிருக்கும் திருக்கோலத்தில் சேவை சாதிக்கின்றார். இவரையே சிலப்பதிகார அரும்பத உரையாசிரியர் இருந்தவளமுடையார் என்று குறிப்பிடுவார். உற்சவர் வியூக செளந்தரராஜன் என்ற திருநாமம் கொண்டவர். அடுத்து முதல் தளத்திலுள்ள (First Floor) மூலவராகிய எம்பெருமான் . சயனத் திருக்கோலத்தில் காட்சி தருகின்றார். இவரையே சிலப்பதிகார உரை ஆசிரியர் அடியார்க்கு நல்லார் அந்தரவானத்து எம்பெருமான்' என்று குறிப்பிடுவதாகக் கொள்ளலாம். இவர்,

இருக்கும் தளத்திற்கு மேலுள்ள தளத்தில் (Second Floor) நின்ற திருக்கோலத்தில் சேவை சாதிப்பவரே **சூரிய நாராயணன்** என்பவர். இவரைச் சுற்றிலும் நவக்கிரகச் சித்திரங்கள் வரையப்பெற்றுள்ளன. இந்த மூன்று எம்பெருமான்களும் கிழக்கு நோக்கியே திருமுக மண்டலம் கொண்டுள்ளனர். இவர்கள் மூவரையும் சேவித்துவிட்டுத் தாயார் சந்நிதிக்கு வருகின்றோம். தாயாரின் திருநாமம் **மதுரைவல்லி நாச்சியார்** என்பது. இவர் வகுளவல்லி நாச்சியார், மரகதவல்லி நாச்சியார், வரகுணவல்லி நாச்சியார் என்ற திருநாமங்களாலும் வழங்கப்பெறுகின்றார். இவரைச் சேவித்து இவர் அருளைப் பெற்றுக் கொண்டு பிராகாரத்தில் வலமாகச் சுற்றி வந்து ஆண்டாள் சந்நிதியை அடைகின்றோம். அவரையும் சேவித்துக் கொண்டு கோயில் முகப்பினை அடைந்து ஓரிடத்தில் அமர்ந்து இத்திருக்கோயில்பற்றிய வரலாற்றுக் குறிப்புகளில் நம் சிந்தனையை ஓட விடுகின்றோம். பழுதடைந்த இத்திருக்கோயில் செட்டி நாட்டுத் தனவணிகர் ஒருவரால் நல்ல திருப் பணி செய்யப் பெற்றுள்ளது. இந்தத் திவ்விய தேசத்து எம்பெருமானைத் திருமங்கை மன்னன் மட்டிலும்,

''கோழியும் கூடலும்''[4]

என்ற ஒரே சொற்றொடரால் மங்களாசாஸனம் செய்துள்ளார். இங்குக் 'கூடல்' என்பது இந்தத் திவ்விய தேசம் 'கோழி' என்பது உறையூரிலுள்ள திவ்விய தேசம். சோழ நாட்டைச் சார்ந்தது. அந்த எம்பெருமான் பெற்ற மங்களாசாஸனமும் இவ்வளவே.

மதுரைமாநகர் பெரியாழ்வாரின் பாமாலை பெற்றதாக மேலே குறிப்பிட்டேன் அல்லவா? அந்தப் பாமாலைதான் **'திருப்பல்லாண்டு'** என்ற பிரபந்தம். அஃது கூடலகர் விஷயமாக ஏற்பட்டதாகப் பெரியோர் பணிப்பர். இதுதான் வரலாறு: ஸ்ரீவல்லபனின் ஆட்சி

4. பெரி. திரு. 9-2:5

சிறப்பாக நடைபெற்று வந்தது. அவன் பல இரவு களில் மாறுவேடம் பூண்டு நகர் சோதனைகளில் குடி மக்களின் சுகதுக்கங்களின் தேவைகளையும் நேரில் அறிந்து கொள்வதில் அக்கறையுள்ளவனாக இருந் தான். ஓரிரவு அவன் ஒரு தெருத் திண்ணையில் உறங்கிக் கொண்டிருந்த ஒருவனை எழுப்பி, "தாங்கள் யார்? இருப்பிடம் எது? இங்கு வந்த நோக்கம் யாது?" என்று வினவினான். அதற்கு அந்த யாத்திரிகன் தான் கங்கை நீராடி வருவதாகவும், ஸ்ரீ வல்லபர் ஆட்சியில் மதுரை அடைந்திருக்கும் சிறப்பையும் அழகையும் பார்த்துவிட்டு சேது தரிசனம் செய்யப்போவதாகவும் மறுமொழி பகர்ந்தான். நிலவொளியில் திருத்தலப் பயணி யின் முகப்பொலிவைக் கண்ணுற்ற மன்னன் அதனால் கவரப்பெற்று, "பெரியீர், வாழ்க்கைப் பயணத்திற்கு வழி கண்டிருப்பின் தாங்கள் அதனை அடியேனுக்கும் காட்ட வேண்டும்" என்று வேண்டினான்.

அந்தப் பயணி மறுமொழியாக வடமொழி சுலோகம் ஒன்றினைக் கூறினான். அதன் பொருள்: 'மழைக்காலத்தில் வேண்டியவற்றுக்காக மற்ற எட்டு மாதங்களில் முயற்சி செய்யவேண்டியது; இரவுக் காலத்தின் தேவைக்காக பகலில் முயற்சி செய்ய வேண்டியது; முதுமையில் வேண்டியவற்றிற்காக இள மையில் முயற்சி செய்யவேண்டியது; இங்ஙனமே, மறுமைக்கு வேண்டியவற்றை இம்மையிலே முயன்று பெற வேண்டியது' என்பதாகும்.

மறுநாள் அரசன் அத்தாணி மண்டபத்திற்கு வந்தான். அவன் முகத்தில் பொலிவு காணப்பெறவில்லை; கவலை படர்ந்திருந்தது. அப்போது அவண் போந்த அரச புரோகிதரான செல்வ நம்பி அரசனின் குறைக்குக் காரணம் வினவினார் அரசன் முதல் நாள் இரவில் நடந்ததை அறிவித்தான். இருவரும் கலந்து வாழ்க்கையின் நால்வகைப் பொருள்களையும் (புருஷார்த்தங்கள்) அளிக்க

வல்ல பரதத்துவத்தை அறுதியிடும் வழியை ஆராய்ந்தனர். இறுதியில், பொன்னும் மணியுமாக அளவற்ற பொருளை ஒரு சீலையில் முடிந்துக் கட்டி அந்தப் பொற்கிழியை அவையின் நுழைவாயிலில் தொங்கவிட்டனர். சாரமான சமய உண்மையைப் பிரமாணங்களால் மெய்ப்பிக்கும் பெரியோருக்கு அது உரியது என்று பறையறைவித்து நாடெங்கும் அறிவித்தனர்.

குறிப்பிட்ட நாளில் பல்வேறு சமயத்தினர் மதுரையில் வந்து திரண்டனர். செல்வ நம்பி தம்முடைய நண்பரான விஷ்ணுசித்தரும் (பெரியாழ்வாரும்) வில்லிபுத்தூரிலிருந்து எழுந்தருளுவார் எனக்கருதினார். வில்லிபுத்தூர் எம்பெருமான் விஷ்ணுசித்தரின் கனவில் தோன்றி மதுரைக்கு ஏகுமாறு பணித்தார். விஷ்ணுசித்தரும் எம்பெருமான்மீது பாரத்தைப் போட்டு பாண்டியன் அனுப்பிய பல்லக்கில் மதுரைக்கு ஏகினார். பக்த குழாங்களும் அவரைப் பின்தொடர்ந்தன. குறித்த நேரத்தில் வாதப்போர் தொடங்கியது. ஒவ்வொரு சமயத்தவரும் தத்தம் வாதப்போர்களை மும்முரமாகத் தொடங்கினர். இந்நிலையில் விஷ்ணு சித்தர் வருகை அவைக்கு அறிவிக்கப் பெற்றது. அரசனும் புரோகிதரும் அவரை வணங்கிச் சீரிய சிங்காதனத்தில் அமரச் செய்தனர். எல்லோருடைய வாதங்களும் முடிந்த பின்னர் விஷ்ணு சித்தர் தம் வாதத்தைத் தொடங்கினார். சமயவாதியர் விடுத்த வினாக்கட்கெல்லாம் அமைதியாக மறுமொழி பகன்றார். அவர்களுடைய பொறாமையைப் பொறுமையாலும், பகைமையுணர்ச்சியை அன்புணர்ச்சியாலும் வென்றார். தீய எண்ணங்களை நல்ல எண்ணங்களால் எதிர்த்தார். அறியாமையை அறிவினாலும், வீண் பெருமையைப் பணிவினாலும் வென்று வாகை சூடினார். கமலைக் கேள்வனுடைய கருணையைக் கனக்க நம்பியிருந்த அவருக்குச் சாத்திர உண்மைகள் யாவும் அங்கை நெல்லியாகத் தெளிவாயின. அவனுடைய அருளால் இதர சமயக்கொள்கைகளை எல்லாம் சுருதி,

சுமிருதி, இதிகாசங்களின் துணையாலும் தமது யுக்தியாலும் கண்டித்து தமதுகொள்கை இன்னதென அறுதியிட்டு உணர்த்தினார்.

காரணமில்லாத காரியமே இல்லை என்று தருக்க முறையில் நிலைநாட்டி இவ்வுலகின் காரணப்பொருளே கடவுள் என்று அறுதியிட்டார். "எந்த ஒரு பொருளால் எல்லாப் பொருள்களும் உண்டாகின்றனவோ, எந்தப் பொருளால் எல்லாப் பொருள்களும் நிலைபெறுகின்றனவோ, எல்லாப் பொருள்களும் இறுதியில் எந்தப் பொருளுடன் சேர்ந்து விடுகின்றனவோ, அந்தப் பரம் பொருளே கடவுள்" என்றார். அந்தப் பரம்பொருளே நாராயணன் என்றும், அவனைச் சரணமடைவதே வீடு பேறு அடையும் வழி என்றும் விரிவாக விளக்கினார். எல்லாச் சமயவாதிகளும் வாய் திறக்க வழியின்றி நாணித் தலை கவிழ்ந்தனர். கம்பத்தின் உச்சியில் கட்டப்பெற்றிருந்த பொற்கிழியும் ஆழ்வார் முன்னதாகத் தானாக இழிந்தது. அதனைக் கண்ணுற்ற அரசனும் துண்ணென எழுந்து ஓடி அக்கிழியை அறுத்துக் கொண்டு வந்து விஷ்ணு சித்தர் அடிகளில் வைத்து வணங்கினான். விஷ்ணுசித்தரும் அரசனை விரைந்தெடுத்து ஆசி கூறினார்.

விஷ்ணுசித்தரின் வெற்றியைக் கொண்டாடும் வகையில் ஒரு பெருவிழா எடுத்தான் ஸ்ரீவல்லபன். அவரைப் பட்டத்து யானையின் மீதேற்றி நகர்வலஞ் செய்வித்தான். மங்கள வாத்தியங்கள் அதிர்ந்தன. வெண்கொற்றக்குடை நிழற்ற இருமருங்கும் கவரிகள் வீச, வித்துவான்கள் கட்டியம் கூற உலாவரும் ஆழ்வார்க்கு பட்டர்பிரான் என்ற விருதையும் அளித்துப் பாராட்டினான் பாண்டியமன்னன். இதனை அங்கீகரிப்பதுபோல் பண்டிதர்கள் யாவரும் கைகொட்டி வரவேற்றனர். மக்கள் திரள்களிலிருந்து "விஷ்ணுசித்தர் வாழ்க! பட்டர்பிரான் வாழ்க!" என்ற வாழ்த்தொலிகள்

விண்ணை முட்டின. மகனுடைய விழாவைக் காண வரும் பெற்றோர்போல் பரமபதநாதன் பிராட்டிமாருடன் பெரிய திருவடிமீது வந்து தோன்றினான்.[5] வருணிக்க முடியாத அழகோடும் நினைக்க முடியாத ஆற்றலோடும் அருளோடும் இந்திரன், நான்முகன் முதலாய தேவ கணங்கள் சூழ, திருவாழி திருச்சங்கு முதலிய திவ்விய ஆயுதங்களுடனும் தேவியாருடனும் கருடன் மீது காட்சி தந்த திவ்வியமங்கள சோதியைச் சேவித்ததும் விஷ்ணு சித்தரின் பரமபக்தி பாட்டாக வெளிப்படுகின்றது. அந்தத் தேவாதி தேவனுடைய சர்வ சக்தத்துவம் முதலிய திருக்குணங்களை அநுசந்திப்பதற்கு முன்னே சௌந்தர்யம், சௌகுமார்யம், இலாவண்யம் முதலிய திருக்குணங்களில் கண்செலுத்தி அவற்றையே சேவித்து ஈடுபட்டு ஆழ்ந்து பக்திப்பரவசராகின்றார். இதனால் தம்முடைய நிலையையும் எம்பெருமானுடைய நிலையை யும் மறந்து, "காலம் நடையாடாத பரமபதத்தில் இருக்கும் எம்பெருமானின் சேர்த்தியழகு காலமும் அசுரசக்திகளும் நடையாடுகின்ற இவ்வுலகில் வந்து நிற்கின்றதே. பாவி களின் கண்ணெச்சில்பட்டு எம்பெருமானுக்கு என்ன தீங்குவருமோ?" என்று அஞ்சியவர்போல் யானைக்கழுத் தின் மேல் கிடக்கும் மணிகளையே கைத்தாளமாகக் கொண்டு பல்லாண்டு பாடத் தொடங்குகின்றார்.

"பல்லாண்டு பல்லாண்டு
பல்லா யிரத்தாண்டு
பல்கோடி நூறாயிரம்",

என்று ஆநந்தக் கண்ணீர் அருவிசோரப் பாடல் வெளி படுகின்றது. "பல்லாண்டு" என்று ஒரு தடவை சொன்னால் போதாதா? 'பல்லாண்டு, பல்லாண்டு'

5. இங்ஙனம் ஆழ்வார்க்குச் சேவை சாதித்த எம் பெருமான் திருக்கோயிலின் அஷ்டாங்க விமானத்தின்மீது எழுந்தருளியிருக்கும் "வையந்தாய பெருமான்" என்று பெரியோர் பணிப்பர்.

என்றும், 'பல்கோடி நூறாயிரம், பல்லாண்டு' என்றும் ஆசைதீரப் பாடுகின்றார்.—தாகவிடாய் உள்ளவன் 'தண்ணீர், தண்ணீர்' என்று கூறுவது போலே. அதிக அச்சத்தால் ஆழ்வார் இங்ஙனம் மங்களாசாசனம் பண்ணுகின்றார் என்பதையறிந்த எம்பெருமான், திண்மை வாய்ந்த தன் தோள்களைக் காட்டியருள்கின்றான். அச்சம் தனியக் காட்டிய அத்தோளழகு ஆழ்வாரின் அச்சம் அதிகரிக்கவே காரணம் ஆகின்றது. ஆகவே, மீண்டும் மங்களாசாசனம் செய்து பல்லாண்டு பாடு கின்றார்,

> "பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு
> பல்கோடி நூறாயிரம்
> மல்லாண்ட திண்தோள் மணிவண்ணா! உன்
> சேவடி செவ்வி திருக்காப்பு"[6]

[செவ்வி அழகு : திருக்காப்பு-குறைவற்ற காவல் ஏற் படுவதாக.]

என்பதாக. இந்த மங்களாசாசனப் பதிக்கத்தில் பன்னிரண்டு பாசுரங்கள் உள்ளன. 'பல்லாண்டு பல்லாண்டு' என்று தொடங்கும் முதற் பாசுரத்தைப் பல்லவிபோல் ஒவ்வொரு பாசுரத்தோடும் சேர்த்துப் பாடுகின்றனர்.

இந்த வரலாற்றைப் பிற்கால ஆசிரியர்களில் ஒருவரான பாண்டிய பட்டர் என்பார்,

> "பாண்டியன் கொண்டாடப்
> பட்டர்பிரான் வந்தானென்(று)
> ஈண்டிய சங்கம்
> எடுத்தூத - வேண்டிய
> வேதங்கள் ஓதி
> விரைந்து கிழியறுத்தான்
> பாதங்கள் யாருடைய
> பற்று."[7]

6. திருப்பல்—1
7. திருப்பல்—தனியன்.

[ஈண்டிய-திரண்ட; சங்கம்-சங்கு; பற்று-புகலிடம்: யாமுடைய பற்று-நம்முடைய புகலிடம்.]

என்று குறிப்பிடுவர். இந்த ஆசிரியரே இன்னொரு வெண்பாவினால் விஷ்ணு சித்தர் கிழியறுத்த கதையை வைணவர்களின் நினைவில் நிலைபெறச் செய்துள்ளார்.

''மின்னார் தடமதில்சூழ்
வில்லிபுத்தூர் என்றொருகால்
சொன்னார் கழற்கமலம்
சூடினோம்,—முன்னாள்
கிழியறுத்தான் என்றுரைத்தோம்
கீழ்மையினில் சேரும்
வழியறுத்தோம் நெஞ்சமே
''வந்து.''[8]

[மின் ஆர்-ஒளிநிறைந்த; தடமதில் அகன்றமதில் ஒரு கால்-ஒரு தரம்; தழல் கமலம்-அடித்தாமரை: சூடினோம் தலை மேல் கொண்டோம்-]

பாண்டியபட்டர் சொல்லுகிறபடியே இக்கதை பல நூற்றாண்டுகளாக வைணவப் பெருமக்களுக்குக் கீழான நெறியை அகற்றி மேலான நெறியினைக் காட்டி வந்திருக்கின்றது. பல்லாண்டு பாடிய பட்டர்பிரானும் 'பெரியாழ்வார்' என்னும் ஒரு புதிய திருநாமம் பெற்று வைணவ ஞானச் சுடர்களான பன்னிரண்டு ஆழ்வார்களுள் ஒருவராகத் திகழ்கின்றார்.

மற்றைய ஆழ்வார்களும் பரம பக்தியினால் எம்பெருமானுக்கு மங்களாசாஸனம் செய்துள்ளார்கள் என்பது உண்மையே. 'பகவானுக்குக் குறையொன்றும் இல்லாமல் இருப்பதே நமக்கும் மங்களம்!' என்று செய்துள்ளார்கள் அவர்கள். ஆனால் இப்பெரியாழ்வாரோ சர்வரட்சகனையும் இரட்சிக்க வழி தேடித் தடுமாறுவது

8. திருப்பல்—தனியன்.

போல் 'திருப்பல்லாண்டு'பாடியுள்ளார்; எம்பெருமானுடைய வாழ்வையே தமது வாழ்வாக நினைத்துப் போற்றியுள்ளார். இந்த முறையில் இவர் ஏனைய ஆழ்வார்களினும் பெரியராதலின், 'பெரியாழ்வார்' என்ற திருநாமம் பெற்றார் என்பது மணவாளமாமுனிகளின் திருக்குறிப்பு.

> **மங்களா சாசனத்தில்**
> **மற்றுள்ள ஆழ்வார்கள்**
> **தங்கள் ஆர் வத்தளவு**
> **தான் அன்றிப் - பொங்கும்**
> **பரிவாலே வில்லிப்புத்தூர்ப்**
> **பட்டர்பிரான் பெற்றான்**
> **பெரியாழ்வார் என்னும்**
> **பேயர்."[9]**

[ஆர்வத்து அளவு—நிறைந்த அன்பின் அளவு: பரிவு—இரக்கத்துடன் கூடிய பேரன்பு.]

என்பது பாசுரம். ஆழ்வார்களுக்கு உரிய ஆர்வத்தையும் மிஞ்சிப் பொங்கிய பரிவால் பல்லாண்டு பாடிய காரணமாக விஷ்ணு சித்தருக்குப் பெரியாழ்வார் என்ற பட்டம் கிடைத்தது என்பது மாமுனிகளின் கருத்து.

பல்லாண்டு பாடிய பெரியார் தாம் வளர்த்த அன்பு மகளை எம்பெருமானுக்கு அளித்து 'இறைவனுக்கும் மாமனார்' என்று மதிக்கப் பெற்ற குறிப்பும், தாயுள்ளம் கொண்டு தம் அழகுத் தெய்வமாகிய கண்ணனைத் தமது பாவனையாலேயே தமது திருமொழியில் வளர்த்து விட்ட குறிப்பும் 'பெரியாழ்வார்' என்ற பேரிலும் புகழிலும் புதைபொருளாக அமைந்து விட்டதைக் கண்டு மகிழலாம். பாண்டிய மன்னன் அளித்த 'பட்டர்பிரான்' என்ற பட்டத்தை விட இத் திருநாமம் புகழ் பெற்று

9. உப. ரத். மாலை—18

விட்டது. குரு பரம்பரையில் இவர் வரலாற்றிற்குப் 'பெரியாழ்வார் வைபவம்' என்றும், நாலாயிரத்தில் இவர் பாசுரங்கட்குப் 'பெரியாழ்வார் திருமொழி' என்ற தலைப்புகளும் அமைந்து அப் புகழ் நிலைபெற்றும் விட்டது.

பல்லாண்டு அருளிய பெரியார் மூலமாக வில்லிபுத்தூர் மதுரைக்கு வழங்கிய செல்வம் வைணவர்களின் பொது உடைமையாகி பக்தி நெறிக்கே ஒரு புதிய அழகினையும் பொலிவினையும் தந்து நிற்கின்றது.

> "உண்டோ திருப்பல்லாண்டுக்(கு)
> ஒப்பதோர் கலைதான்?
> உண்டோ பெரியாழ்வார்க்(கு)
> ஒப்ப ஒருவர்?"[10]

என்று வைணவ உலகம் இன்றும் பல்லாண்டு பாடிய பட்டர்பிரானை வியந்து பாராட்டுகின்றது; போற்றுகின்றது.

**பண்டைய இலக்கிய குறிப்புகள் :** பண்டைய இலக்கியக் கருவூலத்தில் ஏதாவது இத்திருக்கோயில் பற்றிய குறிப்புகள் உள்ளனவா என்று நம்மனம் ஆராயத் தொடங்குகின்றது. சிலப்பதிகாரத்தில் வையை நெடுமாலைப் பற்றி ஒரு குறிப்பு வருகின்றது. 'துன்பமாலையில்' மாதரி என்னும் ஆயர் முதுமகள் ஆய்ச்சியர் குரவை முடிந்ததும் வையையாற்றின் கரையிடத்துள்ள நெடுமாலைப் பூசிப்பதற்குச் சென்றாள் என்ற செய்தியை,

> "ஆயர் முதுமகள் ஆடிய காயலாள்
> பூவும் புகையும் புனைசாந்தும் கண்ணியும்
> நீடுநீர் வையை நெடுமால் அடியேத்தத்
> தூவித் துறைப்படியப் போயினாள்"[11]

10. மணவாளமாமுனிகள் அருளியது—20 (2.ர.மா)
11. சிலப்-துன்பமாலை, அடி (1-5)

என்ற அடிகளால் அறிகின்றோம். 'வையை நெடுமால்' என்பதற்குச் சிலப்பதிகார அரும்பத உரையாசிரியர் 'ஸ்ரீ இருந்தவளமுடையார்' என்று விளக்குவர். இருந்த வளமுடையார்—இருந்த திருக்கோலத்தில் வளப்பமுடையார். இத்திருக்கோயிலின் தரைதளத்தில் எழுந்தருளிய எம்பெருமான் இருந்த திருக்கோலத்தில் இருப்பதால்அவரையே இச்சொற்றொடர் குறிப்பதாகக்கூறுவர்பேராசிரியர் மு. இராகவய்யங்கார் சுவாமிகள். இப் பெயர் இப்போது கூடல் அழகருக்கு வழங்கவில்லையேனும், அப்பெருமானது இருந்த திருக்கோலம் ஆங்கு வந்து சேவிப்போருக்குப் பேரானந்தம் தரத்தக்க வண்ணம் இன்றும் இருப்பதால் இப் பெயர் வழங்கியதாதல் வேண்டும் என்றும் வற்புறுத்துவர் அந்த அறிஞர்[12] திருமாலைத் துதிக்கும் அடியார்கள் அப்பெருமானது நின்ற, இருந்த, கிடந்த திருக்கோலங்களைச் சிறப்பிக்கும் மரபினை நாம் நன்கு அறிவோம். எனவே, இருந்த திருக்கோலத்துடன் திருமால் எழுந்தருளிய இத் திருப்பதியை 'இருந்தவளம்' எனவும் அப்பெருமானை'இருந்தவளமுடையார்' எனவும் கொள்ளல் பொருத்தமேயன்றோ? திருவாலவாவுடையார் என்று சிவபிரானைக் கூறும் வழக்குகளையும் ஈண்டுச் சிந்தித்தல் தகும்.

சிலப்பதிகார உரையாசிரியராகிய அடியார்க்கு நல்லார் 'வையை நெடுமால்' என்ற தொடருக்கு 'அந்தரவானத்து எம்பெருமான்' என்று உரை எழுதுவர். இந்த விளக்கமும் கூடல் அழகர் பற்றியதே என்று கொள்ளல்தகும். இத்திருக்கோயிலின் மேல் தளத்தில் (First Floor) கிடந்த திருக்கோலத்துடன் எம்பெருமான் சேவை சாதிப்பதால் அவ் விளக்கம் பொருந்துகின்றதன்றோ?

பரிபாடலிலும் நம் சிந்தனை ஓட்டமெடுக்கின்றது. பரிபாடல் திரட்டிலுள்ள,

---

12. இராகவய்யங்கார், மு: ஆராய்ச்சித்தொகுதி(8-வது கட்டுரைகாண்க.)

''வானார் எழிலி மழைவள நத்தத்
தேனார் சிமைய மலையின் இழிதந்து
நான்மாடக் கூடல் எதிர்கொள்ள ஆனா
மருந்தாகும் தீநீர் மலிதுறை மேய
இருந்தையூர் அமர்ந்த செல்வநின்
திருந்தடி தலையுறப் பரவுவதும் தொழுது''[13]

என்ற அடிகளில் 'இருந்தையூர்' என்பது மதுரையைச் சார்ந்து வையைக் கரைக்கண் உள்ளது எனவும், அவ்வூரில் திருமால் திருக்கோயில் கொண்டவாறும் அறியக் கிடக்கின்றன. அரும்பத உரையாசிரியர் கூறிய 'இருந்தவளம்' என்னும் மதுரைப்பகுதியே 'இருந்தையூர்' என்னும் பெயரால் பரிபாடலில் வழங்கலாயிற்று என்பதை எளிதில் தெளியலாம். இருந்தையூர்-இருந்தவூர் என்பதன் மரூஉ. நூற்றெட்டுத் திருப்பதிகளில் ஒன்றாகிய நின்றை, நின்றவூர் போல இதனையும் கொள்ளல் வேண்டும்.[14] 'இருந்தையூர் அமர்ந்த செல்வ!' என்பதில் திருமாலின் 'இருந்த திருக்கோலம்' குறிப்பிடப் பெற்றிருத்தல் கவனிக்கத் தக்கது. இங்ஙனம் இருந்தையூர், இருந்தவளம் என்ற பெயர்களுடன் மதுரையருகில் வேறு ஊர் ஒன்றும் காணப்பெறவில்லையாதலின், இத்திருநாமங்கள் இரண்டும் கூடலழகர் சந்நிதியையே குறிக்கின்றன என்பது தெளிவாகின்றது.

ஈண்டுக் குறிப்பிடப்பெற்ற 'இருந்தையூர்' போலவே மதுரையைச் சுற்றிப் பல தலங்கள் முற்காலத்தில் இருந்ததாகப் பண்டைய இலக்கியங்கள் பகர்கின்றன.

''வடதிரு ஆல வாய்திரு நடுவூர்
வெள்ளி யம்பலம் நள்ளா றிந்திரை
பஞ்சவ னீச்சரம் அஞ்செழுத் தமைத்த

13. பரிபாடல் திரட்டு-முதற்பாடல்-அடி (1-6)

14, இவ்வாசிரியர் எழுதி வெளியிட்டுள்ள ''தொண்டை நாட்டுத் திருப்பதிகள்' என்னும் நூலில் (9-வது கட்டுரை) இத்திருப்பதியைப்பற்றி அறியலாம்.

சென்னி மாபுரம் சேரன் திருத்தளி
கன்னிசெங் கோட்டம் கரியோன்திருவுறை
............ஒரு பரங் குன்றம்
சூழ்கொள விருந்த கூடலெம் பெருமான்''[15]

என்ற கல்லாட அடிகளாலும் ''நான்கு மாடங் கூடுதலின் நான்மாடக் கூடல் என்றாயிற்று; அவை திருவாலவாய், திருநள்ளாறு, திருமுடங்கை, திருநடுவூர்'' என்ற நச்சினார்கினியரின் உரையாலும்[16] இச் செய்தியை அறியலாம். ஈண்டுக் குறிப்பிடப்பெற்ற பெயர்களில் பல இக் காலத்தில் வழங்கக் காணாமை போல 'இருந்தையூர்' என்ற வழக்கும் அருகியதாகக் கொள்ளலாம். கல்லாடத்தில் குறிப்பிடப்பெற்றுள்ள 'கரியோன் திருவுறை'யும் சிலப்பதிகாரத்தில் குறிப்பிடப் பெற்றுள்ள 'உவணச் சேவல் உயர்த்தோன் நியமமும்'[17] என வரும் திருக்கோயிலும் 'வையை நெடுமால்' கோயில் கொண்ட இவ்விருந்தையூரையே குறிப்பதாகக் கொள்ளல் தகும். இருந்தையூர்க், கடுங்கோழி மோசியார்'[18] என்ற சங்கப் புலவரது ஊரும் இதுவே என்று ஊகிப்பதும் பொருந்துவதாகும்.

ஆயின், இன்றுள்ள 'வையை நெடுமால்' திருக் கோயில் மதுரைக்கு மேற்புறத்திலுள்ளதேயன்றி வையைக் கரையில் இல்லையே என்ற வினாவினை எழுப்பலாம். அதற்குத் தக்க விடையினால் அமைதி கூறுவேன். மதுரையின் இரு பக்கங்களிலும் அந்நதி சூழ்ந்து சென்றதாகவே முன்னைய வழக்கு இருப்பதால் மதுரையின் தென்பக்கத்திலும் அதன் போக்கு இருப்பதாகவே கருதுதல் வேண்டும் தெற்குத்

15. கல்லாடம்-61-

16. கலி-62 (நச். உரை)

17. சிலப்-14. ஊர்காண் காதை-அடி,8 உவணச் சேவல்-கருடன்; நியமம்-கோயில்.

18. திருக்கோவலூர் வட்டத்தில் 'இருந்தையூர்' என்ற ஊர் உள்ளது (உ. வே. சா. குறுந்தொகை-பாடினார் வரலாறு. பாடல் 335)

திசையிலுள்ள வையையின் பிரிவு இப்பொழுது 'கிருத மாலை' என வழங்கப்பெற்றுக் கூடலழகர் திருக்கோயிலின் புறத்தே ஓடுகின்றது மதுரைக் கோட்டையைச் சுற்றி வையை நதி மாலை போல் ஓடுதலால் வையைக்குக் 'கிருத மாலை' என்ற பெயர் வழங்கியதாகக் கூறுவர்.

> ''வேக மாதலின் வேக வதியென்றும்
> மாகம் வாய்ந்தத னால்வையை யென்னுந்தா
> ராக லாற்கிருத மாலைய தாமென்றும்
> நாகர் முப்பெயர் நாட்டு நதியரோ''[19]

என்ற கூடற்புராணச் செய்யுள் கடறுவதைக் காண்க. கற்றறிந்தார் ஏத்தும் கலித்தொகையிலும்,

> ''இருநிலம்—
> தார் முற்றியதுபோலத்
> தகைபூத்த வையைதன்
> நீர்முற்றி மதில்பொரூஉம்
> பகையல்லா நேராதார்
> போர்முற்றொன் றறியாத
> புனல்சூழ்ந்த வயலூரன்''[20]

என்ற பாடற் பகுதியில் வையை நதி மாலை சூழ்ந்திருந்ததுபோல் வருணிக்கப் பெற்றிருப்பதும் நோக்கி அறியத் தக்கது. எனவே, நீடுநீர் வையை நெடுமால்' என்னும் தொடர் மேற்கூறியவற்றால் மதுரைக்கூடலழகர் சந்நிதியையே குறித்ததாதலைக் கண்டு தெளிலாம்.

இங்ஙனம் நம்மனம் பண்டைய இலக்கியங்களில் அலைபாய்ந்த வண்ணம் இருக்கும்பொழுது இருப்பிடத்திற்குத் திரும்பும் நேரமும் வந்துவிடுகின்றது. சட்டென்று எழுகின்றோம். கொடி மரத்தின் அருகிலிருந்த

---

19. கூடற்புராணம்.
20. மருதக்கலி-2

படி எம்பெருமானை வணங்குகின்றோம். இந்நிலையில், திவ்விய கவியின் பாசுரம் நம் சிந்தையில் எழுகின்றது.

''வாழ்விப்பான் எண்ணமோ
வல்வினையில் இன்னமென்னை
ஆழ்விப்பான் எண்ணமோ
அஃதறியேன்—தாழ்விலாப்
பாடல்அழகு ஆர்புதுவை
பட்டர்பிரான் கொண்டாடும்
கூடல்அழ காநின்
குறிப்பு.''[21]

[வாழ்விப்பான்—வாழ்வுபெரும்படி; ஆழ்விப்பான்—அழுந்தச்செய்யும்படி; தாழ்வு-இழிவு; ஆர்-பொருந்திய புதுவைப்பட்டர் பிரான்—பெரியாழ்வார்; கொண்டாடும்—புகழ்ந்து பாடிய; கூடல்—தென்மதுரை; அழகா (விளி); குறிப்பு—திருவுள்ளக்கருத்து]

என்ற பாடலை மிடற்றொலி கொண்டு ஓதி உளங்கரைகின்றோம்; பக்தி நிலையின் கொடுமுடியை எட்டியதாக உணர்கின்றோம். பரிபூர்ண பிரம்மாநுபவம் பெற்று உணர்வுடன் நம் இருப்பிடத்தை நோக்கி நடைகட்டுகின்றோம்.

21. நூற் திருப் அந் 47

# 5. திருமோகூர்க் காளமேகம்

எம்பெருமானை அடைவதற்கு சாத்தியோபாயம் சித்தோபாயம் என்ற இரண்டு வித உபாயங்கள் (வழிகள்) வைணவ சாத்திரங்களில் பேசப்பெறுகின்றன. சாத்தியோ பாயம் என்பது, நம்மால் செய்யப்பெறும் உபாயம். பக்தி பிரபத்திகளை இதற்கு எடுத்துக்காட்டு களாகக் கொள்ளலாம். சித்தோபாயம் என்பது நம்மால் செய்யப்பெற வேண்டியதாயன்றி முன்பே உள்ள உபாயம். இது சர்வேசுவரனைக் குறிப்பது. சீமன் நாராயணன் நல்லார் பொல்லார் என்ற வேறு பாடின்றி எல்லோர்க்கும் உறவினன்; நம் அஞ்ஞானத்தை ஒழிக்கக்கூடிய கருணைக்கடல். தனது நினைவினாலேயே எல்லாப் பொருள்களையும் இரட்சித்து நிகரற்று நிற்பவன். பெரிய பிராட்டியார் நமக்குப் புருஷகாரமாய் நின்று பரிந்து பேச நம்மிடம் மேலும் கருணை வளரப் பெற்றவன். இத்தகைய எம்பெருமான் வேறு உபாயங்களை அநுட்டிக்க ஆற்றல் இல்லாது பிரபத்தியை அநுட்டிப்பவர்கட்கு மற்ற உபாயத்தின் இடத்தில் நின்று பலன் அருளும் சித்தோபாய மாகின்றான். அவனைப் பற்ற நினைப்பதற்கும் அவன் அருள் வேண்டும். 'அவன் அருளாலே அவன்தாள் வணங்கி'[2] என்ற மணிவாசகப் பெருமான் கூறியதும் இது பற்றியதே யாகும்.

1. புருஷகரம்—தகவுரை, பரிந்துரை.
2. திருவா. சிவபு—அடி—18

இந்த எண்ணங்கள் நம் சிந்தையில் குமிழியிட்ட வண்ணம் திருமோகூருக்குப் போகச் சித்தமாகின்றோம். திருமோகூர் மதுரை மாநகருக்கு வடக்கே ஏழு, எட்டுக் கல் தொலைவிலுள்ளது. மதுரை – மேலூர் நெடுஞ்சாலை வழியே ஒற்றைக்கடைவரை சென்று, அதன் பிறகு கிழக்கே திரும்பி ஒரு மைல் சென்று இவ்வூரை அடைதல் வேண்டும். மதுரையிலிருந்து திருவாதவூர் வழியே மேலூருக்குச் செல்லும் பேருந்திலும் செல்லலாம்; அல்லது மதுரையிலிருந்து திருவாதவூர் வரையிலும் செல்லும் நகரப் பேருந்தினையும் பயன்படுத்திக் கொள்ளலாம். நாம் தங்கியிருக்கும் கல்லூரி இல்லம் (College House) என்ற விடுதியில் அதிகாலையில் நீராடித் தூய நல்லாடை அணிந்து மதுரைப் பேருந்து நிலையத்திற்கு வருகின்றோம்.

பேருந்தில் ஏறி இவ்வூரை நோக்கி வருங்கால் 'திருமோகூர்' என்ற 'பெயர் ஆராய்ச்சியில்' நம் மனம் ஈடுபடுகின்றது. நம்நாட்டுப் பாமர மக்களும் சாத்திர உண்மைகளை அறிந்து கொள்வதற்குக் கருவூலம்போல் திகழ்பவை இதிகாசங்களும் புராணங்களுமாகும். அவையே இன்று நம் பெயராய்வுக்கும் கை கொடுத்து உதவுகின்றன. திருமால் மோகினி அவதாரம் எடுத்த வரலாறு மிகவும் சுவையானது. திருப்பாற்கடலைக் கடைந்து அமுதம் எடுப்பதற்குத் தேவர்களும் அசுரர்களும் ஒன்று சேர்கின்றனர். அமுதம் வந்ததும் தேவர்கள் அசுரர்கட்குப் பங்கு கொடுக்க இசையவில்லை. அசுரர்கள் சும்மா விடுவார்களா? அவர்கள் அமுத கலசத்தைத் தூக்கிக்கொண்டு ஓடத் தொடங்குகின்றனர். தேவர்கள் திருமாலிடம் முறையிட, அவர் மோகினி வடிவத்துடன் அசுரர்கள் முன்னே காட்சி அளிக்கின்றார். இரு சாராருக்கும் அமுதத்தைத் தாமே பங்கிட்டுத் தருவதாகக் கூறிக் கலசத்தை வாங்கிக் கொள்ளுகின்றார். அமுதத்தைப் பங்கிடவும் முனைகின்றார். தேவர்கள் பக்கம் கலசமும் அகப்பையுமாக வருங்கால் அமுதத்தைத் தாராளமாக வார்க்கின்றார். அசுரர்கள் பக்கம் வருங்கால் தமது மோகனப் புன்னகையாலும் ஆடலாலும் பாடலாலும்

அவர்களை மயக்குகின்றார் அமுதத்தை வார்க்காமலேயே. இறுதியாக அசுரர்கட்கு ஒரு துளிகூட இல்லாமல் அமுதம் காலியாகி விடுகின்றது. இங்ஙனம் அசுரர்களை ஏமாந்த சோணகிரிகளாக்க எடுக்கப்பெற்றதே மோகனாவதாரம். இந்த அவதாரம் எழுந்த தலமே மோகனூர்; அதுவே 'மோகூர்' எனக் குறுகி 'திரு' என்ற அடையுடன் சேர்ந்து 'திருமோகூர்' என்றாயிற்று என்பதாக அறிகின்றோம்.

இந்த நிலையில் நாம் ஏறியிருக்கும் பேருந்தும் திருமோகூரை வந்தடைகின்றது. இந்தத் திவ்விய தேசத்தைத் திருமங்கையாழ்வாரும் நாம்மாழ்வாரும் மங்களாசாசனம் செய்துள்ளனர்.

**'சீராரும் மாலிருஞ் சோலை திருமோகூர்'[3]**

என்பது சிறிய திருமடல். நம்மாழ்வார் ஒரு திருவாய்மொழியால்[4] (பதிகத்தால்) மங்களசாசனம் செய்துள்ளார். மருத நிலப் பகுதியைச் சார்ந்த இவ்வூர் நீர்வளம் நிலவளம் மிக்கதாகத் திகழ்கின்றது. எடுத்த எடுப்பில் முதல் பாசுரமே,

**"தாள தாமரைத் தடம்அணி**
**வயல்திரு மோகூர்"[5]**

[தாள-தாள் உரத்தையுடைய; தடம்-குளங்கள்.]

என்று தொடங்குகின்றது. வானமாமலை என்ற திவ்விய தேசத்தில் ஒருபொழில்,

**"தேனமாம் பொழில்"[6]**

என்று ஆழ்வாரால் திருநாமம் பெற்றது போலவே இத்திருப்பதியின் தடாகமும்,

**"தாள தாமரைத் தடம்"**

என்றே ஆழ்வாரால் திருநாமம் பெற்றுத் திகழ்கின்றது. ஆழ்வார் திருவாக்கில் வந்த சொல்லையிட்டே வழங்குதல் பல்லாற்றானும் சிறப்புடைத்தன்றோ?

---

3. சிறிய திருமடல் கண்ணி -74 5. ஷ 10.1:1
4. திருவாய் 10.1 (தாளதாமரை) 6. திருவாய் 5.7:6

இவ்விடத்தில் பெரியாழ்வாரின் திருவரங்கப் பாசுரப்பகுதி ஒன்றையும் நினைக்கத் தோன்றுகின்றது.

"உரம்பெற்ற மலர்க்கமலம் உலகு அளந்த
சேவடிபோல் உயர்ந்து காட்ட
வரம்புஉற்ற கதிர்செந்நெல் தாள்சாய்ந்துத்
தலைவணங்கும் தண்அரங்கமே."[7]

விஷ்ணுவையே எப்போதும் தம் சித்தத்தில் வைத்துக் கொண்டிருக்கும் பெரியாழ்வாருக்கு விண்ணளவும் ஓங்கியிருக்கும் தாமரையைக் காணும் போதெல்லாம் எம்பெருமானின் உலகளந்த சேவடியைச் சேவித்தாற் போல இருக்கும். செந்நெற் பயிர்கள் கதிர் கனத்தாலே தலைவணங்கியிருக்கும் வயலைக் காணும்போது வணக்கமே வடிவெடுத்தாற் போன்ற பாகவதோத்தமர் களைச் சேவித்தாற்போல இருக்கும். அங்ஙனமே, எம்பெருமானையன்றி வேறொன்றையும் தம் மனத்தில் கொள்ளாத நம் ஆழ்வாருக்கும் தாம் காணும் காட்சி கள் எல்லாம் எம்பெருமானை நினைவுபடுத்துகின்றன.

"பூவையும் காயாவும் நீலமும் பூக்கின்ற
காவிமலர் என்றும் காண்தோறும் —பாவியேன்
மெல்ஆவி மெய்மிகவே பூரிக்கும் அவ்வவை
எல்லாம் பிரான் உருவே என்று."[8]

என்ற இவர் வாக்கில் போலி கண்டு மேல் விழும்படி யான அளவுக்கு அளவிறந்த அன்பு எம்பெருமான் திரு மேனியில் தமக்கு விளைந்த படியைக் கூறியதை நாம் அறிவோம் அன்றோ?

இன்னோர் இடத்திலும் வயல் வளத்தைப் பேசு கின்றார் ஆழ்வார். திருக்கோயிலின் எட்டுத் திக்கு களிலும் செந்நெல் வயல்களும் கருப்பங்காடுகளும் சூழ்ந் திருக்கும் என்று ஆழ்வார் கூறிய வண்ணமே இன்றும் காணப்பெறுவதைக் கண்டு மகிழ்கின்றோம்.

---

7. பெரியாழ்-திரு 4.9:8.
8. பெரி திருவந். 73.

"எண்திசையும் ஈன்கரும்பொடு
பெருஞ்செந்நெல் விளையக்
கொண்ட கோயில்"[9]

என்று கோயிலின் சூழலைப் பேசி மகிழும் ஆழ்வாரின் திருவாக்கை நாமும் சொல்லி மகிழ்கின்றோம். மேலும் ஊரின் சூழலை,

"வாய்த்த தண்பனை வளவயல்
சூழ்திரு மோகூர்"[10]

என்று கூறியுள்ளதையும் சிந்திக்கின்றோம்.

ஊர் மிகவும் சிறிய ஊரே. ஆழ்வார் காலத்தில் நான்மறைகளை நன்கறிந்தவர்களும், அவற்றை அநுட்டிப்பவர்களும் ஆன வைதிகர்கள் வாழும் இடம். இதனை நமக்குச் சுட்டியுரைப்பதுபோல் ஆழ்வார்,

"நலங்கொள் நான்மறை வாணர்கள்
வாழ்திரு மோகூர்"[11]

என்று கூறுவர். 'நலங்கொள்' என்ற அடைமொழி நான் மறைக்கும் நான்மறைவாணர்கட்கும் ஆக்கிப் பொருள் கொண்டு மகிழும் வண்ணம் அமைந்திருக்கும் நேர்த்தியை எண்ணி எண்ணி மகிழ்கின்றோம். ஆனால் இப்பொழுது திருக்கோயிலில் கைங்கர்யம் செய்யும் ஒரு சில வைணவர்களே வாழ்ந்து வருகின்றனர் என்பதையும் அறிகின்றோம்.

நம்மாழ்வார் ஒரு திருவாய்மொழிப் பாசுரத்தில்,

"சரணமாகும் தனதாள்
அடைந்தார்க் கெல்லாம்
மரணமானால் வைகுந்தம்
கொடுக்கும் பிரான்[12]

என்று அருளிச் செய்துள்ளதை நாம் நன்கு அறிவோம். நம்மாழ்வார் கட்டுக் குலைந்த தம் திருமேனியின் முடிவு அணித்தென்று தாமே அறுதியிட்டுக் கொண்ட சமயம்

9. திருவாய் 10. 1:5. 11. ஷை 10. 1:2
10. ஷை 10.1:6. 12. ஷை. 9. 10. : 5

திருமோகூருக்கு வந்ததாகவும், தம்முடைய திருநாட்டுப் பயணத்திற்கு வழித்துணையாகத் திருமோகூர்க் காளமேகப் பெருமாளைப் பற்றியதாகவும் பெரியோர் பணிப்பர். இந்தத் தெய்வச் சிந்தனையுடன் திருக்கோயிலை நோக்கி வந்து கொண்டிருக்கின்றோம்.

திருக்கோயிலைச் சுற்றி நீண்டு உயர்ந்த மதில் அமைந்துள்ளது. மதிலுக்கு வெளியே புஷ்கரிணி உள்ளது. இது 'க்ஷீராப்தி புஷ்கரிணி' என்ற திருநாமத்தால் வழங்கிவருகின்றது. இது நம் கண்ணுக்குத் 'தாளதாமரைத் தடாகமாகவே' காட்சி அளிக்கின்றது. தாமரை மலர்களும் மொட்டுகளும் 'உலகு அளந்த சேவடிபோல் உயர்ந்து காட்டுவதைக்' கண்டு மகிழ்கின்றோம். திருக்குளத்தின் தெள்ளிய நீர் நம் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளு கின்றது. திருக்கோயிலுக்குப் புறத்தேயுள்ள இந்தத் தடாகத்தில் கைகால்களைச் சுத்தம் செய்து கொண்டு சந்நிதிக்குள்ளே திகழும்,

''தயரதன் பெற்ற மரகத மணித்தடம்''[13]

காண விரைகின்றோம். இந்தத் தடாகத்தைக் காண்ப தற்கு, கண்டு மகிழ்வதற்கு, 'தொண்டீர் வம்மின்!'[14] என்றும், 'அடியீர் தொழுமின்'[15] என்றும் நம்மாழ்வார் குரல் கொடுத்து அழைப்பதை நம் செவிகள் கேட்கும் அநுபவத்துடன் திருக்கோயிலுக்குள் நுழையச் சித்த மாகின்றோம். எம்பெருமானுக்கும் தடாகத்திற்கும் உள்ள ஒற்றுமையை ஆழ்வாரே பிறிதோரிடத்தில் நிருபணம் செய்துள்ளது நம் நினைவிற்கு வருகின்றது.

''கண்கைகால்
தூயசெய்ய மலர்களா சோதிசெவ்வாய் முகிழ்தா
சாயல்சாமத் திருமேனி தண்பாசடையா தாமரைநீள்
வாசத்தடல்போம் வருவானே''[16]

எம்பெருமானைக் கிட்டினாரோடு முதலுறவு பண்ணு பவை அவனது திருக்கண்கள்; அத்திருக்கண்

13. திருவாய் 10 1:3 14. ஷை 10. 1:4
15. ஷை. 10. 1:8 16. ஷை. 8. 5:1

நோக்கிற்குத் தோற்றவர்களை அணைப்பவை அவனது திருக்கைகள். அத்திருக்கைகள் தீண்டுங்கால் அவற்றா லேற்படும் ஊற்றுணர்ச்சிக்குத் தோற்று விழும் இடம் அவனது திருவடிகள். இவை யாவும் இத்தடாகத்திற்குரிய தாமரைகளாகும். தடாகத்தில் தாமரை மலர்களேயன்றி மொட்டுகளும் இருக்குமன்றோ? 'சோதிச் செவ்வாய் முகிழ்தா' என்பதனால் புகழையுடையதாய்ச் சிவந்திருக் கின்ற திருப்பவளத்தையே முகுளமாகக் கொள்ளத்தக்கது. பச்சைமாமலை போலிருக்கும் அவனுடைய திருமேனி தாமரை இலைக்கு ஒப்பாகும் என்பது 'சாயல் சாமத் திருமேனி தண் பாசடையா' என்பதனால் பெறப்படு கின்றது. இக்கருத்துகளைச் சிந்தித்தவண்ணம் உள்ளிருக் கும் தடாகத்தைக் காண விரைகின்றோம்.

கொடிய வெப்பத்தில் அடிபட்டவன் குளிர்ந்த தடாகத்தையோ காளமேகம் பொழியும் மழையையோ எதிர்பார்ப்பது இயல்பேயன்றோ? அங்ஙனமே, நம்மாழ் வாரும் தம்முடைய இருள் தருமா இவ்வுலக வாழ்வெல் லாம் தொலையப்பெறும் சமயத்தில் காளமேகப் பெரு மாளை அநுபவிக்கிறபடியைத் தெரிவிப்பதை எண்ணு கின்றோம்.

> ''காள மேகத்தையன்றி
> மற்றொன்றிலம் கதியே.''[17]

என்ற அவன் திருவாக்கை எண்ணிய வண்ணம் திருக் கோயிலுக்குள் நுழைகின்றோம்.

அச் சிறிய ஊரில் இது பெரிய கோயில். கிழக்கு நோக்கிய திருவாயிலை உடையது. வாயிலைத் தாண்டி யதும் நாம் வந்தடைவது கம்பத்தடி மண்டபம். இந்த மண்டபத்தில் இத்திருக்கோயிலுக்குத் திருப்பணி செய்த சிவகங்கைச் சீமைப் பாளையக்காரர்களான சின்னமருது, பெரிய மருது இவர்களின் சிலைகள் இருப்பதைக் காண

17. திருவாய் 10.1:1

கின்றோம். அடுத்த வாயிலைக் கடந்து 'கருட மண்டபம்' என வழங்கும் ஒரு மண்டபத்திற்கு வருகின்றோம். அங்குக் கண்கவர் வனப்புடைய மூன்று நான்கு நல்ல சிலைவடிவங்கள் தூண்களை அணி செய்வதையும் காண்கின்றோம். ஒரு தூணில் மிதிலைச் செல்வியை அணைத்தவண்ணம் உள்ள கோதண்டராமன் சிலையும், அதனையடுத்து இன்னொரு தூணில் இலக்குவன் சிலையும் காணப்பெறுகின்றன. இச்சிலைகளைத் தவிர காமவேளின் சிலையும் இரதிதேவியின் சிலையும் நம் கண்ணுக்கு விருந்தாக அமைகின்றன. இந்தச் சிலைகளுக்கிடையில் பெரிய திருவடி ஒரு சிறிய கோயிலில் நின்று காட்சி தருகின்றார்.

இவற்றையெல்லாம் கண்டு களித்தவண்ணம் மகா மண்டபத்தைக் கடந்து அர்த்த மண்டபத்திற்கு வருகின்றோம். அங்கிருந்து பார்த்தாலே கிழக்கே திருமுக மண்டலங்கொண்டு நின்ற திருக்கோலத்தில் பெரிய பிராட்டியார், பூமிப் பிராட்டியார் என்ற இருவருடன் மூலவர் காளமேகப் பெருமாள் சேவை சாதிக்கின்றதைக் காணலாம். இவருடைய கம்பீரமான தோற்றத்தில் உள்ளத்தைப் பறிகொடுத்த அநுபவத்தைப் பெறுகின்றோம். 'இலம் கதி மற்றொன்று எம்மைக்கும்... நலம் கழல் அவன் அடி நிழல்தடம் அன்றி'[18] என்றும் 'அன்றியாம் ஒரு புகலிடம் இலம் என்று என்று அலற்றி .........நாம் இனி நணுகுதும் நமது இடர் கெடவே'[19] என்றும், 'திருமோகூர் ஆத்தன் தாமரை அடி அன்றி மற்று இலம் அரணே'[20] என்றும் 'நம்முடை நல்லரண் நாம் அடைந்தனம்'[21] என்றும் நம்மாழ்வார் ஒரு முறைக்கு நான்கு முறை கூறி மகிழ்ந்தாரன்றோ? அந்த அநுபவத்தை நாமும் பெற்றதுபோல் உணர்கின்றோம்.

இந்தத் திருவாய் மொழியில் எம்பெருமானைச் சிந்தித்து ஆழ்வார் அநுபவித்த படிகளையெல்லாம்

18. திருவாய்—10.1:2 19. ஷை—10.1:3
20. ஷை—10.1:6 21. ஷை—10.1:9

நம் மனத்தில் ஓட விடுகின்றோம். முதலில் எம்பெருமான் காளமேகத்தின் திவ்வியத் திருமேனியில் நம் மனம் ஆழங்கால் படத் தொடங்குகின்றது. நம்முடைய தாபக்கிலேசங்கள் எல்லாம் போகும்படி நம்மைக் கவர்ந்த 'மரகதமணித்தடத்தை' மேலே குறிப்பிட்டோம். அசுரர்களைப் புடைக்கவல்ல நான்கு திருத்தோள்களில் நம் மனம் ஈடுபடுகின்றது. 'தோள் கண்டார் தோளே கண்டார்'[22] என்று மிதிலை மக்கள் இராமன் திருமேனி அழகில் ஈடுபட்டது போலவே, நாமும் திருத்தோள் அழகில் சொக்கி நிற்கின்றோம். 'மைவண்ண நறுங்குஞ்சிக் குழல்பின்தாழ'[23] என்று திருமங்கையாழ்வார் அநுபவித்த 'சுரிகுழல்' நம் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் போக்கில் 'கமலக் கண் கனி வாய்' நம்மை ஈர்க்கின்றது.

> ''சுரிகுழல் கமலக் கண்கனிவாய்
> காள மேகம்''[24]

என்று ஆழ்வார் தாம் நெடுநாள்பட்ட சம்சாரத் தாபமெல்லாம் ஆறும்படியாகச் சொல்லித் தீர்த்த சொல்வமைப்பினைச் சிந்திக்கின்றது நம் மனம். எம்பெருமானின் திருக்குழல் ஒழுங்கிலும் கடைக்கண் நோக்கிலும் அவன் உள்ளிருக்கும் ஆரா அன்பைக் கோட்சொல்லித் தரும் முறுவலிலும் ஆழங்கால்பட்டு நிற்கின்றோம். பிறிதோரிடத்தில் ஆழ்வார் எம்பெருமான் திருமேனியை,

> ''மணித்தடத் தடிமலர்க் கண்கள்
> பவளச் செவ்வாய்
> அணிகொள் நால்தடந் தோள் தெய்வம்''[25]

[மணிதடம்-அழகிய தடாகம்; அடி-திருவடி; நால்-நான்கு]

22. கம்பரா. பால. உலாவியல்-19
23. திருநெடுந்-21 24. திருவாய் 10.1:1
25. ஷை—10. 1:9

என்று திருவுள்ளம் கொண்ட படியையும் எண்ணி மகிழ்கின்றோம்.

ஆழ்வார் 'சுடர்கொள்சோதி'[26] என்று திருநாமம் வழங்கியருளிய மூர்த்தி நம்மைப் பிச்சேற்றுகின்றது. இங்கு ஆழ்வார் கூறிய கருத்தினைச் சிந்திக்கின்றோம். இங்கு ஆழ்வார் குறிப்பிடுவது எம்பெருமானின் இயற்கை அழகையன்று. தேவர்களும் முனிவர்களும் தம்மை வந்தடைந்ததை நினைந்து எம்பெருமான் 'இவர்கள் ஆபத்துக் காலத்திலாகிலும் நம்மைத் தேடி வந்தார்களே? ஒரு பயன் கருதியாகிலும் நம்மை நாடி வந்தார்களே!' என்று உவப்படைகின்றானாம். அந்த உவப்பின் மிகுதியால் எம்பெருமானின் திருமேனி புதிய புகர் பெற்றுத் திகழ்கின்றதாம். இதுவே ஆழ்வாரின் திருவுள்ளமாயிருக்கும் என்று எண்ணுகின்றோம். இன்னொரு விதமாகவும் நம் மனம் சிந்திக்கத் தொடங்குகின்றது. கண்டாரை ஈர்த்துப் பிச்சேற்றும் பேரழகையுடைய எம்பெருமானை ஒரு பயனையும் கருதாது பற்ற வேண்டியிருக்க, 'இடர்கெட எம்மைப் போந்தளியாய்' என்று பலகாலும் சொல்லிச் சொல்லி பற்றப் பார்க்கின்றனரே என்று பரிதாபம் தோன்ற ஆழ்வார் கூறுகிறதாகவும் கருதலாம். இங்ஙனம் கருதுங்கால் நம் மனத்தில் ஓர் ஐயமும் எழுகின்றது. "ஆழ்வாரும் இடர்கெட வேண்டுமென்றுதானே கோருகின்றார்? 'இடர் கெட அடிபரவுதும் தொண்டீர் வம்மினே'[27] என்றும், 'நன்று நாமினி நணுகுதும் நமதிடர் கெடவே'[28] என்றும் சொன்னவரன்றோ இவர்?" என்பதே இந்த ஐயம். நம் சிந்தையிலேயே நமது ஐயத்தை அகற்றும் கருத்தும் ஒளி விட்டெழுகின்றது. "ஆழ்வார் இடர் வேறு: தேவர் முதலியோரின் இடர் வேறு அவர்கள். அரக்கர்கள்

26. திருவாய் 10.1:4 27. ஷை— 10.1:4
28- ஷை 10. 1:3

தின்ற உடம்பைக் காட்டித் தம் உடம்பைப் பூண் கட்டிக் கொண்டு பாதுகாக்க நினைக்கின்றவர்கள். இவரோ,

"அழுக்குடம்பும்
இந்நின்ற நீர்மை இனியாம் உறாமை"[29]

என்று அவ்வுடம்பைக் கழிக்கத்தேடுகின்றவர். ஆகவே இருவர் இடரிலும் பெரு வேற்றுமை உண்டு." என்று அந்த ஐயமும் நீங்கி விடுகின்றது. ஆழ்வார் அந்த எம்பெருமானை,

'சுடரொளி தனிமுதல்வன்'[30]

என்று சொல்லி அநுபவித்ததையும் எண்ணுகின்றோம்.

அடுத்து, ஆழ்வாரைப் பின்பற்றி எம்பெருமானின் வெற்றிச் செயல்களிலும், வீரச் செயல்களிலும் ஆழங்கால் படுகின்றோம். அசுரர் கூட்டங்களையெல்லாம் வேரறக் களைந்த தீரச் செயல்களை எண்ணுகின்றோம். அண்டம் மூவுலகளந்த அற்புதச் செயல் நம் மனத்தில் பளிச்சிடுகின்றது அவனுடைய படைப்புச் செயலை நினைக்கின்றோம். மூலப்பிரகிருதி தொடக்கமாக ஆவரண நீரைப் படைத்த தீரச் செயல் நம் சிந்தையில் எழுகின்றது. அங்ஙனம் படைத்த உலகில் நான்முகன் தேவர் முதலியோரையும் படைத்துக் குடியேற்றிய செயலையும் எண்ணுகின்றோம். இவற்றை அடக்கிய,

"வான்பெரும் பாழ்தனி முதலா
சுற்றும் நீர்படைத் ததன்வழித்
தொன்முனி முதலா
முற்றும் தேவரோ டுலகுசெய்
வான்"[31]

[வான்பெரும்பாழ்-மூலப்பிரகிருதி;சுற்றும் நீர்-ஆவரண நீர்; தொல்முனி-நான்முகன்]

29. திருவிருத். 1:    30. திருவாய் 10. 1:5
31. ஷை — 10. 1:7

என்ற ஆழ்வாரின் பாசுரப்பகுதியையும் சிந்திக்கின்றோம்.

அடுத்து, எம்பெருமானின் எண்ணற்ற திருக்குணங்களைச் சிந்திக்கத் தொடங்குகின்றோம். திருக்குணங்களைப் போலவே அவனுடைய திருநாமங்களும் எண்ணற்றவை என்றாலும், அவை 'ஆயிரம்' என்றுகூறும் மரபு ஒன்று உண்டு. 'ஆயிரம் பெருடையஅவலன்'[32] என்று கம்பன் போற்றியதையும் 'பேராயிரமுடை பேராளன்'[33] என்று திருமங்கையாழ்வார் போற்றியதையும் நாம் அறிவோம். ஆழ்வாரும் அவனை 'ஆயிரம் பேருடை அம்மான்'[34] என்றும், 'பெயர்களாயிரமுடைய தயரதன் பெற்ற மரகத மணித்தடம்'[35] என்றும் போற்றுவதையும் சிந்திக்கின்றோம். ஆபத்தில் உதவக் கூடிய திருக்குணத்தினை விளக்கும் பான்மையில் 'ஆபத் சகாயன்' என்ற திருநாமமும் அவனுக்கு உண்டு. ஒரு பாசுரத்தில் இத்திருக்குணத்தில் ஈடுபட்டுப் பேசுகின்றார் ஆழ்வார்.

நாம டைந்த நல்லரண்
நமக்கென்று நல்லமரர்
தீமை செய்யும் வல்லசுரரை
அஞ்சிச்சென் றடைந்தால்
காமரூ பங்கொண்டு எழுந்தளிப்பான்''[36]

என்பது அவர் திருவாக்கு. அடியாருடைய ஆபத்தினைப் போக்குவதற்காகத் தான் விரும்பினபடி எம்பெருமான் மேற்கொள்ளும் திருமேனியைக் 'காமரூபம்' என்று குறிப்பிடுகின்றார் ஆழ்வார். காமமாவது இச்சை; இச்சையினால் எடுத்துக்கொள்ளும் ரூபம் காமரூபம். இந்தத்

32. கம்பரா அயோத் சித்திர 1.
33. பெரி.திரு. 8. 1:6
34. திருவாய் 10. 1:2
35. திருவாய் 10. 1:8
36. திருவாய் 10. 1:10

திருக்குணத்தில் ஆழங்கால்பட்ட ஆழ்வாரைப்போல் நாமும் ஆழங்கால்பட முயல்கின்றோம், இத்தகைய ரூபங் கொண்டு எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் திருமோகூரின் பெயரை வாயாலே சொல்லி அநுசந்தித்து அன்பு மிகுதியால் ஏத்துமாறு ஆழ்வார் பணிப்பதையும் சிந்திக்கின்றோம்.

இந்த இடத்தில் முமுட்சுபடியின் ஒரு வாக்கியம் நம் மனத்தில் எழுகின்றது.

''சேஷிபக்கல் சேஷபூதனிழியுந்துறை,
ப்ரஜை முலையிலே வாய்வைக்குமாப்
போலே''[37]

[சேஷி-ஈசுவரன்; சேஷபூதன்-ஆன்மா; ப்ரஜை-குழந்தை.]

பாலுண்ணும் பச்சைக் குழவி எங்ஙனம் தாயினுடைய மற்ற அவயங்கள் யாவையும் விட்டுத் தான் உயிர் வாழ்வதற்கிடனாயுள்ள அவள் கொங்கையிலேயே வாய் வைக்கின்றதோ அங்ஙனமே சேஷியாகிய ஈசுவரனைப் பற்றப் புகும் சேஷபூதனும் எம்பெருமானுடைய பல உறுப்புகளையும் விட்டு, தான் உய்வதற்கு இடனாய் உள்ள அவன் திருவடிகளையே பற்றுகின்றான் என்பது இதன் பொருள். நம்மாழ்வார் இதற்கு முன்னுள்ள திருவாய்மொழியில்,

''சரண மாகும்தன
தாளடைந்தார்க் கெல்லாம்
மரண மானால்
வைகுந்தம் கொடுக்கும்பிரான்''[38]
[தாள்-திருவடி.]

என்று கூறியுள்ளதை நாம் மேலேயும் குறிப்பிட்டுள்ளோம். ஆகவே, எம்பெருமான் திருவடிகளை உபாயமாகப்

37. முமுட்சுபடி-147 38. திருவாய் 9.10 : 5

பற்றினவர்கட்கு மரணமான பின்பு வீடுபேறு கிடைக்கும் என்பதனை நன்கு அறிந்தவர் ஆழ்வார். தம் திருமேனியின் முடிவு அணித்தென்று தாமே அறுதியிட்டுக் கொண்ட ஆழ்வார்,

"திருமோகூர்
நலங்கழல் அவனடி நிழல்தட
மன்றி யாமே."[39]

[கழலவன்-திருவடி பொருந்தியிருக்கப்பெற்றவன்; அடி -திருவடி; தடம்-பொய்கை]

என்றும்,

"திருமோகூர்
ஆத்தன் தாமரை அடியன்றி
மற்றிலம் அரணே"[40]
[ஆத்தன்-ஆப்தன்; அரண்-பாதுகாப்பு.]

என்றும் கூறியுள்ளதை நினைக்கின்றோம். நாமும் ஆழ்வார் பெற்ற அநுபவத்தைப் பெற முயல்கின்றோம். தீர்த்தம், திருத்துழாய் பெற்று, சடகோபம் சாதிக்கப் பெற்றுத் தாயார் சந்நிதி இருக்கும் இடத்தை நோக்கிச் செல்லுகின்றோம். அங்குச் சென்று அவள் அருளையும் பெறுகின்றோம். தாயாரின் திருநாமம் மோகனவல்லி, இவர் 'திருமோகூர் வல்லி நாச்சியார்', 'மேகவல்லி நாச்சியார்' என்ற திருநாமங்களாலும் வழங்கப் பெறுகின்றார். இங்கும் பிரசாதங்கள் பெற்றுக் கொடிமரத்தின் அருகில் வந்து,

கூத்தன் கோவலன் குதற்றுவல்
அசுரர்கள் கூற்றம்
ஏத்தும் நங்கட்கும் அமரர்க்கும்
முனிவர்க்கும் இன்பன்,[41]

39. திருவாய் 10.1:2 41. ஷை 10.1:6
40. ஷை 10. 1 : 6

[கூத்தன்—அழகிய நடையை உடையவன்; குதற்றும்—பீடையைப் பண்ணும்.]

என்று ஆழ்வாரால் போற்றப்பெறும் எம்பெருமானிடமிருந்து விடைபெறுகின்றோம். காளமேகத்தின் மீது எழுந்த திருவாய்மொழிப் பாசுரங்கள் நம்மிடற்றொலியாக வெளிப்படுகின்றன.

"வண்திரு மோகூர்க்கு
ஈத்த பத்திவை யேத்தவல்
லார்க்கிடர் கெடுமே."[42]

என்ற பாசுரப் பகுதி நம்மைச் சிந்திக்கத் தூண்டுகின்றது. 'திருமோகூர்க்கு ஈத்த பத்து' என்றவிடத்து நாம் அறியத் தக்க செய்தி ஒன்றுண்டு. பராசரபட்டர் அருளிய திருவாய்மொழித் தனியனில்,

"வான்புகழும் சோலை
மதிளரங்கர் வண்புகழ்மேல்
ஆன்ற தமிழ்மறைகள்
ஆயிரமும்."[43]

என்ற பகுதியால் திருவாய்மொழி ஆயிரமும் திரு அரங்கத்து அழகிய மணவாளன்மீதுள்ள பாசுரங்கள் என்று சொல்லப் பெற்றுள்ளது. இஃது எப்படிப் பொருந்தும்? என்ற வினா எழுகின்றது.

'கங்குலும் பகலும்'[44] என்ற திருவாய்மொழி ஒன்றே அரங்கநாதன்மீது எழுந்ததாகும். அப்படியிருக்க, திருவாய்மொழி ஆயிரமும் அரங்கநாதன் மீது எழுந்தனவாகச் சொல்லப் பெறறதற்குச் சான்று யாது? என்ற வினா முற்காலத்திலேயே எழுந்தாக அறிக்கின்றோம். அதற்கு நம் பண்டைய வைணவ

42. திருவாய் 10.1:11
43. திருவாய்.தனியன் 44. திருவாய் 7.2.

ஆசாரியர்கள் கூறினதையே நாமும் ஒப்புக் கொள்ள வேண்டியதைத் தவிர வேறொன்றும் இல்லை. அழகிய மணவாளன் திருவடிக்கே திருவாய்மொழி ஆயிரமும் சமர்ப்பிக்கப் பெற்றதாம். அதிலிருந்து மற்றைத் திருப்பதி எம்பெருமான்களுக்குப் படியளந்து தரப் பெற்றதாம். ஆனதுபற்றியே 'திருவேங்கடத்துக்கிவை பத்தும்' என்றும், திருமோகூ க்கு ஈத்த பத்திவை' என்றும், இவைபத்தும் திருக்குறுங்குடியதன் மேல்' என்றும் ஆழ்வார்தாமே அருளிச் செய்கின்றார் என்றார்களாம்.

இந்தத் திருவாய் மொழியை நாம் ஓதின அளவில் 'நம் துன்பங்கள் யாவும் தொலைந்து போயின' என்ற உணர்ச்சியைப் பெறுகின்றோம். 'இடர்கெடுமே' என்ற தொடர் நம்மை இங்ஙனம் சிந்திக்கச் செய்கின்றது. இந் நிலையில் இந்தக் காளமேகப் பெருமாளைப்பற்றிக் காளமேகப் புலவர் பாடிய ஒரு பாடல் நம் சிந்தையில் குமிழியிடத் தொடங்குகின்றது.

பொன்னனைவாள் அரக்கனைநூற்
றுவரைக் காவைப்
பொருசிலையைக் கனை கடலைப்
பொன்னன் ஈன்ற
நன்மகற்காய்ச் சுரர்க்காயஜ
வருக்காய்க் காதல்
நட்பினுக்காய்ச் சானகிக்காய்
நடவைக் காக
மன்னுகிரால் வடிக்கணையால்
வளையால் புள்ளால்
வயங்குதோள் வலியால்வா
னரங்க ளாலும்
முன்னுடல்கீ றிச்சிரங்கொண்(டு)
அமரில் வீழ்த்தி

முதலொடுங்கொண்(டு) இறுத்தடைத்தான்
மோகூ ரானே.[45]

[பொன்னன்-இரணியன்; வாள் அரக்கன்-இராவணன்; கா-பாரிசாதசோலை; சிலை-வில்; கனைகடல்-ஒலிக்கும் கடல்; பொன்னன் ஈன்றமகன்-பிரகலாதன்; நடவை-வழி; உகிர்-நகம்; வளை-சங்கு; புள்-பறவை(கருடன்); உடல் கீறி-உடம்பைப்பிளந்து; முதலொடுங்கொண்டு-வேருடன் பெயர்த்து எடுத்து,]

இப் பாடலில் இரணியவதம், இராவணவதம், நூற்று வரை மாய்த்தல், பாரிசாத சோலையைக் கொணர்தல், மருத மரத்தை இறுத்தல் போன்ற தீரச் செயல்களைப் புரிந்தவன் திருமோகூர் எம்பெருமானே என்று கூறி அநுபவிக்கின்றார் கவிஞர்; விபவாவதாரச் செயல்களை யெல்லாம் அர்ச்சாவதாரத்தில் ஏற்றி மகிழ்கின்றார். வைணவ தத்துவப்படி இரண்டும் ஒன்றுதானே.

இப் பாடலை அநுபவித்துக் கொண்டிருக்கும் பொழுதே இத் தலத்தைப்பற்றித் திவ்வியகவி அருளிய திருப்பாடல் நினைவிற்கு வருகின்றது.

வாயால் மலர்க்கோதி வாவிதொறு மேயுமோ
மேயாமல் அப்பால் விரையுமோ-மாயன்
திருமோகூர் வாயின்று சேருமோ நாளை
வருமோகூர் வாயன்னம் வாழ்ந்து.[46]

[வாவி-தடாகம்; மாயன்-திருமால்; திருமோகூர்வாய்-திருமோகூரினிடத்து]

தலைவனைப் பிரிந்த தலைவி அவன்பால் அன்னத்தைத் தூது விடுத்து அதன் செயலில் ஐயுற்று நெஞ்சிற்குக் கூறியதாக அமைந்த இப்பாடல் நம் உள்ளத்தைக் தொடு கின்றது. திவ்விய கவியின் ஞானக் கண்ணுக்கு

45. தனிப்பாடல் திரட்டு- முதற்பகுதி (கழகம்)-523
46. நூற்.திருப் அந்-46.

இலக்கான எம்பெருமான் மறைந்த அளவிலே அவனது நிரந்தரானுபவத்தைப் பெற விரும்பிய அவர் தமது நிலைமையை அப்பெருமான் சந்நிதியில் விண்ணப்பம் செய்யும்படி ஆசாரியர்களை வேண்டி அவர்களைத் தமது காரியத்தைக் கைகூட்டுவிக்க வேண்டுமே என்று கவலுவதாக அமைந்த இதன் உள்ளுறைப் பொருளையும் சிந்தித்து மகிழ்கின்றோம். அன்னப் பறவைகளை ஆசாரியர்களாகக் கொள்ளுவது வைணவ சித்தாந்தம்.[47]

இத்திருப்பாடல் திவ்விய கவியின் இன்னொரு பாசுரத்தையும் நினைக்கச் செய்கின்றது.

மறக்குமோ காவின் மதுவருந்தி அப்பால்
பறக்குமோ சன்னிதிமுன் பாமோ - சிறக்கத்
திருவரங்கர் கேட்குமோ தாழ்க்குமோ நெஞ்சே
திருவரங்கர் பாற்போன தேன்.[48]

[கா-சோலை; ஆமோ-சேருமோ; தேன்-வண்டு.]
தலைமகன்பால் வண்டைத் தூதுவிடுத்த தலைமகள் அது திரும்பி வாராமையால் அதன் நிலைமையை ஐயுற்றுத் தன் நெஞ்சோடு கூறியதாக அமைந்தது இத்திருப்பாடல்.

இந்த நிலையில் புகழேந்திப் புலவரின் வாக்கும் நம் சிந்தையில் எழுதுகின்றது,

''இவ்வளவில் செல்லுங்கொல்
இவ்வளவில் காணுங்கொல்
இவ்வளவில் காதல்
இயம்புங்கொல் — இவ்வளவில்
மீளுங்கொல் என்றுரையா
விம்மினான் மும்மதம்நின்(று)
ஆளுங்கொல் யானை
அரசு.''[49]

47. ஆச. ஹிரு.சூத்-151
48. திருவரங் கலம்-25
49. நளவெண்-சுயவரகா-40

[மும்மதம் நின்று-மூன்று வகை மதங்களும் மிகுந்து; கொல்யானை - கொலைத்தொழிலையுடைய யானையை யுடைய; அரசு-நளன்.]

அன்னத்தைத் தூதுவிட்டு அது தமயந்தியிடமிருந்து எப்போது திரும்பி வரும் என்று எதிர்பார்த்திருக்கும் நளன் வாக்காக வெளிவந்தது இப்பாடல்.

இவ்விடத்தில் இத்தலத்து எம்பெருமானிடம் திகழும் திருக்குணத்தைப் பற்றிய ஆசாரிய ஹிருதயச் சூத்திரத்தை நினைக்கின்றோம்.

'மார்க்கபந்து சைத்யம்
மோஹனத்தே மடுவிடும்'[50]

[மார்க்க பந்து - வழித்துணை; சைத்யம் - குளிர்ச்சி; மோஹனம்-மோகூர்.]

திருமோகூரில் இறைவனுடைய 'தண்மை' என்ற குணம் விளங்கும் என்கின்றார் இதில். 'காளமேகத்தை அன்றி மற்றொன்றிலம் கதி' (10.1:1); 'ஆத்தன் தாமரை அடி அன்றி மற்றுஇலம் அரண்' (10.1:6) என்பவற்றைத் திருவுள்ளம்பற்றி 'மார்க்கபந்து' என்கிறார். 'அவனடி நிழல் தடம்' (10.1:2), 'மரகத மணித் தடம்' (10.1:8) என்ற பாசுரப் பகுதிகளைத் திரு உள்ளம் பற்றி 'சைத்யம்' என்றார். தேவர்கட்கு அமுதம் அளித்து சமயத்தில் அசுரர்களை மயங்கச் செய்த செயலுடன் இறைவன் சேவை சாதிக்கும் இடமாதலால் இத்தலத்தை 'மோஹனம்' என்கிறார் தயரதன் பெற்ற மரகத மணித்தடம்' (10.1:8) என்னும் திருப்பாசுரப் பகுதிக்குச் சேர 'மடுவிடும்' என்கிறார். இந்த நுட்பங்களையும் சிந்திக்கின்றோம்.

இந்தத் திவ்விய தேசத்திற்கு இலக்கியச் சிறப்பும் உண்டு. பழைய சங்க இலக்கியங்களில் இவ்வூரைப்

50. ஆசா. ஹிரு. சூத்-182.

பற்றிய குறிப்பு வருகின்றது. பத்துப்பாட்டில் ஒன்றாகிய மதுரைக் காஞ்சி பழையன் என்ற ஒரு குறுநிலமன்னன் திருமோகூரை ஆண்டதாகக் குறிப்பிடுகின்றது.

> "பழையன் மோகூர் அவையகம் விளங்க
> நான்மொழிக் கோசர் தோன்றியன்ன"[51]

என்ற அடிகளினால் இதனை அறியலாம். பழையனுடைய நியாயசபையில் 'கோசர்' என்ற வீரர்கள் இருந்தனர். 'நாலூர்க் கோசர்'[52] என்று குறுந்தொகையால் குறிப்பிடப்பெறுபவரும் இவரே. வம்பமோரியர் வடுகரை முன்னர் அனுப்பி அவர்களைத் தொடர்ந்து தென்னாட்டின்மீது படையெடுத்து வந்தபொழுது பழையன் அவர்கட்குப் பணியாமல் கோசரின் துணையால் அவர்களை ஆலம்பலத்தில் வென்றதாக அகநானூறு பேசும்.[53] இதனால் மௌரியர் காலத்துக்கு முன்னதாகவே மோகூர் பழம் பெருமையுடன் சிறப்புற்றிருந்தது என்பதை அறிகின்றோம்.

> பழையன் காக்கும் குழைபயில் நெடுங்கோட்டு
> வேம்பு முதல் தடிந்த ஏத்துவாள் வலத்துப்
> போந்தைக் கண்ணிப் பொறைய கேட்டருள்[54]

என்ற சிலப்பதிகார வரிகளால் பழையனைச் செங்குட்டுவன் வென்று அவன் காவல் மரமாகிய வேம்பினை தடிந்த நிகழ்ச்சியை அறிகின்றோம். இதனை,

> "பழையன் காக்கும் கடுஞ்சினை வேம்பின்
> முழாரை முழு முதல் துமியப் பண்ணி"[55]

என்ற பதிற்றுப் பத்து வரிகளும் அரண் செய்கின்றன.

திருமோகூருக்கு வரலாற்றுச் சிறப்பும் உண்டு. கிரேக்க நாட்டு வானநூலறிஞரான தாலமி மோகூரைத்

---

51. மதுரைக் காஞ்சி. அடி 508, 9
52. குறுந். 15.
53. அகம்-261 (அடி 10-13.)
54. சிலப்-27 நீர்ப்படை, அடி 124-26
55. பதிற். 5-ஆம்பத்து-பதிகம்.

புவிநூற் படத்தில் குறித்துள்ளார். இத்திருக்கோயிலில் இடைக்காலக் கல்வெட்டுகள் நிறைய உள்ளன. இத் திவ்விய தலத்தில் பழையனின் பலத்த கோட்டையும் இருந்ததாகச் சான்றுகள் உள்ளன. திருமோகூர் தென்பறம்பு நாட்டின் ஒரு பகுதியாகத் திகழ்ந்திருந்த தையும் அறிக்கின்றோம். 18-ஆம் நூற்றாண்டின் பிற் பகுதியில் நாயக்க மன்னர்களின் ஆட்சியில் இத் திருக் கோயில் கோட்டையாகப் பயன்பட்ட செய்தியும் அறியக் கிடக்கின்றது. கோயில்குடி, திரும்பூர் என்றெல்லாம் வழங்கியிருப்பதையும் அறிகின்றோம். கர்நாடகப் போர் நடைப்பெற்ற காலத்தில் முகம்மது அலி ஹீரான் மோகூர்த் திருக்கோயிலை முற்றுகையிட்டு உள்ளே புகுந்து பொன்னும், பொருளும் கொள்ளையடித்ததாகவும் கோயிலின் பாதுகாப்பாளர்களாகத் திகழ்ந்த கள்ளர் குலமக்கள் ஹீரானின் படைகளை விரட்டியடித்து அவர்கள் கைப்பற்றிய பொன், பொருள், இறைவன் திருமேனி முதலியவற்றை மீட்டதாகவும் அறிகின்றோம். இச்செய்தி களையெல்லாம் அறிந்த மனநிறைவுடன் நம் இருப்பிடத் திற்குத் திரும்புகின்றோம்.

# 6. திருமாலிருஞ்சோலை வள்ளல்

வைணவர்கள் எம்பெருமானைக் 'கருணாநிதி' என்றும் 'கருணைக் கடல்' என்றும் போற்றி மகிழ் வார்கள். இத்தகைய எம்பெருமான் ஒரு காரணமும் பற்றாமல் ஆன்மாக்கள் மீது காட்டும் கருணையை ஆழ்வார் பெருமக்கள் தம் பாசுரங்களில் சால்லிச் சொல்லி அநுபவித்து மகிழ்ந்துள்ளனர். இதனைப் பிள்ளை உலக ஆசிரியர் மிகவும் எளிதான உவமையால் தெளிவாக விளக்குவர். பொன்வணிகன் தான் வாங்கும் பொன்னை மாற்றுப் பார்ப்பதற்காக உரைகல்லிலே உரைப்பான். அந்த மாற்றுக்குக் கிட்டத்தட்டச் சரியாக இருக்கும் எனத் தான் கருதும் 'மச்சாணி'யையும் அக் கல்லில் முன் உரைத்ததன் அருகில் உரைப்பான். இரண்டு உரையையும் மெழுகில் ஒற்றி எடுத்து மாற்று களை ஒப்பிட்டுத் தான் வாங்கும் பொன்னின் மாற்றினை அறுதியிடுவான். இத்தகைய அவன் செயலால் நாளாக நாளாக சிறிது சிறிதாகப் பொன் மெழுகில் சேர்ந்து கொண்டே போகும். சுறுசுறுப்பாகப் பொன் வாணிகம் நடைபெற்றால் ஓராண்டில் மெழுகில் சேரும் பொன்னை விற்றே தன் மகள் ஒருத்தியின் திருமணத்தையே முடித்த பொன் வாணிகர்களும் உளர். ஒற்றி எடுக்கும் பொன் துகளே நாற்பது சவரன், ஐம்பது சவரன் என்று சேர்ந்து விடும். இங்ஙனமே எம்பெருமானும் ஆன்மாக் களின் பிறவிகள் தோறும் அவர்கள் அறியாது செய்யும் சிறு சிறு செயல்களையும் அறிந்து செய்யும் பெரிய

செயல்களாகக் கற்பித்துக் கொண்டும், தானே அவற்றை ஒன்று பத்தாக்கி நடத்திக் கொண்டு போவான் என்று கூறுவர் பிள்ளை உலக ஆசிரியர். இக்கருத்தினைச் சில எடுத்துக் காட்டுகளாலும் விளக்கிச் செல்வர்.

வேனிற்காலத்தில் உழவன் ஒருவன் தன் வயல் காய்ந்து விட்டதன் காரணமாக நெடுந்தொலைவினின்று துளை இட்டு நீர் இறைத்து வாய்க்கால் வழியே நீரை அனுப்புகின்றான் தன் வயலுக்கு. பாலைநிலத்தில் நெடுந்தூரம் நடந்து வரும் பாகவதர்கள் களைப்பால் அந்த உழவன் அறியாமல் வழியில் தாம் காணும் வாய்க்கால் நீரில் தங்கள் திருவடி முதலானவற்றை விளக்கி இளைப்பாறுகின்றனர். இதனை எம்பெருமான் கவனித்துக் கொண்டே இருந்து 'என் அடியார் விடாயைத் தீர்த்தாய்' என்று கணக்கிட்டுக் கொள்வான். அங்ஙனமே செல்வன் ஒருவன் தனக்குச் சூது, சதுரங்கம் முதலியவை ஆடுவதற்கும், காற்றோட்டமாகத் தான் வந்து தங்குவதற்கும் வீட்டின் புறத்தில் திண்ணை கட்டி வைக்கின்றான். மழையில் நனைந்து வரும் சில பாகவதர்கள் அத் திண்ணையில் ஒதுங்கியிருந்து போகின்றனர். இதனை எம்பெருமான் விழிப்புடன் கவனித்து 'என் அடியார்க்கு ஒதுங்க நிழலைக் கொடுத்தாய்' என்று அவர்கள் அறியாதிருந்தும் தானே ஏறிட்டுக் கணக்கிட்டுக் கொள்வான். இவ்வாறு கொள்வதை யாத்ருச்சிகமாகக்[1] கொள்வதாக அந்த ஆசிரியர் குறிப்பர்.

ஒருவன் மற்றொருவனிடம் பேசிக் கொண்டிருக்கும் பொழுது பேச்சுவாக்கில் கோயில், திருமலை, திருவள்ளூர், திருவல்லிக்கேணி என்று தான் சென்று வந்த ஊரைப் பற்றிக் கூறுகின்றான். இதனைக் கவனித்திருக்கும் எம்பெருமான் அவன் கூறியதனையே பற்றாசாகக்கொண்டு

1. யாத்ருச்சிகம்-யாரோ ஒருவருடைய இச்சையில் உண்டாவது.

'என் ஊரைச் சொன்னாய்' என்று கணக்கிட்டுக் கொள்வான் ஒருவன் எதையோ பேசிக் கொண்டிருக்கும் பொழுது அவருடைய பேச்சில் பேசிக் கொண்டிருக்கும் பொருளை யொட்டி அவர் இவர் என்று சில பெயர்களைச் சொல்ல, அப்பெயர்களில் இறைவன் திருப்பெயர்களில் ஒன்றிரண்டு அமைந்துவிட்டால் அதனைக் கொண்டே 'என் பெயரைச் சொன்னாய்'என்றும் ஏறிட்டுக் கொள்வான் எம்பெருமான். இம் மாதிரியாகக் கொள்வதை பிராசங்கிக மாகக்[2] கொள்வது என்று குறிப்பிடுவர் இந்த ஆசிரியர்.

பாகவதர்கள் சிலர் திவ்விய தேச யாத்திரையின் பொருட்டு ஒருகாட்டின் வழியாகச் செல்லுகின்றனர், அவர்களை வருத்தி அவர்கள் கையிலுள்ளவற்றைப் பறிப்பதற்காகச் சில வழிப்பறிக்காரர்கள் அவர்களைப்பின் தொடர்கின்றனர். இந்தக் கொள்ளைக்காரர்கட்குப் பின்னால் தன் காரியமாகப் போகும் சேவகன் தனக்கு முன்னால் செல்பவர்களைப் பற்றிச் சிறிதும் அறியாமல் போய்க் கொண்டிருக்கின்றான். கொள்ளைக்காரர்கள் பாகவதர்களைப் பாதுகாப்பதற்காகவே சேவகன் தம்மைப் பின் தொடர்கின்றான் எனக் கருதி அஞ்சி அப்பாகவதர்களைப் பறியா தொழிகின்றனர். இக்காரணம் பற்றி எம்பெருமான் அந்தச் சேவகனை 'என் அடியாரை நோக்கினாய்' என்று ஏறிட்டுக் கொள்வான். இம் மாதிரியாகக் கொள்வதை ஆநுஷிங்கிகம்[3] என்று கூறுவர் இந்த ஆசிரியர்.

இங்ஙனம் எம்பெருமான் மடிமாங்காயிட்டு ஆன்மாக்களை உய்விக்கும் பெருங்கருணையை நினைந்த

2. பிராசங்கிகம் - பிரசங்கத்திலே உண்டாவது. பிரசங்கமாவது-புத்திக்கு விஷயமானவற்றைவிட முடியாம லிருப்பது.

3. ஆநுசிங்கிகம்-அநுசங்கத்திலே உண்டாவது. அநுசங்கமாவது, பின்னால் உண்டாகும் சம்பந்தம்.

வண்ணம் 'அழகர் கோயில்' என்று வழங்கும் திருமாலிருஞ்சோலை என்ற திவ்விய தேசத்தைச் சேவிக்கச் சித்தமாகின்றோம். அதிகாலையில் நன்னீராடி தூய ஆடையணிந்து நாம் தங்கியிருக்கும் மங்கம்மாள் சத்திரத்தினின்றும் பேருந்து நிலையம் வருகின்றோம். 'அழகர் கோயில்' என்ற பெயர்ப் பலகையைத் தாங்கியிருக்கும் பேருந்தில் ஏறி உட்கார்ந்த அளவில் 'திருமாலிருஞ் சோலை' நம் மனத்தில் இடம் பெறுகின்றது. நம்மாழ்வாரின் பாசுரம் ஒன்று நம் மனத்தில் குமிழியிடத் தொடங்குகின்றது.

''திருமாலி ருஞ்சோலை
மலைஎன்றேன்; என்ன,
திருமால்வந் தென்னெஞ்சு
நிறையப் புகுந்தான்''[4]

என்ற திருப்பேர் நகர் பாசுரத்தின் முதல் இரண்டு அடிகளைச் சிந்திக்கின்றோம். நம்மாழ்வார் கொக்குமலை, குருவிமலை, கழுகுமலை என்ற பல மலைகளையும், சொல்லிப் போகின்றபோக்கில் 'திருமாலிருஞ் சோலைமலை என்ற மலையின் பெயர் யாத்ருச்சிகமாக வெளிவருகின்றது. ஏனைய மலைகளைவிட இம்மலைக்கு ஒரு சிறப்புண்டு என்ற அறிவுடன் சொன்னாரல்லர். இதனையே பற்றாசாகக் கொண்டு எம்பெருமான் பெரிய பிராட்டியாருடன் கூட வந்து அவர்தம் நெஞ்சு நிறையப் புகுந்து கொள்கின்றான். நினையாது சொன்னவற்றையும் நினைத்துச் சொன்னதாக்கிக் கொடுக்க வல்லவளான பிராட்டி அருகில் இருப்பதனால் மலையைப் பற்றின ஆழ்வாரின் வாக்கு எம்பெருமானுக்கு மலையாகவே (பெரிதாகவே) ஆய்விடுகின்றது. எம்பெருமானுக்கு 'நீர் வண்ணன்' என்றொரு திருநாமம் உண்டல்லவா? மிகச் சிறு துவாரம் இருப்பினும் நீர் உள்ளே புகுந்து நிறைந்து விடுவதைப் போலவே நீர் வண்ணனான

4. திருவாய் 10.8 : 1

எம்பெருமானும் ஆழ்வார் மனத்துள் புகுவதற்குத் திருமாலிருஞ் சோலைமலை என்று நினையாது சொன்ன உக்தி மாத்திரமே அவருள் புகுவதற்குரிய சிறிய துவாரமாக அமைந்து விட்ட அதிசயத்தை நினைந்து போற்றுகின்றோம்.

அழகர் கோயில் என வழங்கும் திருமாலிருஞ் சோலை மதுரைக்கு வடக்கே 12 கல் தொலையில் உள்ளது. இத்தலத்திற்கு மதுரையிலிருந்து காரில் செல்லலாம், பேருந்தில் செல்லலாம், குதிரை வண்டியிலும் செல்லலாம். பேருந்தில் செல்லும்நாம் முதலில் திருக்கோயிலுக்கு முன்னதாகவுள்ள ஒரு பெரிய சோலையில் இறங்குகின்றோம். புறச் சூழ்நிலையும் மனநிலையும் ஒரு சேரப்பெற்ற நிலையில் ஆழ்வார் பாசுரங்கள் படலம் படலமாக நம் சிந்தையில் எழுகின்றன. ஆழ்வார்கள் காலத்திலிருந்த சூழ்நிலையை இன்றும் நின்று நிலவுவதைக் கண்டுஅதிசயிக்கின்றோம்.இந்தச்சோலைக்கு வடக்கிலும் மேற்கிலும் நீண்டுயர்ந்த மலைச் சிகரங்கள் இருப்பதையும் சோலையும் மரங்கள் அடர்ந்து இருண்டு இருப்பதையும் காண்கின்றோம். இப்புறக் காட்சி உடனே நம்மை,

> ''குலமலை கோலமலை
> குளிர்மாமலை கொற்றமலை
> நிலமலை நீண்டமலை
> திருமாலிருஞ் சோலையதே.''[5]

[குலம்-தொண்டக்குலத்துக்குத் தலையான; கோலம்-அழகு; மா-பெரிய; கொற்றம்-வெற்றி; நிலம்-மரம் முளைக்கப் பாங்கான நிலம்]

என்ற பெரியாழ்வாரின் பாசுரப் பகுதியில் ஆழங்கால் படச் செய்து விடுகின்றது. இந்தச் சோலையின் நடுவில் தான் திருக்கோயில் திகழ்கின்றது. ஆகவே இது 'திருமாலி

5. பெரியாழ் திரு. 4.3.5

ருஞ்சோலை' என்று பாராட்டப் பெறும் பொருத்தத்தைக் கண்டு இறும்பூது எய்துகின்றோம்.

திருமங்கையாழ்வார் இந்தச் சோலையைச் 'சினை வளர் பூம்பொழில்சூழ் திருமாலிருஞ்சோலை'[6] 'தேன் அமர் பூம்பொழில் சூழ் திருமாலிருஞ்சோலை'[7] 'தேன் அருவி கொழிக்கும் திருமாலிருஞ்சோலை'[8], 'சிலம்பு இயல் ஆறு உடைய திருமாலிருஞ்சோலை'[9] 'திங்கள் மாமுகில் திருமாலிருஞ்சோலை'[10] என்றறெல்லாம் வருணித்திருக்கும் பாசுரப் பகுதிகளில் ஆழங்கால்பட்டு ஆனந்தம் அடைகின்றோம். பாசுரங்களில் சோலையுடன் மலைச்சாரல்களையும் மலையையும் வருணிக்கும் பகுதிகள் நம் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுகின்றன. நம் மாழ்வாரும் இச்சோலையை 'வளர் இளம் பொழிழ் சூழ் மாலிருஞ் சோலை'[11], 'மதி தவழ் குடுமி மாலிருஞ் சோலை'[12] 'மறு இல் வண் சுனை மாலிருஞ்சோலை'[13] 'மறியொடு பிணை சேர் மாலிருஞ்சோலை[14] 'மழக்களிற்றினம்சேர் மாலிருஞ்சோலை'[15] 'மாது உறு மயில் சேர் மாலிருஞ்சோலை,[16] என்றெல்லாம் சொல்லிச் சொல்லி அதன் இயற்கையழகில் தம் உள்ளத்தைப் பறி கொடுத்துள்ளதைக் கண்டு வியப்பெய்துகின்றோம்.

சோலையின் சூழ்நிலை நம்மைத் திருமங்கையாழ்வார் பாசுரங்களில் ஆழங்கால் படத் தூண்டுகின்றது. சோலை மலைச் சாரலில் மூங்கில்கள் விண்டு விரிந்து வளர்ந்துள்ளன; நறுமணம் மிக்க குறிஞ்சி மலர்களிலுள்ள செவ்வித் தேனில் படிந்த வண்டுகள் இன்னொலியுடன்

6. பெரி திரு. 9.9:2
7. ஷை 9.9:5
8. ஷை 9.9.7
9. ஷை 9.9:4
10. ஷை 9.9:4
11. ஷை 2.10:1
12. ஷை 2.10:2
13. ஷை 2.10:5
14. ஷை 2.10:9
15. திருவாய் 2.10:9
16. ஷை 2.10:10

வட்டமிடுகின்றன.[17] இக்காட்சியில் ஆழங்கால் பட்டுள்ள நம் மனம்,

"அறுகால் வரிவண்டுகள் ஆயிர
நாமம் சொல்லிச்
சிறுகாலைப் பாடும் தென்திரு
மாலிருஞ் சோலையே"[18]
[சிறுகாலை-விடியற்காலத்தில்]

என்ற பெரியாழ்வாரின் பாசுரப் பகுதியை எண்ணி மகிழ்கின்றது. காலமுணர்த்தும் சோதிடன் போன்று உரிய காலங்களில் பூக்கும் மேகமண்டலம் வரை ஓங்கி யுயர்ந்த வேங்கை மரங்களும் கோங்குமரங்களும் அங்குச் சூழப் பெற்றுள்ளன.[19] ஒன்றோடொன்று பிணங்கி நிற்கும் விண்ணளாவும் மூங்கில்களின் நுனி மலையுச்சியிலுள்ள தேனடைகளின் வாயைக் கிழிப்ப தனால் தேனீக்கள் நாற்புறமும் பறந்தோடுகின்றன; அதனால் தேனின் மணம் எம்மருங்கும் வீசுகின்றது.[20] 'வரு மழை தவழும் மாலிருஞ்சோலையில்' முகில்கள் ஆழ்கடலில் நீரை முகந்து கொண்டு விண்ணில் ஏறி இடி முழக்கம் செய்கின்றன, அவ்வொலியைக் கேட்கும் சிங்கங்கள் அது யானையின் பிளிறல் என்று கருதி எதிர் முழக்கம் செய்கின்றன.[21] மதங் கொண்ட களிறுகளின் கவுள்களின் வழியே மதநீர் பெருகி வருகின்றது. அதனை வண்டுகள் பருகியும் அதனால் வற்றாது மேலும் பாய்ந்து சாரல்தோறும் வெள்ளமிடுகின்றது.[22] மலை யினின்றிழியும் அருவிகள் சந்தனக் கட்டைகளையும் இரத்தினக் கற்களையும் உருட்டிக் கொண்டு வருகின்றன.[23] இக்காட்சி பெரியாழ்வாரின்,

17. பெரி. திரு. 9.8:2
18. பெரியாழ். திரு. 4.2:3
19. பெரி திரு. 9.8:3,4
20. ஷை 9.8:5
21. ஷை 9.8:6
22. ஷை. 9.8:7
23. ஷை 9.8:1

''ஈட்டிய பல்பொருள்கள்
எம்பிரானுக்கு அடியுறைஎன்று
ஓட்டரும்தண் சிலம்பா
றுடைமாலிருஞ் சோலையதே''[24]

[ஓட்டரும்- ஓடிவாராநின்ற]

பாசுரப் பகுதியை நினைக்கத் தூண்டுகின்றது. இவருடைய அருமைத் திருமகளும்,

''சந்தொடு காரகிலும் சுமந்து
தடங்கள் பொருது
வந்திழி யும்சிலம் பாறுஉடை
மாலிருஞ் சோலை''[25]

[சந்து-சந்தனக் கட்டை; கார்அகில்-அகிற்கட்டை; தடங்கள்-குளங்கள்; பொருது-அழித்து; இழியும்-பெருகும்.] என்று குறிப்பிடுவதையும் எண்ணி மகிழ்கின்றோம். விண்ணளவும் ஓங்கிஉயர்ந்துள்ள சோலைகளில் மானினங்கள் மலையின் நீலப் பாறை வழிகளில் புகுந்து எங்கும் மேய்ந்து கொண்டிருக்கும் காட்சி நம் மனத்தைக் கவர்கின்றது.[26] குறவர்கள் தம் கையிலுள்ள கவணில் வைத்தெறியும் மணிகளின் ஒளி மலையெங்கும் மிகுதியாகக் காணப்பெறுகின்றது.[27]

இத்தகைய ஆழ்வார் கூறும் காட்சிகளில் நம்மனம் ஈடுபட்டுத் திளைக்கும்பொழுது நம்மாழ்வார் திருவாய் மொழியின்,

''வருமழை தவழும்
மாலிருஞ் சோலை''[28]

என்ற அடியில் நம் மனம் ஆழங்கால் படுகின்றது. இங்கு 'மழை தவழும்' என்ற அடைமொழியே போதுமாயிருக்க,

21. ஷை 9 8:6 24. பெரியாழ் திரு. 4.3:9
25. நாச். திரு. 9:10 26. பெரி. திரு. 9.8:7
27. பெரி. திரு. 9.8:3 28. திருவாய் 2.10:4

'வரு' என்று மேலும் ஓர் அடைகொடுத்திருக்கும் நயத்தை நம் பிள்ளை காட்டுவதில் நம் மனம் ஈடுபடுகின்றது. "ஊருக்கு இரண்டாயிற்று மழை, நின்ற இடத்தில் நின்று வர்ஷிப்பதொரு மேகமும்; போவதும் வருவதுமாயிருப்பதொரு மேகமும்" என்ற ஈட்டு ஸ்ரீ ஸூக்தியைக் கண்டு மகிழ்க. மேகங்கள் மலைகளின் பெரிய கொடு முடிவுகளில் இளைப்பாறி இளைப்பாறி மீண்டும் செல்கின்றன வாதலின் 'மழை தவழும்' என்று கூறுகின்றார் போலும்.

சித்தும் அசித்தும் எம்பெருமானின் திருமேனியாக இருப்பதாகக் கருதுவது வைணவ சித்தாந்தம். ஆகவே, எம்பெருமானின் இருப்பிடமாகிய அசித்தைத் தொழுவதும் எம்பெருமானின் திருமேனியைத் தொழுவதோடொக்கும். இது கருதியே நம்மாழ்வாரும்,

"மாலிருஞ்சோலை
பதியது ஏத்தி
எழுவது பயனே"[29]

என்றும்,

"சென்று சேர்திரு
வேங்கட மாமலை
ஒன்று மேதொழ
நம்வினை ஓயுமே."[30]

என்றும் கூறியுள்ளதை எண்ணி எண்ணி மகிழ்கின்றோம். இந்த எண்ணத்தில் ஆழ்ந்திருக்கும் பொழுது மலையின் மீது ஏறிப் பார்க்க வேண்டுமென்று நம் மனம் உந்துகின்றது. சற்றுக் காலையிலேயே வந்து விட்டதால் வெயில் வருவதற்கு முன்னர் மலையேறத் திட்டமிடுகின்றோம்.

சோலையின் நடுவில் இறங்கியிருக்கும் நாம் கோயிலின் பெருவாயில் எப்போதும் அடைத்தே வைத்திருப்பதைக் காண்கின்றோம். அங்குத்தான் திருக்கோயிலின் காவற்

29. திருவாய் 2.10:2 30. ஷை 3.3:8

கடவுளான பதினெட்டாம்படிக் கருப்பர் இருக்கின்றார். இவர் உருவிலி. இவர் சந்நிதி முன்பு யாரும் பொய் சொல்லத் துணியார். இவர் முன்னர் சத்தியம் செய்வது என்னும் மரபு இன்றும் இருந்து வருகின்றது. இவருடைய காவலில் தான் திருமாலிருஞ்சோலை எம்பெருமான் இருந்து வருவதாகக் கோயில் நிர்வாகத்தின் ஏற்பாடு. நாள் தோறும் கோயிலில் உள்ள பண்டாரத்தைப் பூட்டித் திறவு கோலை இந்தப் பதினெட்டாம்படிக் கருப்பரிடம் கொண்டு வைப்பதும் மறுநாள் காலையில் பட்டர் முதல்நாள் வைத்த திறவு கோலை எடுத்துச் செல்வதுமான வழக்கம் இன்றும் நடைமுறையில் இருந்து வருகின்றது. மேலும், அழகர் மீனாட்சித் திருமணத்திற்காகப் புறப்படுங்கால் அவர் அணிந்துள்ள நகைகளின் பட்டியலை இக் காவல் தெய்வத்தினிடம் படித்துக் காட்டும் மரபும், அங்ஙனமே அவர் திரும்பும் போது அவர்முன் மீண்டும் பட்டியலைக் படித்துக் காட்டும் வழக்கமும் இன்றும் நடைமுறையிலிருப் பதை அறிகின்றோம். நம்முடைய பழக்க வழக்கங்களை யெல்லாம் எம்பெருமானுடைய பழக்க வழக்கங்களாகக் கருதும் மரபினை மக்கள் ஏற்படுத்தியுள்ளனர். மக்களைக் காக்கும் கடவுளுக்கும் ஒரு காவலாள். பெரியாழ்வாரின் மனப்பான்மை போன்ற ஒரு மனப்பான்மையேயன்றி வேறொன்றும் அல்ல.

பதினெட்டாம் படி வாயிலுக்கு வடபுறம் உள்ள மதிலின் ஒரு சுவர் திறந்திருக்கும். வண்டிவாயில் எனப் படும் அந்த வாயிலின் வழியாக நுழைந்துதான் கோயிலின் வெளிப்பிராகாரத்தை அடைய வேண்டும். கோயிலின் வட புறம் உள்ள வழியே மலைக்குச் செல்லும்வழியாகும். அந்த வழியாக மலையேறி இரண்டு மையில் சென்று **'நூபுர கங்கை'** என்னும் தீர்த்தத்தை அடைகின்றோம். இதன் உற்பத்தி நம் கண்ணுக்குப் புலனாவதில்லை. யானைத் துதிக்கைபோல் அமைந்திருக்கும் கோமுகியின் வழியாக மாதவி மண்டபத்திற்கு வருவதுதான் நம் கண்ணில்

படுகின்றது. இந்தத்தீர்த்தத்தில் அயச்சத்தும்தாமிரச்சத்தும் இருப்பதாகவும் இதில் நீராடுபவர்கட்குத்தீராதநோய்களெல்லாம்தீர்வதாகவும் சொல்லுகின்றனர். இந்தத்தீர்த்தம்தெற்கு நோக்கிப் பாய்ந்து வருங்கால் 'சிலம்பாறு' என்றபெயருடன் இரண்டாவது தீர்த்தமாகின்றது. திருமால் உலகளந்த காலத்தில் திரிவிக்கிரமனின் திருவடி சத்தியலோகத்தை எட்டினபொழுது நான்முகன் தன் கைக் கமண்டல தீர்த்தத்தால் கழுவி விளக்கியதாகவும், அந்த எம்பெருமானின் காற் சிலம்பினின்று தோன்றியதனால் 'சிலம்பாறு' என்று பெயர் பெற்றதாகவும் புராண வரலாறு. நூபுர கங்கை என்ற வடமொழிப் பெயரும் இது பற்றியதே. வடமொழியில் சிலம்பு, 'நூபுரம்' என்று வழங்கப்பெறும். இதனையே திருமங்கையாழ்வார்,

> "சிலம்பிப லாறுடைய
> திருமாலிருஞ் சோலை"[31]

என்று தம்முடைய பாசுரத்தில் குறிப்பிட்டுள்ளார்.

இவ்விடத்தில் திருக்கண்ணபுரம் சுவாமி என்ற ஒரு வைணவப் பெரியார் 'சிலம்பாறு' என்பதற்கு சுவையாகப் பணித்த விளக்கமும் நம் நினைவிற்கு வருகின்றது 'சிலம்பொலி ஞெகிழி குன்றாம்' என்ற சூளாமணி நிகண்டின்படி 'சிலம்பு' என்ற சொல் குன்றினையும் குறிக்கும். கின்னர மகளிர் திருமாலிருஞ்சோலைத் தாழ்வரையில் வந்து தங்கி நம்மாழ்வாரது திருவாய்மொழிப் பாசுரங்களை இசையுடன் ஓதினதாகவும், 'மரங்களும் இரங்கும் வகை மணிவண்ணவோ' என்று கூவின ஆழ்வாரது பாசுரங்களைச் செவிமடுத்த குன்றும் உருகிப் பெருகா நின்றது என்றும், அங்ஙனம் குன்றே உருகிப் பெருகினமையால் அது 'சிலம்பாறு' என்று பெயர் பெற்றதாகவும் கூறுவாராம். பெரியாழ்வாரின்,

---

31. பெரி. திரு 9,9:9

''சிலம்புஆர்க்க வந்து தெய்வ
மகளிர்கள் ஆடும்சீர்ச்
சிலம்பாறு பாயும் தென்திரு
மாலிருஞ் சோலையே.''[32]

என்ற பாசுரப்பகுதியே இப்பெரியாரை இங்ஙனம் நினைக்கத் தூண்டியதோ என்று கருதத் தோன்றுகிறது. 'சிலம்பியாறுடைய' என்ற சொற்றொடருக்குப் பெரிய வாச்சான் பிள்ளை அருளிய விளக்கம்: 'ஸ்வர்க்கத்தி தினின்றும் அப்ஸரஸ்ஸுக்கள் வந்து ஆச்ரயிக்க அவர் களுடைய சிலம்பினுடைய ஸ்வபாவத்தையுடைத்தான ஆற்றையுடைய திருமலை'' என்பது. இதனையும் எண்ணி மகிழ்கின்றோம்.

'சிலம்பாறு' என்ற இந்த ஆறு சுந்தரராசனின் திருவடிகளை வருடிக் கொண்டு பாய்ந்து பெருகி வயல் களை வளப்படுத்தும் காட்சியையும் காண்கின்றோம். நீரின் சுவை இனிமையாக இருப்பதால் இந்த ஆற்றைத் 'தேனருவி' என்றும் மக்கள் பெயரிட்டு வழங்குகின்றனர். மக்கள் மனக்கருத்தையே பிரதி பலிப்பதைப் போல் பெரியாழ்வாரும்,

வான் காட்டி னின்று மாமலர்க்
கற்பகத் தொத்துஇழி
தேன்ஆறு பாயும் தென்திரு
மாலிருஞ் சோலையே.[33]

[வான்நாடு-உம்பர்உலகம்; தொத்து-கொத்து; இழி-பெருகும்.]

என்று பாடியுள்ளதை நினைத்து மகிழ்கின்றோம். இந்த ஆறு இருந்த இடத்தில் தான் 'திருமுருகாற்றுப்படை' குறிப்பிடும் பழமுதிர் சோலை மலைகிழவோனாக

32. பெரியாழ். திரு. 1. 2:1
33. ஷை. 4.2:4

முருகன் அன்று கோயில் கொண்டிருந்தான். அதுவே ஆறுபடை வீடுகளில் ஒன்றான பழமுதிர்ச்சோலைமலை என்றும் அறிகின்றோம்.[34] அண்மையில் அங்கு முருகனுக்கு ஒரு திருக்கோயில் எழுப்பித்துள்ளனர் முருகனடியார்கள். எப்படியோ இந்த மலை பண்டைக்காலம் முதல் இன்று வரை திருமாலுக்கும் அவன் மருகன் முருகனுக்கும் உரிய மலையாக வந்திருக்கின்றது. அதனாலேயே கந்தபுராணம் இம்மலையை 'முத்தி தருபேரழகர் திருமலை' என்று சிறப்பித்துள்ளது என்பதனையும் அறிந்து மகிழ்கின்றோம். மலையின் மேலிருந்த படியே பெரியாழ்வாரின் இரண்டு திருமொழிகளையும்,[35] திருமங்கையாழ்வாரின் ஒரு திருமொழியையும்[36] வாய் வெருவப் பாடிப்பாடிப் பாசுரத்தின் சுவையிலும் நாம் நேரில் காணும் காட்சியிலும் ஆழ்ங்கால்பட்டு ஆநந்தம் அடைகின்றோம்.

தீர்த்தங்களைச் சேவித்த பிறகு தீர்த்தனாகிய எம் பெருமானைச் சேவிப்பதற்காகக் கீழே இறங்குகின்றோம். இறங்கும் போது.

> ''கிளர்ஒளி இளமை கெடுவதன் முன்னம்
> வளர்ஒளி மாயோன் மருவிய கோயில்
> வளர்இளம் பொழில்சூழ் மாலிருஞ் சோலை
> தளர்வுஇலர் ஆகிச் சார்வது சதிரே.''[37]

[கிளர்-மேன்மேலும் கொழுந்து விடுகின்ற; மருவிய-தங்கியுள்ள; தளர்வு-தளர்ச்சி; சார்வது-அடைவது; சதிர்-சாதுர்யம்]

---

34. இது விவாதத்திற்குரியது. டாக்டர் மா. இராசமாணிக்கனார் எழுதியுள்ள பத்துபாட்டு ஆராய்ச்சி (சென்னைப் பல்கலைக்கழகம்) என்ற நூலில் திருமுருகாற்றுப்படை பற்றிய ஆய்வுக் கட்டுரையைக் காண்க.

35. பெரியாழ். திரு. 4. 2; 4. 3.

36. பெரிய. திரு. 9.8 37. திருவாய் 2.10:1

என்று தொடங்கும் பாசுரம் முதல் பத்துப் பாசுரங்களையும் திருகடைக்காப்புப் பாசுரத்தையும் சேவித்துக் கொண்டே இறங்கி வருகின்றோம். வருங்கால் பாசுரங்களின் சில சொற்றொடர்களில் ஆழங்கால்படுகின்றோம்.

'மறியொடு பிணைசேர் மாலிருஞ்சோலை,[38] திருமலைக்கு 'மறியோடு பிணைசேர்' என்ற அடைமொழி கொடுத்ததற்கு ஓர் உட்கருத்து உண்டு. அந்த மலையில் குட்டியும் தாயும் பிரியாதிருத்தல் போல் நாமும் தாயும் தந்தையுமாய் இவ்வுலகினில் ஈசனைப் பிரியாதிருத்தல் நன்று என்று தொனிப் பொருள் காட்டியுள்ளதை அநுபவிக்கின்றோம்.

'வலஞ்செய்யும் ஆய மாயவன்கோயில்,[39] ஆயன் + மாயவன் — ஆய மாயவன். 'வலம் செய்யும்' என்ற அடைமொழியால் எம்பெருமான் தன்னையும் கொடுத்து தன்னை அநுபவிக்கைக்கீடான வலிமையையும் கொடுப்பவன் என்பது உணரப்பெறும். இதற்குவேறு வகையாகவும் பொருள் கூறுவர்: "திருச்சித்ரகூட பரிஸரத்திலே பிராட்டியும்கூடக் கையைப் பிடித்துக் கொண்டு உலவினாற் போல, பிராட்டியைப் பிடித்துக் கொண்டு அழகர் ஆதரத்தோடே ஸஞ்சரிக்கிற தேசம்" என்பது நம்பிள்ளை ஈடு. "அழகர் பிராட்டிமாரோடே கூடவலஞ் செய்கிற" என்பர் பெரிய வாச்சான் பிள்ளை. இப்பொருளில், ஆய மாயவன் வலஞ் செய்யும் கோயில் என்று கொண்டுகூட்ட வேண்டும்.

மழக்களிற்றினம் சேர் மாலிருஞ்சோலை[40]: இதில் 'மழக்களிற்றினம் சேர்' என்ற விடத்து ஒரு நயத்தைக் காட்டுவர் நம்பிள்ளை; "லட்சணோபேதமாயிருப்பதொரு ஆனை நின்ற விடத்தே ஆயிரம் ஆனைகள் வந்து சேரா நிற்கும். அங்கு நிற்கிறதோ சோலை மழகளிறு" என்ப

38. திருவாய் 2 10.6 39. ஷை 2.10:8
40. ஷை 2.10:9

தாக. திருமங்கையாழ்வார் அழகரை 'சோலை மழ களிறே'[41] என்றும், 'தென் ஆனாய்'[42] (தெற்கு திருமலையில் நிற்கின்ற யானையே) என்றும் விளித்தார். அப்படி பட்ட யானையின் அருகே மழகளிற்றினம் சேர்வது வியப்பன்று என்று காட்டியவாறு.

'பொருள் என்று இவ்வுலகம் படைத்தவன்'[43] 'ஒரு நாளாகிலும் பயன்படும் என்று கருதி இவ்வுலகங்களைப் படைத்த எம்பெருமான்' என்பது பொருள். எம்பெருமான் இவ்வுலகைப் படைப்பதாவது இறகொடிந்த பறவை போலே களேபரங்களை (உறுப்புக்களோடு கூடின உடலை) இழந்திருந்த ஆன்மாக்களுக்கு அவற்றைக் கொடுத்தல். அப்படி எத்தனைத் தடவைப் படைத்தாலும் பயன்படா தொழிந்தாலும் என்றேனும் ஒரு நாள் பயன்படும் என்று கருதி மேன்மேலும் படைப்புகளைச் செய்துகொண்டே போவான் என்கை. பிறிதோரிடத்திலும் இந்த ஆழ்வார்.

— சோம்பாது இப்
பல்உருவை எல்லாம்
படர்வித்த வித்தா![44]
[வித்து-ஆதிமூலம்.]

என்று கூறியுள்ளதையும் எண்ணி மகிழ்கின்றோம்.

இங்ஙனம் சிந்தித்தவண்ணம் மலையடிவாரத்திலுள்ள திருக்கோயிலின் வெளிப் பிராகாரத்தை அடைகின்றோம். அருகிலுள்ள குழாயில் கை கால் முகம் கழுவி நீர் அருந்தி மலையேறி இறங்கிய களைப்பைப் போக்கிக் கொள்ளுகின்றோம். கோயிலின் முன்பு உள்ள திருமண மண்டபத்திற்கு வருகின்றோம். இங்கு நல்ல சிற்பவடிவங்களையுடைய தூண்கள் உள்ளன. பொன்னன் உடல் கிழிக்கும் நரசிம்மர், வேணுகோபாலன், இரதி, மன்மதன், கருட வாகனத்தில் காட்சி தரும் திருமால், திரிவிக்கிரமர்,

41. பெரி திரு. 4.9:2 42. திருநெடுந். 10
43. திருவாய் 2 10:11 44. பெரி. திருவந். 18

இலக்குமி, வராகர் முதலிய கண்கவர் கற்சிலைகளைக் கண்டு களிக்கின்றோம். கலையுணர்ச்சியுள்ளவர்கள் இவற்றைக் கண்டு களிப்பதற்கென்றே இத்திருக்கோயிலுக்கு திருத்தலப் பயணம் வந்தாலும் வரலாம்.

திருக்கோயிலின் பிரதான வாயில் தொண்டைமான் கோபுர வாயில் என்பது. அதனைக் கடந்துதான் திருக் கோயிலின் உட்பிராகாரங்கட்குச் செல்ல வேண்டும். திருக்கோயில் மிகப் பெரிய கோயிலே. இரண்டு மூன்று பிராகாரங்களைக் கடந்துதான் கருவறைக்கு வந்து சேர வேண்டும். வழியில் சுந்தரபாண்டியன் மண்டபம், ஆரியன் மண்டபம், முனைதரையன் மண்டபம் முதலியவற்றைக் காண்கிறோம். கிழக்கு நோக்கிய திருமுக மண்டலங் கொண்டு நின்ற திருக்கோலத்தில் பெரிய பிராட்டியார், பூமிப் பிராட்டியார் இருபுறம் நிற்கச் சேவை சாதிக்கும் மூலவர் பரமசாமியைக் காண்கின்றோம். இவரே திருமாலிருஞ்சோலை எம்பெருமான். இவருடை திருமேனி யின் அழகில் நம் உள்ளத்தைப் பறிகொடுகின்றோம் நம்மையும் அறியாது.

"முடிச்சோதி யாய்உனது
முகச்சோதி மலர்ந்ததுவோ?
அடிச்சோதி நீநின்ற
தாமரையாய் அலர்ந்ததுவோ?
படிச்சோதி ஆடையொடும்
பல்கலனாய் நின்பைம்பொன்
கடிசோதி கலந்ததுவோ
திருமாலே! கட்டுரையே."[45]
[கடி-இடுப்பு (வடசொல்)]

என்ற நம்மாழ்வாரின் பாசுரம் மிடற்றொலியாக வெளிப் படுகின்றது. "நின் திருமுக மண்டலத்தின் ஒளி மேல் முகமாகக் கிளர்ந்து திருவபிடேகச் சோதியாய

45. திருவாய் 3.1:1

வடிவு கொண்டதோ? நின் திருவடியின் ஒளியே கீழ் முகமாகக் கிளர்ந்து சென்று ஆசன பதுமமாக வடிவு கொண்டதோ? நின் திருவரை (இடுப்பு)யின் ஒளி பீதக ஆடையாகவும் பலவகைப்பட்ட அணிகளாகவும் வடிவு கொண்டு பரவியதோ? அடியேனுக்கு உரைப் பாயாக'' என்ற ஆழ்வார் வாக்கைக் கொண்டே எம் பெருமானைக் வினவுகின்றோம். அவனுடைய பேரழகு நம்மைப் பிச்சேற வைத்துவிடுகின்றது. இப்பாசுரத்தைத் தொடர்ந்து இப்பதிகத்தின் ஏனைய பாசுரங்களையும் மிடற்றொலி கொண்டு ஓதி உளங் கரைகின்றோம். மலையை அநுபவித்த ஆழ்வார் அம்மலையின்மீது கப்பும் கிளையுமாகப் பணைத்துப் பூத்து நிற்கும் கற்ப கத்தருபோல் நிற்கும் அழகருடைய திருமேனியழகை அநுபவித்த ஆழ்வார் அநுபவத்தை நாமும் பெற முயல் கின்றோம்.

மூலவருக்கு முன்னால் எழுந்தருளியிருக்கும் உற்சவ மூர்த்தியே அழகர் என்னும் சுந்தரராசர். பெயருக்கேற்ற எழிலுடை வடிவம். அபரஞ்சித் தங்கத்தாலானவர் என்று சொல்லுகின்றனர். இவர் திருமுழுக்குப் பெறுவது நூபுரகங்கைத் தீர்த்தத்தால். மற்ற நீர் கொண்டு திருமுழுக்காற்றினால் அவரது திருமேனி கறுத்து விடுகின்றதாம். இவரே சோலை மலைக்கு அரசர். இந்த உற்சவரைத் தவிர ஸ்ரீ சுந்தரபாஹு, சீநிவாசர், நித்தியோற்சவர் என்று வேறு சில உற்சவ மூர்த்திகளும் இத்திருத்தலத்தில் உள்ளனர். இவர்கள் வெள்ளியாலான வர்கள். இந்தக் கருவறையை அடுத்தப் பிராகாரத்தில் விநாயகர், சேனை முதலியார் முதலியோர் உள்ளனர். இத்தலத்து பைரவரே க்ஷேத்திர பாலகராகத் திகழ்கின்றார். இவர் பெரிய வரப்பிரசாதி. திருக்கோயிலின் அர்த்த சாமப் பூசை முடிந்ததும் திருக்கோவிலின் கதவைத் திருக் காப்பிட்டுத் திறவு கோலை க்ஷேத்திர பாலகர் முன் வைப்பதும், மறுநாள் அதிகாலையில் அதனை எடுத்துத்

திருக்கடைக்காப்பு நீக்குவதுமான வழக்கம் இன்றும் இருந்து வருகின்றது.

இத்திருத்தலத்தின் தாயார் கல்யாண சுந்தரவல்லி நாச்சியார். இவருடைய சந்நிதி கோயிலின் தென்புறம் உள்ளது. அங்குச் சென்று அவருடைய திருவருளையும் பெறுகின்றோம் இவரைத் 'தனிக்கோயில் தாயார்' என்றும் வழங்குகின்றனர். சுந்தரவல்லி நாச்சியார் தம் திருப் பெயருக்கேற்ப மிகப் பேரழகுடன் திகழ்கின்றார். திருக் கோயிலின் வடக்குப் பிராகாரத்தில் ஆண்டாள் சந்நிதி உள்ளது. அங்கும் சென்று அவருடைய பேரருளைப் பெறுகின்றோம் அவர் சந்நிதியில் ''சிந்தூரப்பொடி''[46] என்ற நாச்சியார் திருமொழியை ஓதி உளங்கரை கின்றோம். அடியிற் காணும் பாசுரத்தை இருமுறை ஓதுகின்றோம்.

''நாறு நறும்பொழில் மாலிருஞ்
    சோலை நம்பிக்குநான்
நூறு தடாவில் வெண்ணெய்வாய்
    நேர்ந்து பராவிவைத்தேன்,
நூறு தடாநி றைந்த
    அக்கார வடிசில் சொன்னேன்
ஏறு திருவுடையான் இன்று
    வந்திவை கொள்ளுங்கொலோ.''[47]

[நாறும்—மணம்கமழும்; வாய்நேர்ந்து—வாயாலே சொல்லி; பராவி—சமர்ப்பித்து; சொன்னேன்—வாயால் சொன்னேன்.]

இதில் ஆண்டாள் ''எம்பிரானுக்கு அடியேன் நூறு தடாநிறைந்த வெண்ணெயும் நூறு தடாநிறைந்த அக்கார அடிசிலும் வாயால் சொல்லி சமர்ப்பிக்கின்றேன்.

46. நாச். திரு 9
47. ஷை 9.6

இவற்றை எம்பெருமான் திருவுள்ளம் பற்றுவானா?'' என்கின்றாள்.

இப்பாசுரத்தைபற்றி ஓர் இதிகாசம் உண்டு. எம்பெருமானார் நாச்சியார் திருமொழி காலட்சேபம் நடத்தும் பொழுது இப்பாசுரம் அளவில் வருங்கால் 'ஆண்டாளுடைய எண்ணம் வாய்ச் சொல்லளவில் சென்றதே யொழிய, செயற்படவில்லை. அதனை நாம் தலைக் கட்டவேண்டும்' என்று கருதி, அப்பொழுதே புறப்பட்டுத் திருமாலிருஞ்சோலை மலைக்கு எழுந்தருளி நூறு தடா நிறைந்த வெண்ணெயும் நூறு தடா நிறைந்த அக்கார அடிசிலும் அழகருக்கு அமுது செய்வித் தருளினார் என்றும், அதன்பின்னர் அப்படியே சீவில்லி புத்தூர் ஏற எழுந்தருளி ஆண்டாளை அடிவணங்கி நின்றார் என்றும், அப்பிராட்டியும் தன் நினைவறிந்து இவர் நிறைவேற்றிய செயலுக்கு மனமுவந்து 'நம் அண்ணரே!' என்று சொல்லி அர்ச்சாவதார சமாதி கடந்து தழுவிக் கொண்டாள் என்றும் பெரியோர் பணிக்கும் வரலாற்றையும் எண்ணி மகிழ்கின்றோம்.

இன்னொரு இதிகாசம்: நஞ்சீயர் சந்நிதியில் நம்பிள்ளை, 'ஒரு பூர்ண குடும்பத்துக்கும் அதிகப்படியானவற்றை விரும்பாத எம்பெருமான் விஷயத்தில் நூறு தடா நிறைந்த வெண்ணெயும் நூறு தடா நிறைந்த அக்கார அடிசிலும் சமர்பிக்கவேண்டுவேமோ?'' என்று வினவ, அதற்குச் சீயர் 'திருவாய்ப் பாடியின் செல்வத்திற்கு இஃதெல்லாம் கூடினாலும் ஒரு பூர்ண கும்பத்துக்குப் போராது காணும்' என்று அருளிச் செய்தாராம். இதனையும் எண்ணிப் பரவசப் படுகின்றோம்.

இத் தலத்து உற்சவ மூர்த்தியான ஆண்டாள் மற்றத் திருத்தலங்களிலிருப்பது போலல்லாது இருந்த திருக்கோலத்தில் காணப்பெறுகின்றார். அழகர் தமதுதிருமணத் திருநாளன்று பெரிய பிராட்டியார், பூமிப் பிராட்டியார், கல்யாண சுந்தரவல்லி நாச்சியார், ஆண்டாள் என்ற

நான்கு தேவிமார்களுடனும் எழுந்தருளுகின்றார் என்ற செய்தியையும் அறிகின்றோம். அடுத்து, சுதர்சன சக்கரர், யோக நரசிம்மர் ஆகியோரின் சந்நிதிகட்குச் சென்று அவர்களையும் சேவிக்கின்றோம்.

இறுதியாகக் கொடிமரத்தருகில் வந்து எம்பெருமானிடம் விடைபெறுகின்றோம். திவ்விய கவியின் திருப்பாசுரம் நினைவிற்கு வருகின்றது.

''பணிந்தேன் திருமாலைப்
பாமாலை தாளில்
அணிந்தேன் அருள்தஞ்ச
மாகத்—துணிந்தேன்
திருமா லிருஞ்சோலை
சேர்ந்தேன் எனக்கு
வருமால் இருஞ்சோதி
வான்''[48]

[தஞ்சம்-பற்றுக்கோடு, இருஞ்சோதிவான்-பரமபதம்] என்ற பாசுரத்தை மிடற்றொலியுடன் சேவித்து எம்பெருமானை விட்டுப் பிரிகின்றோம். வருங்கால் இப் பாசுரம் பூதத் தாழ்வாரின்,

''பணிந்தேன் திருமேனி
பைங்கமலம் கையால்
அணிந்தேன் உன் சேவடிமேல்
அன்பாய்—துணிந்தேன்
புரிந்தேத்தி உன்னை
புகடலிடம்பார்த் தாங்கே
இருந்தேத்தி வாழும்
இனிது.''[49]

[கமலம்-தாமரை; புரிந்து-விரும்பி; ஏத்தி-துதித்து; புகல் இடம்-புகவேண்டிய இடம், பரமபதம்.]

48. நூற். திருப். அந். - 41
49. இரண். திருவத். 65

என்ற பாசுரத்தை அடியொற்றி அமைந்திருப்பதை எண்ணிய வண்ணம் வெளிப் பிராகாரத்திலுள்ள மண்டபத்திற்கு வந்து அமர்கின்றோம். இத்திருத்தலப் பயணத்தின் பயனைச் சிந்திக்கின்றோம்; ஆழ்வார் பெரு மக்கள் தம் திருக்கடைக் காப்புப் பாசுரங்களில் குறிப் பிட்ட பலன்கள் எல்லாம் நம் சிந்தனையில் எழுகின்றன.

திருமாலிருஞ்சோலை மலை எம்பெருமான் பூதத் தாழ்வார், பேயாழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள், திருமங்கையாழ்வார், நம்மாழ்வார் என்ற ஆறு ஆழ்வார் களால் மங்களாசாசனம் செய்யப் பெற்றிருப்பதையும் எண்ணுகின்றோம். ஆசாரிய ஹிருதயம் என்னும் நூல் இத்தலத்தில் அர்ச்சாவதார குணங்களில் 'வியாமோகம்' என்ற திருக்குணம் தழைத்து நிற்கும் என்று குறிப்பிடு கின்றது.

> ''தியாஜ்ய தேஹ வியாமோஹம்,
> மருள் கள்கடியும் மயல்மிகுபொழிலே
> தழைக்கும்,''[50]

[தியாஜ்யம்-விடத்தக்கது; வியாமோஹம்-கழி பெருங் காதல்; மயல் மிகு பொழில்-திருமாலிருஞ்சோலைமலை.]

'செஞ்சொற் கவிகாள்' (10.7:1) 'திருமாலிருஞ் சோலை மலையே' (10.8:1)' 'மங்க ஒட்டு' (10.7:10) என்று தொடங்கும் திருவாய் மொழிப் பாசுரங்களைத் திருவுள்ளம் பற்றி இந்த ஆசிரியர் 'தியாஜ்ய தேஹவியாமோஹம்' என்கின்றார் என்பது ஈண்டு அறியத் தக்கது. 'பொழில்' என்ற சொல்லுக்கு ஏற்பத் 'தழைக்கும்' என்கின்றார்.

இந்த அழகர்மீது சில தமிழ் இலக்கியங்களும் தோன்றியுள்ளன. பிள்ளைப்பெருமாள் அய்யங்கார் அவர்கள் இயற்றிய அழகர் அந்தாதியும், வேம்பத்தூர்

50. ஆசா. ஹிரு. - சூத்திரம் 185 (புருடோத்தம நாயுடு பதிப்பு)

அன்பர் ஒருவர் இயற்றியுள்ள அழகர் கலம்பகமும் குறிப்பிடத்தக்கவை. இரண்டிலும் பக்திச் சுவை நனி சொட்டும் பல சுவையான பாடல்கள் உள்ளன. காளமேகப் புலவர் அழகர்மீது பாடியுள்ள ஒரு பாடல் நிந்தாஸ்துதிபோல் அமைந்துள்ளது.

''மீனமுகம் ஆமைமுகம் மேதினியெ லாம்இடந்த
ஏனமுகம் சிங்கமுகம் என்னாமல்—ஞானப்
பழகர் என்றும் சோலைமலைப் பண்பரென்றும் உம்மை
அழகர் என்றும் பேரிட்டார் யார்?''[51]

[மேதினி-நிலஉலகம்; இடந்த-தோண்டிய; ஏனம்-பன்றி.]

என்ற பாடல் படித்து சுவைக்கத் தக்கது.

அழகர்மலை எம்பெருமான் சுந்தரராசர் செல்வச் சிறப்புடைய சீமான். அரங்கத்து அரவணையானின் செல்வ நிலை எவ்வளவு என்பது நமக்கு ஓரளவு தெரியும். 'அரங்கன் சொத்து அழகன் அங்கவடிக்கும் காணாது' என்பது பழமொழி என்றால் அதிகம் சொல்வானேன்? சித்திரைத் திருநாளன்று அவர் அணிகள் எல்லாம் திகழ மதுரைக்கு எழுந்தருளியிருக்கும் கோலாகலத்தைக் கொண்டே இது தெளிவாகும். சித்திரைப் பௌர்ணமியன்று மீனாட்சி சுந்தரேசுவரருக்கு திருமணம் நடைப்பெறுகின்றது மதுரையில். அதில் கலந்து கொள்ள சீர்வரிசைகளுடன் கிளம்புகின்றார் சுந்தரராசர் என்ற அழகர். அவர் வைகைக்கரை வந்து சேரும் முன்பு அவரை மக்கள் எதிர்கொண்டு அழைக்கின்றனர். வழியிலுள்ள மண்டபங்களில் மக்கள் தரும் கட்டளைகளை ஏற்றுக் கொள்ளுகின்றார். சித்திரா பௌர்ணமியன்று வைகையாற்றில் இறங்கி வண்டியூர் வரைசென்று தேனூர் மண்டபத்தில் தங்கித் திரும்பு

51. தனிப்பாடல் திரட்டு (முதல்பகுதி)-500 (கழகம்)

கின்றார். திரும்பும்போது நடைபெறும் பூப்பல்லக்கு சேவை கண்கொள்ளாக் காட்சியாக இருக்கும்.

அழகரின் இந்த உலாவைப் பற்றி மக்களிடையே வழங்கும் கதை சுவாரஸ்யமானது. அழகர் தம் தங்கையின் திருமணத்திற்குச் சீர்வரிசைகளுடன் புறப்பட்டதாகவும், அப்படி வருவதில் தாமதம் ஏற்பட்டுக் குறித்த காலத்தில் வந்து சேர முடியவில்லை என்றும், ஆதலால் முகூர்த்தம் அவர் வரும் முன்பே நடந்து விட்டதாகவும் அதனால் சீற்றங் கொண்டு மதுரைநகர் வராமல் வைகை வழியாக வண்டியூர் செல்வதாகவும் சொல்வர். இக்கூற்றில் உண்மை இருப்பதாகத் தெரியவில்லை. அழகர் மீனாட்சி திருமணத்திற்கு வந்திருந்து தங்கையைத் தாரை வார்த்துக் கொடுத்த வரலாற்றுக்குச் சோமசுந்தரர் திருக்கோயிலுள்ள சிற்பம் சான்று பகன்று நிற்கின்றது. அப்படியிருக்க மக்கள் இப்படிக் கயிறு விடுவது என்ன காரணத்திற்கோ? இப்படியெல்லாம் கடவுளர் வாழ்விலும் பிணக்குகளை ஏற்படுத்தி அநுபவிப்பதில் பொதுமக்கள் உண்மையிலேயே ஒரு பேரின்பத்தைக் காண்கின்றனர். கடவுளர்தம் வாழ்க்கையையும் தம் வாழ்க்கையைப் போலவே அமைத்து மகிழ்கின்றனர்.

திருமாலிருஞ்சோலைமலை ஆழ்வார் காலத்திற்கு முந்திய பழம் பெருமை உடையது. சங்க இலக்கியங்களில் ஒன்றான பரிபாடலில், அரிதாகப் பெறற்குரிய துறக்கம் எளிதாகப் பெறத் துணைப்புரியவல்லது இம்மலை என்னும் கருத்து.

> 'அரிதிற்பெறு மிறக்க மாலிருங் குன்றம்
> எளிதில் பெறலுரிமை''[52]

என்ற அடிகளால் குறிப்பிடப் பெற்றுள்ளது. இந்தப் பாடலில் இளம்பெரு வழுதியார் என்ற நல்லிசைப்

52. பரிபாடல்-அடி 17, 18:

புலவர் இம்மலையில் கண்ணபிரானும் நம்பி மூத்த பிரானும் (பலராமன்) எழுந்தருளியிருப்பதைக் குறிப்பிடுகின்றார். இவர்கள் எழுந்தருளியிருக்கும் "சோலை மலையை நினைமின்மாந்திர்! தெய்வம் பேணித் திசை தொழுதுச் சென்மின்!" என்கின்றார் புலவர். இதனை நினைத்தே நம்மாழ்வார், "திருமாலிருஞ் சோலை மலை என்றேன்; என்னத் திருமால் வந்து என்நெஞ்சு நிறையப் புகுந்தான்"[53] என்றும் "தென்னன் திருமாலிருஞ் சோலைத்திசை கூப்பிச் சேர்ந்த யான் இன்னும் போவேனே கொலோ என்கொல் அம்மான் திருவருளே"[54] என்றும் கூறினார் போலும். மேலும், இளம் பெருவழுதியார் பலதேவன் மார்பில் திகழும் மாலையை இருங்குன்றத்தினின்று இழியும் சிலம்பாற்றுக்கு உவமை கூறி மகிழ்கின்றார். மணிவாசகப் பெருமான் 'அவனருளாலே அவன்தான் வணங்கவேண்டும்' என்று கூறிய கருத்தையே இக் கவிஞர்,

"நாறிணர்த் துழாயோன் நல்கின் அல்லதை
ஏறுதல் எளிதோ வீறுபெறு துறக்கம்"[55]

[வீறு-வேறொன்றிற்கில்லாத சிறப்பு; துறக்கம் மேல் நிலை உலகம்]

என்று வேறுவிதமாகக் கூறுவர்.

சங்கமருவிய நூலாகிய சிலப்பதிகாரத்திலும் இந் நெடுமால் குன்றத்தைப்பற்றிய குறிப்பு காணப் பெறுகின்றது. கோவலனுக்கு மதுரைசெல்லும் வழியைக் கூறும் மாங்காட்டுமறையோன் வாக்கில் இம்மலையின்மீது எழுந்தருளியுள்ள திருமால், அதன் மீதுள்ள புண்ணியச் சரவணம், பவகாரணி, இட்டசித்தி என்ற தீர்த்தங்கள் முதலியான விரிவாகக் கூறப்பெற்றுள்ளன.[56]

53. திருவாய் 10. 8 :1
54. ஷை 10.7:4 55. பரிபாடல்-15 அடி 15, 16.
56. சிலப் 11. காடுகாண் அடி 91-110.

அழகரின் திருக்கோயிலை மதுரையை ஆண்ட மலையத்துவச பாண்டியன் கட்டுவித்ததாக வரலாறு கூறும். பாண்டியமன்னர்கள் பலர் இத்திருக்கோயிலுக்குப் பலவித மான திருப்பணிகள் செய்துள்ளனர். இத்திருக்கோயிலின் விமானத்திற்குப் பொன்வேய்ந்தவன் சடாவர்மன் சுந்தர பாண்டியன். விசயநகர மன்னர்களின் பிரதிநிதிகளாக நாய்க்கர் மன்னர்கள் ஆண்டகாலத்தில் விசுவநாதநாயக்கர் என்பார் ஏராளமான திருப்பணிகளைச் செய்துள்ளார்.

இன்று அழகர் 'கள்ளழகர்' என்ற பெயருடன் திகழ்கின்றார். இந்த வட்டாரத்துக் கள்ளர் குலமக்களின் தலைவன் என்பதால் இப்பெயர் பெற்றார் போலும். திருக் கோயிலுக்கு வருவோர் உள்ளங்களைக் கவரும் 'உள்ளங் கவர் கள்வனாகத்' திகழும் இவர் பொதுமக்கள் கருத்தில் 'கள்ளழகர்' என்ற பெயருடன் வாழ்கின்றார் போலும். இங்ஙனம் பல்வேறு செய்திகளை அறிந்த நிலையில் மனநிறைவுடன் நம் இருப்பிடத்திற்குத் திரும்புகின்றோம்.

# 7. வில்லிபுத்தூர் வேயர் பயந்த விளக்கு*

இந்த உலகில் ஞான பக்தி வைராக்கியங்களுடன் திகழ்ந்து முக்தியடைந்த பெரியோர்கள் பலர். அவர்களுள் உயர்நிலையில் நின்று புகழ்பெற்றவர்கள் இருடிகளும் (ரிஷிகள்) ஆழ்வார்களும் என்று பெரியோர்கள் பணிப்பர். இவர்களுள்ளும் இறையன்பில் ஒருவரோடொருவரிடையே ஏற்றத்தாழ்வு உண்டு என்ற பெற்றியை உரைமன்னன் பெரியவாச்சான் பிள்ளை எடுத்துக்காட்டி மிகத் தெளிவாக விளக்குவர். இருடிகளையும் ஆழ்வார்களையும் ஒப்ப நோக்குங்கால் இருடிகளின் பக்தி அணுவளவாகவும் ஆழ்வார்களின் பக்தி மலையளவிலும் காணப்பெறும். அங்ஙனமே மற்றைய ஆழ்வார்களின் பக்தியையும் பெரியாழ்வாரின் பக்தியையும் ஒப்பிட்டு நோக்கினால் மற்றையோர் பக்தி அணுவளவாகவும் பெரியாழ்வாரின் பக்தி மலையளவாகவும் தோற்றம் அளிக்கும். பெரியாழ்வார் பக்தியையும் அவரது அருமை மகள் ஆண்டாள் பக்தியையும் சீர்தூக்கினால், பெரியாழ்வார் பக்தி அணுவளவிலும், ஆண்டாள் பக்தி மலையளவிலும் தோன்றா நிற்கும். பெரிய வாச்சான் பிள்ளையின் இந்த விளக்கத்

* வேயர்-பார்ப்பனர் குலத்தில் ஒரு பிரிவினர்; பெரியாழ்வார் இப்பிரிவினைச் சேர்ந்தவர்.

1. பெரி. திரு. 1.6:11;2.5:10 நாச்.திரு. 2:10;6:10

தைச் சிந்தித்த நிலையில் மதுரையிலிருந்து சீவில்லி புத்தூருக்குப் புறப்படச் சித்தமாகின்றோம்.

பெரியாழ்வாரும் ஆண்டாளும் பிறந்த ஊர் சீவில்லிபுத்தூர். இந்த ஊர் விருதுநகர்-தென்காசி இருப்பூர்தி வழியில் உள்ளது. இவ்வூருக்கு இருப்பூர்தி நிலையம் உள்ளது ஆகவே, இருப்பூர்தியில் செல்ல விரும்புவோர் எளிதாக அவ்வூரைச் சென்று அடையலாம் மதுரையிலிருந்து இந்த ஊருக்கு அடிக்கடிப் பேருந்து வசதியும் உண்டு பேருந்தில் செல்லுபவர்கள் சீவில்லிபுத்தூரை விரைவில் சென்று அடையலாம். இந்தத் திருத்தலத்திற்கு நான்கு பக்கங்களிலிருந்தும் நல்ல சாலை வசதிகளும் பேருந்து வசதிகளும் நன்முறையில் ஏற்படுத்தப் பெற்றுள்ளன. மதுரை மங்கம்மாள் சத்திரத்தில் தங்கியிருக்கும் நாம் அதிகாலையில் எழுந்து தீர்த்தமாடி நல்லாடை புனைந்து கொண்டு பேருந்து மூலம் சீவில்லி புத்தூருக்குப் புறப்படுகின்றோம்.

பேருந்தில் சென்று கொண்டிருக்கும் பொழுதே 'வில்லிபுத்தூர்' என்று இந்த ஊருக்குப் பெயர் வந்த காரணத்தைச் சிந்திக்கின்றோம். நம் சிந்தனை புராண நோக்கில் பாய்ந்து செல்லுகின்றது. இரணியாட்சன் என்ற அசுரன் பூமிக்குப் பெரும் பாரமாய் இருந்து கொண்டு சாதுசனங்களை நலியும் பான்மையனாய் அவர்கட்கு எத்தனையோ கொடுமைகளையும் தீச் செயல்களையும் இழைத்து வந்தான் என்பதை நாம் அறிவோம். அப்படிபட்ட அசுரனை எம்பெருமான் வராக வடிவங்கொண்டு வதைத்தான் என்று புராணம் கூறுகின்றது. அந்தத் தலந்தான் வராக க்ஷேத்திரம் என்று வடமொழிப்பெயரால் வழங்கப்பெறுவதாக வில்லிபுத்தூர்த் தலப்புராணம் கூறுகின்றது. வில்லி புத்தூர்ப் பகுதி ஒரு காலத்தில் செண்பகக் காடாக மண்டிக் கிடந்தது. இப்பகுதியை மல்லி என்ற வேடப் பெண்ணரசி ஒருத்தி ஆண்டு வந்தாள். எனவே,

வராக க்ஷேத்திரம் மல்லிநாடு என்ற மற்றொரு பெயராலும் வழங்கி வந்தது. இறைவனது சாபத்தால் இரண்டு முனிவர்கள் அவனுக்கு இரண்டு புதல்வர்களாகத் தோன்றினார்கள். இவர்களுள் மூத்தவன் பெயர் வில்லி; இளையவன் பெயர் கண்டன். ஒரு நாள் இளையவன் வேட்டைக்குச் சென்ற இடத்தில் ஒரு புலியால் கொல்லப் படுகின்றான். இதனால் மனம் உடைந்து வாழ்ந்த வில்லியின் கனவில் பாற்கடல் பரந்தாமன் தோன்றி 'அன்பனே, நீ இந்த காட்டை அழித்து இதனை ஒரு நகரமாகச் செய்வாயாக. பாண்டி, சோழ, நாடுகளிலுள்ள அந்தணர்களைக் குடியேற்றுக' என்று சொன்னதை நினைக்கின்றோம். அதன்படி, காடு கொன்று நாடாக்கிக் குளந்தொட்ட நகரமே வில்லிபுத்தூர். வில்லியால் நிறுவப் பெற்ற ஊராதலால் வில்லிபுத்தூர் என்ற பெயர் ஏற்பட்டது என்பது அறியத்தக்கது. மல்லி நாட்டிலுள்ள வடவேச்வரபுரம் என்ற பழைய நகரத்தை வில்லி புதுப்பித்தால் அந்நகரத்துக்கு ''வில்லிபுத்தூர்'' என்ற பெயர் வந்தது என்றும் சொல்லு கின்றனர். இந்த ஊர் இந்தப் பெயராலும், சுருக்கமாக 'புத்தூர்'[2] என்றும், புதுவை[3] என்றும் வேறு பெயர்களாலும் வழங்குவதைப் பெரியாழ்வார், ஆண்டாள் திருமொழிகளால் நன்கு அறியலாம்.

இங்ஙனம் வில்லியால் நிர்மாணிக்கப் பெற்ற வில்லி புத்தூர் அக்காலத்தில் செல்வத்திற்கு இருப்பிடமாகத் திகழ்ந்தது. மாடமாளிகை கூட கோபுரங்களால் பொலிவுற்று விளங்கியது.

> ''பொருப் பன்ன மாடம்பொ லிந்தோன்றும்
> புதுவை''[4]
>
> ''வேதவாய்த்தொழி லார்கள்வாழ் வில்லி
> புத்தூர்''[5]

---

2. பெரியாழ் திரு. 1.4:10; 3.5:11
3. ஷெ. 1.2:21, 1.5:11 நாச். திரு.1:10: 5:10
4. நாச். திரு. 1:10 5. ஷெ 2:10

"பொன்னியல் மாடங்கள் சூழ்ந்த
புதுவை"[6]
"போகத்தில் வழுவாத
புதுவை"[7]

என்ற ஆண்டாள் திருவாக்குகளால் இதனை நன்கு அறியலாம்.

'விஷ்ணுவே முழுமுதற் கடவுள்' என்ற உண்மையைப் பாண்டியன் அவையில் நிலைநாட்டிப் பொற்கிழியறுத்துப் 'பட்டர் பிரான்' என்ற பெயர் பெற்ற விஷ்ணுசித்தர் திருவவதரித்த ஊர் இந்த ஊர்தான். இவர் சேஷபூதராகிய தம் சொரூபத்தையும் (உண்மை நிலை) சேஷியாகிய ஈசவர சொரூபத்தையும் அறவே மறந்து 'திருப்பல்லாண்டு' என்ற திருமொழியால் எம்பெருமானுக்கு மங்களாசாசனம் செய்து தம் எல்லையற்ற அன்பைப் புலப்படுத்திய வரலாற்றை முன்னரே விளக்கியுள்ளோம்.[9] சர்வ இரட்சகனையும் இரட்சிக்க வழி தேடித் தடுமாறி மங்களாசாசனம் செய்த வரலாறு நம்மை மயிர் சிலிர்க்க வைக்கின்றது. எம்பெருமான் வாழ்வையே தமது வாழ்வாக நினைத்த செய்தி நம் உள்ளத்தை உருக்குகின்றது.

இளமையிலேயே இவர் எம்பெருமான் திருவுள்ளத்திற்கு எத்தகைய செயல் உகப்போ அதுவே தம்மால் செய்யத்தக்கது என்று உறுதி கொண்டிருந்தவர். வேதம் ஓதுவதுடன் நந்தவன கைங்கரியத்தையும் மேற்கொண்டிருந்தார். ஒரு நீர்ப்பாங்கான இடத்தில் வேலி வளைத்து அதனிடையே கிணறு குளம் உண்டாக்கி, வெண்தாமரை, செந்தாமரை, செங்கழுநீர், நீலோற்பலம், மல்லிகை, முல்லை மாதவி முதலான நீர்ப் பூ நிலப்பூ கோட்டுப் பூக்களும் திருத்துழாய் முதலியனவும் மலிந்து பொலியுமாறு மலர்

6. நாச். திரு. 3:10 7. ஷை 8:10
8. ஷை 12:10 9. 'மதுரைக் கூடலழகர்' என்ற கட்டுரையில் (கட்டுரை—3)

வனத்தை உண்டாக்கினார். இம் மலர்களைக் கொண்டு மாலைகள் கட்டி இந்த ஊர்த் திருமாலுக்குச் சாத்தி மகிழ்வார். பூ மாலை கட்டுவதுபோல் பாமாலை கட்டு வதிலும் இவரது அவா எல்லை கடந்து நின்றது. எம்பெருமானுக்குச் சொஞ்சும் தமிழால் பிள்ளைத் தமிழ்ப் பாடித் தந்த பெருமையை இவரிடம் காண்கின்றோம். கண்ணனைப் பச்சைப் பசுங்குழவிப் பருவத்திலிருந்து உருப்படுத்தி உலகிற்கு விட்ட பெருமை இப் பெரியாருக்கே உரியது என்று கூறின் அது மிகையன்று.

இவர் இயற்றிய சொல்மாலைகளைச் சிந்திக்கின்றோம். இவருடைய கற்பனையில் கண்ணன் திருக்கோட்டியூரில் திருவவதரிக்கின்றான்[10]. இவர் தூயநா கண்ணனுக்கு நீராட்டுகின்றது; மருந்தூட்டுகின்றது. அவன் வயிற்றில் அடங்கிக் கிடக்கும் ஈரேழு உலகங்களையும் அவர் கண்கள் கண்டு களிக்கின்றன. இவர் தத்துவப் பொருள் நிறைந்த கண்ணனின் இளமை விளையாட்டுகளைப் பலர் முன் நிறுத்தி அவர்களை ஆநந்த வாரிதியில் ஆழ்த்தும் வன்மை யைத் தமக்கே உரிமையாக்கிக் கொள்ளுவதை எண்ணி எண்ணி மகிழ்கின்றோம். கண்ணனின் திருமேனி அழ கினைப் பலருக்கும் காட்டித் தாய்நிலையிலிருந்து கொண்டு தாமும் அநுபவித்துக்களிப்பதையும் காண்கின்றோம்[11]. தம் கண்ணன் திருக்கோட்டியூரில் தோன்றிய காலத்தில் அவ்வூரின் ஆரவாரத்தையும் பெண்களின் குதுகலிப்பையும் தம் சொல்லோவியங்களில் காட்டி மகிழும் அருமைப் பாட்டினைச் சிந்திக்கின்றோம். இப் பெரியார், கண்ணன் திருவடி தொடங்கித் திருமுடிவரை அமைந்த உறுப்புகளின் அழகின் பிழம்பைத் தாம் மட்டிலும் துய்த்து உவப்ப தோடன்றி அவ்வூர்ப் பெண்டிர் அனைவரையும் விளித்து விளித்து அவர்களையும் மகிழ்விக்கின்ற பெருமை நம் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுகின்றது. இவர் கண்ணனை அம்புலிக்கு அறிமுகப்படுத்தி அதனை

10. பெரியாழ். திரு.1.1 11. ஷை. 1.2

விளிக்கும் அழகு சொல்லுந்தரமன்று[12]. கண்ணன் தளர் நடைப் பருவத்தில் காற் சிலம்பு, கிண்கிணி இவற்றின் தெய்வ ஓதை நம் செவியைத் துளைத்துச் செல்லவும்[13], செங்கீரைப் பருவத்தின் தலையசைப்பும் புன்சிரிப்பும்[14] தம் மனத்தை அள்ளிக் கொள்ளவும் அவற்றில் இவர் ஈடுபட்டு நிற்கும் அற்புதத்தைக் கண்டு களிக்கின்றோம். கண்ணன் குழலூதும் அழகை,

''இடவணரை இடத்தோளொடு சாய்ந்து
இருகைகூடப் புருவம்நெறித் தேறக்
குடவ யிறுபட வாய்கடை கூடக்
கோவிந்தன் குழல்கொ டூதின போது''[15]

[இடஅணர்-இடப்பக்கத்து மோவாய்க் கட்டை; கூட-குழலொடுகூட; வயிறு குடம்பட-வயிறு குடம் போல் குமிழ்த்துத் தோன்ற; வாய்க்கடைகூட-வாயின் இரண்டரு கும் குவிய.]

''சிறுவி ரல்கள் தடவிப் பரிமாறச்
செங்கண் கோடச் செய்யவாய் கொப்பளிக்க
குறுவெ யர்ப்புரு வம்கூட விப்பக்
கோவிந்தன் குழல்கொ டூதின போது''[16]

[தடவி-குழலின் துளைகளைத் தடவி; கோட - பின் னோக்கிச் செல்ல; கொப்பளிக்க-குமிழ்க்க.]

என்ற சொற் படங்களில் காட்டும் நேர்த்தியை அநுபவித்து மகிழ்கின்றோம்.

இன்னும், எம்பெருமான் வைகுந்தம் திருப்பாற்கடல், துவரை முதலான இடங்களைத் துறந்து தம் உள்ளத்தில் ஆர்வத்துடன் பள்ளிகொள்ளப் பெற்ற பேற்றினை,

12. பெரியாழ் திரு. 1.4 13. ஷை 1.7
14. ஷை 1.5
15. ஷை 3.6:2 16. ஷை 3.6 8

"அரவத் தமளியி னோடும்
அழகிய பாற்கட லோடும்
அரவிந்தப் பாவையும் தானும்
அகம்படி வந்து புகுந்து
பரவைத் திரைபல மோதப்
பள்ளிக்கொள்கின்ற பிரான்"[17]

[அமளி-படுக்கை; அரவிந்தப் பாவை-பெரிய பிராட்டியார்; அகம்படி-உள்ளமாகிய இடம்; பரவை-திருப்பாற் கடல்; திரை-அலை.]

"பனிக்கடலிற் பள்ளிகோளைப்
பழகவிட்டு ஓடிவந்தென்
மனக்கடலில் வாழவல்ல
மாயமணாள நம்பீ"[18]

[பனிக்கடல்-குளிர்ந்த திருப்பாற்கடல்; பள்ளிகோள்-பள்ளிகொள்ளுதலை; பழகவிட்டு-பழகியதாக விட்டு(மறந்து விட்டு)]

என்ற பாசுரங்களில் கூறி மகிழ்வதை எண்ணி நாமும் மகிழ்கின்றோம். இவர்கள் பெற்றோர் "விஷ்ணு சித்தன்" என்று திருநாமம் இட்ட பொருத்தத்தையும் கண்டு வியக்கின்றோம்.

இவ்வளவு தாயன்புடன் திகழும் விஷ்ணு சித்தருக்கு மக்கள் செல்வம் வாய்க்கவில்லை. அக்குறை எம்பெருமான் திருவருளால் நீங்குவதையும் நினைக்கின்றோம். ஒருநாள் ஆழ்வார் நந்தவனத்தில் உலவும் பொழுது திருத் துழாய்ச் செடியருகில் அழகெலாம் திரண்டு வந்தாற் போன்ற ஒரு பெண் குழவி கிடப்பதைக் காண்கின்றார்: பூமிப் பிராட்டியாரின் அம்சமான அதனை எடுத்து வந்து தன் துணைவியான விரஜையிடம் தருகின்றார். குழந்தைக்

17 பெரியாழ். திரு. 5.2:10
18. ஷை 5.4:16

குக் கோதை எனத் திருநாமம் சூட்டி அன்புடன் வளர்க்கின்றனர் தாய் தந்தையர். நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்த கோதையார் கல்வியும் பெறுகின்றார். சில ஆண்டுகளில் எல்லாக் கலைகளும் நிரம்பப் பெறுகின்றார். தம் தந்தையாரும் ஏனைய திருமாலடியார்களும் பாசுரங்களைப் பாடி இறைவனைத் துதித்தலையும் தம்மையே மறந்து இறையன்பில் மூழ்கித் திளைத்தலையும் இளமை தொட்டே கண்ணுற்றிருந்த கோதையாருக்கு அப்பழக்கமே பண்பாக அமைகின்றது. கோதையாரும் சொல் நயம் பொருள் நயம் நிறைந்த பாசுரங்களைப் பாடுவார். எம்பெருமான் லீலைகளைச் சொல்லிக் கொண்டே தம்மை அறியாமல் நடிப்பார்; கண் மூடி இருப்பார். இச் செயல்கள் யாவும் தாய்தந்தையருக்கு மகிழ்ச்சியை அளித்தன.

ஒரு நாள் விஷ்ணு சித்தர் எம்பெருமானுக்கு என்று தொடுத்து வைத்திருந்த பூமாலையைக் கோதையார் எடுத்துச் சூட்டிக்கொண்டு அழகு பார்க்கின்றார். பின்னர் அம்மாலையைப் பூக் குடலையிலேயே வைத்து விடுகின்றார். அவர் சூடிக் கொடுத்த மாலையே எம்பெருமானுக்கு அணியப்படுகின்றது. இப்படியே நாட்கள் பல செல்லுகின்றன. ஒரு நாள் கோதையாரின் செயலைத் தந்தையார் பார்த்து விடுகின்றார். தம் மகளைச் சிறிது சினந்துவிட்டு அன்று எம்பெருமானுக்குப் புதிய மாலையை தயாரித்துச் சாத்துகின்றார். அன்றிரவு எம்பெருமான் விஷ்ணு சித்தரின் கனவில் தோன்றி "ஆழ்வீர், நும் கோதை கொடுத்த மாலைகளே நாம் உகந்த மாலைகள்" என்று செப்பி மறைகின்றார். அன்று விஷ்ணு சித்தரும் மாலைகளைத் தொடுத்துத் தன் அருமை மகளுக்குச் சூட்டி கண் குளிரக் கண்டு மகிழ்கின்றார். பின்னர் அம்மாலைகளை எம்பெருமானுக்குச் சூட்டுகின்றார். வீடு திரும்பியதும் தம் மகளாரைத் தழுவி உச்சி மோந்து முத்தமிட்டு மகிழ்கின்றார். "என்னை ஆண்டாள், இவளே" என்று கூறிப்

போற்றுகின்றார். அன்று முதல் விஷ்ணு சித்தர் ஆண்டாள் சூடிக்கொடுத்த மாலைகளையே எம்பெருமானுக்குச் சாத்துவிக்கின்றார்.

கோதையார்—சூடிக் கொடுத்த சுடர்க் கொடியார் —வளர்ந்து மங்கைப் பருவம் எய்தியதும் எம்பெரு மானையே காதலனாக வரிக்கின்றார். 'மானிடவர்க்கு என்று பேச்சுப்படின் வழக்கில்லேன்' என்றும், 'மாலிருஞ்சோலை எம்மாயற்கல்லால் மற்றொருவர்க்கு என்னைப் பேச ஒட்டேன்' என்றும் பிடிவாதம் பிடிக்கின்றார்.

"மத்தளம் கொட்ட வரிசங்கம் நின்றூத
முத்துடைத் தாமம் நிரைதாழ்ந்த பந்தற்கீழ்
மைத்துனன் நம்பி மதுசூதன் வந்து, என்னைக்
கைத்தலம் பற்றக் கனாக்கண்டேன் தோழிநான்"[19]
[தாமம்-மலை; நிரை-திரள்; கைத்தலம்-கை]

என்று தன் கனவைத் தோழியிடம் கூறுகின்றார். எம்பெருமானைப் பற்றிய நினைவே ஒருநாள் திருச்சங்காழ்வானிடம் பேசத் தூண்டுகின்றது.

"கற்பூரம் நாறுமோ? கமலப்பூ நாறுமோ?
திருப்பவளச் செவ்வாய்த்தான் தித்தித் திருக்குமோ?
மருப்பொசித்த மாதவன்றன் வாய்ச்சுவையும் நாற்றமும்
விருப்புற்றுக் கேட்கின்றேன் சொல்லாழி வெண்சங்கே"[20]

என்று அவனிடம் பேசுகின்றார். இங்ஙனம் தன் மகள் வாய் வெருவுவதைக் கண்ட விஷ்ணு சித்தர் மிகவும் கவலை அடைகின்றார்.

ஆழ்வார் கனவில் திருவரங்கச் செல்வன் தோன்றித் தாமே கோதையாரைத் திருமணம் செய்து கொள்வதாகச் சொல்லுகின்றார். வில்லிபுத்தூரில்

19. நாச். திரு. 6:6 20. ஷை 7:1

திருமண ஏற்பாடுகள் நடைபெறுகின்றன. அழகிய மணவாளனும் பெரிய திருவடியின்மீது எழுந்தருளிக் கோதையைத் திருமணம் செய்து கொள்ளுகின்றான். இத்தெய்வத் திருமணம் பங்குனி உத்தரத்தன்று மிகச் சிறப்பாக நடைபெறுகின்றது. அன்று முதல் அரங்க மன்னார் கோதையுடனும் பெரிய திருவடியுடனும் சீவில்லிபுத்தூரிலேயே கோயில் கொண்டுவிடுகின்றார்.

இந்த வரலாற்று நிகழ்ச்சிகள் ஒன்றன்பின் ஒன்றாக நம் மனத்தில் தோன்றிய வண்ணம் திருக்கோயிலை வந்தடைகின்றோம். அமைப்பிலும் எடுப்பிலும் காம் பீரியத்திலும் முன் நிற்பது எம்பெருமான் திருக் கோயிலே. பெரிய கோபுரத்தைப் பெற்றிருப்பதும் அத்திருமாளிகையே என்ற போதிலும், இந்தத் திவ்விய தேசத்தில் முக்கியத்துவம் வாய்ந்திருப்பது ஆண்டாள் திருக்கோயிலுக்குத்தான். ஆதலால் முதலில் அப்பெருமாட்டியின் சந்நிதிக்கு விரைகின்றோம். இந்தச் சந்நிதி தெருவை விட்டுச் சற்று உள்ளடங்கியே உள்ளது. கோயிலின்முன்வாயிலில் முதன்முதலாக இருப்பது பந்தல் மண்டபம். இதனைக் கடந்து உள்ளே சென்றால் இடப்பக்கம் கல்யாண மண்டபம் இருப்பதைக் காணலாம். இதற்கு அடுத்தாற்போல் இடைநிலைக் கோபுரம் உள்ளது. இதனைக் கடந்து சென்றால் ஒரு வெளிப் பிராகாரம் இருப் பதைக் காண்கின்றோம். இவ்விடத்தில் இராம பிரானுக்கும் சீநிவாசப்பெருமாளுக்கும் சந்நிதிகள் இருக்கின்றன. இவர்களை வணங்குகின்றோம். இடை நிலைக் கோபுரத்தை அடுத்துள்ள கொடிமரத்தைத் தாண்டிக் கொண்டு உட்பிராகாரத்திற்குச் செல்லு கின்றோம். இங்கு முதலில் நாம் காண்பது மாதவிப் பந்தல். அந்தப் பிராகாரத்தைச் சுற்றினால் நூற்றெட் டுத் திருப்பதி எம்பெருமான்களும் நமக்குச் சேவை சாதிப்பார்கள். அழகிய பன்னிற வண்ணங்களில் அவர்கள் ஓவிய வடிவங்களில் நமக்குக் காட்சி

நல்குகின்றனர். இவற்றையெல்லாம் கண்டு களித்த வண்ணம் மாதவிப் பந்தல், மணிமண்டபம், ஆண்டாள் சுக்கிரவாரக் குறடு ஆகியவற்றைக் கடந்து அர்த்த மண்டபத்திற்கு வருகின்றோம்.

அர்த்த மண்டபத்திற்கு அடுத்து இருப்பதுதான் கருவறை. இங்குத்தான் ஆண்டாள், அரங்கமன்னார், பெரியதிருவடி ஆகிய மூவரும் சேவை சாதிக்கின்றனர். நடுவில் அரங்கமன்னாரும், அவருக்கு வலப்பக்கத்தில் ஆண்டாளும் இடப்பக்கத்தில் பெரிய திருவடியும் எழுந்தருளியுள்ளனர்; இங்கு நாம் வந்ததும்,

'கோலச் சுரிசங்கை மாயன்செவ்
வாயின் குணம்வினவும்
சீலத் தனள், தென் திருமல்லி
நாடி, செழுங்குழல்மேல்
மாலைத் தொடைத்தென் னரங்கருக்
கீயும் மதிப்புடைய
சோலைக் கிளி, அவள் தூய நற்
பாதம் துணைநமக்கே''[21]

என்ற பாசுரத்தை மிடற்றொலியில் சேவித்து அன்னையாரை வணங்குகின்றோம். அரங்கநாதர் திருமணக் கோலத்துடன் கூடிய அரச கோலத்தில் இராச கோபாலனாகக் கையில் செங்கோல் ஏந்திய வண்ணம் காட்சி நல்குகின்றார். ஆண்டாள், கோலங்கள் யாவும் புனைந்த கோமகளாக அவர் பக்கத்தில் நிற்கின்றார். ஏனைய திருக்கோயில்களில் எம்பெருமானுக்கு எதிரே நின்று சேவை சாதிக்கும் கருடாழ்வார் அரங்கநாதர் பக்கத்தில் ஏகாங்கியாய் எழுந்தருளியிருப்பதன் காரணத்தைச் சிந்திக்கின்றோம். ஆண்டாளை மணம் புரிவதற்கு அரங்கநகரிலிருந்து அரங்கநகர் அப்பனைக் காற்றினும் கடுகிய வேகத்துடன் வில்லிபுத்தூரில் கொண்டு வந்த

21. நாச். திரு தனியன்.

சேர்த்த பெருமகனல்லவா இவர்? அந்தக் கைங்கரியத்தின் நினைவாக அரங்க மன்னார் அவரைத் தன்னருகில் லேயே வைத்துக் கொண்டார் போலும் மூலவர்கட்கு முன்னால் தங்கத்தாலான கோபால மஞ்சத்தில் உற்சவர்களாகவும் இம் மூவரும் எழுந்தருளியிருப் பதையும் காண்கின்றோம். இவர்களைச் சேவித்த பிறகு வடபத்திரசாயியின் (ஆலிலைப் பள்ளியான்) திருக் கோயிலுக்குப் போகச் சித்தமாகின்றோம்.

ஆண்டாள் கோயிலைவிட்டு வெளிவந்து வடகிழக்கு நோக்கி நடந்து வருங்கால் வழியில் ஆண்டாள் அவ தரித்த நந்தவனத்தையும் அங்குள்ள கோயிலில் சிலை வடிவத்திலுள்ள ஆண்டாளின் தனி உருவத்தையும் காண்கின்றோம். அந்த அன்னையாரையும் சேவித்து வடக்கு நோக்கி நடந்து ஆலிலைப் பள்ளியானின் ஆலயத்தை அடைகின்றோம். கோயிலின் வாயிலைப் பெரியதொரு கோபுரம் அணி செய்கின்றது இவ்வளவு உயரமான கோபுரம் வேறு எங்கும் இல்லை என்று சொல்லப் பெறுகின்றது. இதனைக் கேட்குங்கால் திருவண்ணாமலையின் மிகப் பெரிய கோபுரம் நம் நினை வுக்கு வருகின்றது. இக் கோபுர வாயிலை அடுத்து வட புறம் தெற்கு நோக்கிய வண்ணம் இருக்கும் பெரியாழ் வார் சந்நிதியைக் காண்கின்றோம். பெரியாழ்வார் தோன்றிய இடமாதலின் அவருக்கு இங்குச் சாத்து முறை மிகச் சிறப்பாக நடைபெறுகின்றது.

பெரியாழ்வார் சந்நிதியை அடுத்து மேற்குப் புறமாக உள்ளது ஆலிலைப் பள்ளியானின் சந்நிதி யாகும். இத் திருக்கோயிலில் இரண்டு தளங்கள் உள்ளன. கீழ்த் தளத்தில் நரசிங்கப் பெருமான் சந்நிதி உள்ளது. இச் சந்நிதிக்குக் கிழக்கே வடபுறம் பன்னிரண்டு ஆழ்வார்களும் தசாவதார மூர்த்திகளும் எழுந்தருளி யுள்ளனர். தென்புறத்தில் மேல்தளத்திற்குப் போகப் படிகள் உள்ளன. அவற்றில் ஏறி மேல்தளத்திற்குச் சென்றதும்

முதலில் நாம் அடைவது 'கோபால விலாசம்'. அதனை அடுத்து விமல ஆகிருதி விமானத்தின் கீழே உள்ள கருவறையில் வட ஆலமரத்தின்கீழ் அனந்தாழ்வான்மீது பெரிய பிராட்டியாரும் பூமிப் பிராட்டியாரும் அடிவருட ஆலிலைப் பள்ளியான் கிடந்த கோலத்தில் சேவை சாதிக்கின்றார். அவரைச் சேவிக்கின்றோம். அருணன், பிருகு முனிவர், மார்க்கண்டேயர் ஆகியோர் அவர் அருகில் இருப்பதையும் காண்கின்றோம். இங்குள்ள அர்த்த மண்டபத்தில் திருவாழி ஆழ்வான், கண்ணன், வீதியாள வருவார், வில்லிப்புத்தூர் வருவார், அல்லல் தவிர்த்த பிரான் ஆகியோர் உற்சவர்களாக எழுந்தருளியுள்ளனர். வடபத்திர சாயியின் சந்நிதியே ஆதிக்கோயில் என்றும், ஆண்டாள் சந்நிதி பின்னர் எழுந்தது என்றும் அறிகின்றோம். இந்த எம்பெருமானிடம் விடைபெறுங்கால் திவ்வியகவியின் பாசுரம் நம் மனத்தில் குமிழியிடத் தொடங்குகின்றது.

"குறித்தொருவர் கொண்டாடும்
கொள்கைத்தோ கோதை
நிறத்தவூர் விண்டுசித்தர்
நீடூர்—பிறப்பிலியூர்
தாழ்வில்லி புத்தூரென்
றைவர்க்குத் தானிரந்தான்
வாழ்வில்லி புத்தூர்
வளம்.[22]

[குறித்து-நினைத்து; கொண்டாடும்-பாராட்டும்; கொள்கைத்தோ-தன்மையுடையதோ; நிறத்த-மேம்பாடு பெற்ற; பிறப்பிலி-கண்ணன்; ஐவர்-பாண்டவர்கள்]

என்ற பாசுரத்தை வாய்விட்டுப் பாடிக் கொண்டு விடை பெற்றுத் திரும்புகின்றோம்.

இந்த திவ்விய தேசத்தைப் பெரியாழ்வாரும் ஆண்டாளுமே மங்களா சாசனம் செய்துள்ளனர். இவர்கள்

22. நூற். திருப் அந்.48-48

பல திருமொழிகளை அருளிச் செய்திருந்தாலும் இந்த ஊரைப் பற்றிப் பாடிய பாசுரங்கள் இரண்டேதாம். கண்ணனாகிய குழந்தையைத் தாய்ப்பால் உண்ண தாய் நிலையிலிருந்து அழைக்கும் பெரியாழ்வார்,

"மின்அனைய நுண்இடையார்
விரிகுழல்மேல் நுழைந்தவண்டு
இன்னிசைக்கும் வில்லிபுத்தூர்
இனிதுஅமர்ந்தாய்! உன்னைக்கண்டார்
என்னநோன்பு நோற்றாள் கொலோ
இவனைப்பெற்ற வயிறுடையாள்
என்னும்வார்த்தை எய்துவித்த
இருடீகேசா! முலைஉணாயே."[23]

என்று பாடுகின்றார். அவருடைய அருமைத் திருமகள் ஆண்டாளோ காதலி நிலையிலிருந்து கொண்டு கண்ணனைத் தன்னிடம் வருமாறு குயிலைக் கூவும்படி வேண்டுகின்றாள்.

"மென்னடை அன்னம் பரந்து விளையாடும்
வில்லிபுத் தூருறை வான்றன்
பொன்னடி காண்பதோ ராசையி னாலென்
பொருகயற் கண்ணிணை துஞ்சா,
இன்னடி சிலொடு பாலமு தூட்டி
எடுத்த என்கோலக் கிளியை
உன்னொடு தோழமை கொள்ளுவன் குயிலே!
உலகளந் தான்வரக் கூவாய்."[24]

[பரந்து-எங்கும்பரவி; கண் இணை-இரண்டு கண்கள்; இன் அடிசில்-கன்னல் அமுது; கோலம்-அழகிய]

என்பது பாசுரம். இந்த இரண்டு பாசுரங்களிலும் வில்லிபுத்தூரின் இயற்கைச் சூழ்நிலை காட்டப் பெற்றுள்ளது. இந்த இருவரைத் தவிர ஏனைய ஆழ்வார்கள் வில்லிபுத்தூர்

23. பெரியாழ். திரு. 2.2:6
24. நாச். திரு. 5.5

எம்பெருமானைப்பற்றி மங்களாசாசனம் செய்ததாக அறியக் கூடவில்லை.

ஆலிலைப் பள்ளியானைச் சேவித்த பிறகு கோபால விலாசத்தில் ஓரிடத்தில் அமர்ந்து இத் திவ்விய தேசத்தைப் பற்றிய சில செய்திகளைக் கோயில் அலுவலர் ஒருவர் மூலம் அறிந்து கொள்ளுகின்றோம். ஆண்டாள் திருக்கோயிலில் ஆடிப்பூர உற்சவம் பெரிய திருவிழாவாக ஆண்டுதோறும் நடைபெற்று வருகின்றது. அந்த விழா நடைபெறும் பொழுது பெரிய தேரோட்டமும் நடைபெறுகின்றது. பங்குனி மாதம் நடைபெறும் திருக்கல்யாண உற்சவமும் மிகவும் சிறப்புடையதே.

பெரியாழ்வாரும் அவர் அருமைத் திருமகளாரும் கி. பி. எட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர்களாக ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர். ஆண்டாள் கோயிலின் கருவறை, அர்த்த மண்டபம், மகா மண்டபம் முதலியவற்றைச் சுந்தரத் தோளுடைய மாவலி வாணாதி ராயர் கட்டியதாகத் திருக்கோயிலின் தெற்குச் சுவரிலுள்ள கல்வெட்டொன்றால் அறிகின்றோம். சுந்தரத்தோள நல்லூர் என்ற சொக்கனேந்தல் கிராமத்தை இந்த இராயரே ஆண்டாள் நாச்சியாருக்கு மானியமாக விட்டிருக்கின்றார். வடபத்திரசாயியின் கோயில் ஜடாவர்மன் என்ற திரிபுவன சக்கரவர்த்தி கோனேரின்மை கொண்டான் குலசேகர தேவர் என்பவரால் கட்டப்பட்டதாகும். பாண்டிய மன்னர்கள் இரண்டு கோயில்களையும் கண்காணித்து வந்தனர் என்ற செய்தியையும் அறிகின்றோம்.

இராமாநுசருக்கும் இந்தக் கோயிலுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. இராமாநுசர் இத்தலத்திற்கு எழுந்தருளிய போது நூறு தடா அக்கார அடிசிலை மாலிருஞ்சோலை மணாளருக்குப் படைத்த தன் அண்ணா வருகின்றார் என்று ஆண்டாள் தன் அர்ச்சாவதார சமாதி கடந்து ஏழடி முன் நடந்து எதிர்கொண்டு அழைத்த செய்தியையும் அறிகின்றோம். அதுமுதல் இராமாநுசருக்குக் 'கோயில்

அண்ணன்' என்ற பெயரும் நிலைத்து விடுகின்றது. 'கம்பர் பெருமான் இத்தலத்திற்கு வந்ததாகவும் அவர் ஆண்டாளுக்குச் 'சூடகம்' என்ற தலையணியை வழங்கியதாகவும் செவி வழிச் செய்தியால் அறிகின்றோம். திருமலை நாயக்கரும் இத்திருக் கோயிலின் திருப்பணியில் பங்கு பெற்றிருப்பதையும் தெரிகின்றோம். ஆண்டாள் கோயிலில் சுக்கிரவாரக் குறட்டில் ஒரு கம்பத்தில் இருக்கும் நாயக்கரின் சிலை இதனை அரண்செய்கின்றது.

சூடிக் கொடுத்த சுடர்க்கொடியையும் பெரியாழ்வாரையும் பற்றிப் பின் வந்தோர் பன்னூறு பாடல்களைப் பாடியுள்ளனர். திருமாலையாண்டான் ஆண்டாள் பற்றி அருளிய தனியனை மேலே கண்டோம். மணவாள மாமுனிகள் இப்பிராட்டியைப் பற்றி அருளிய பாடல் புகழ் பெற்றது.

"அஞ்சு குடிக்கொரு சந்ததியாய் ஆழ்வார்கள்
தஞ்செயலை விஞ்சிநிற்கும் தன்மையளாய்-பிஞ்சாய்ப்
பழுத்தாளை ஆண்டாளைப் பத்தியுடன் நாளும்
வழுத்தாய் மனமே மகிழ்ந்து."[25]

என்ற பாசுரத்தை அறியாத வைணவர்களே இரார். அஞ்சு குடிக்கொரு சந்ததியாய் வந்த வேயர் பயந்த விளக்கினைப் பக்தியுடன் பரவிய நாம் பெரியாழ்வாரின் பெருமையைப் பேசும் பாசுரத்தையும் நினைவுகூர்கின்றோம்.

"மின்னார் தடமதில்சூழ் வில்லிபுத்தூர் என்றொருகால்
சொன்னார் கழற்கமலம் சூடினோம்-முன்னாள்
கிழியறுத்தா னென்றுரைத்தோம் கீழ்மையினிற் சேரும்
வழியறுத்தோம் நெஞ்சமே வந்து.[26]

[மின்ஆர்- ஒளி நிறைந்த; கமலம்-தாமரை; கிழி-பொற்கிழி; கீழ்மையினில் சேரும் வழி-நரகம்]

25. உப. ரத். மாலை-24

26. பாண்டிபட்டர் அருளிய தனியன்.

என்பது அப்பாடல். இங்ஙனம் இப்பாடல்களைச் சிந்தித்த வண்ணம் திருக்கோயிலை விட்டு வெளி வருகின்றோம். பேருந்து நிலையத்திற்கு வந்து திருத்தண்கால் செல்லும் பேருந்தில் ஏறுகின்றோம். பேருந்து கிளம்பிச் செல்லுங் கால் வில்லிபுத்தூரின் பெருமையைக் கூறும்.

"கோதை பிறந்தஊர்; கோவிந்தன் வாழும்ஊர்;
சோதி மணிமாடம் தோன்றும்ஊர்;-நீதியால்
நல்லபத்தர் வாழும் ஊர்; நான்மறைகள் ஓதும்ஊர்;-
வில்லிபுத்தூர் வேதக்கோன் ஊர்."[27]

என்ற பாடல் நம் மிடற்றொலியாக வெளிவருகின்றது. இத்துணைச் சிறப்புடைய ஊரைத்தான் மகாபாரத ஆசிரியர் தம் பெயராக வைத்துக் கொண்டாரோ என நினைக்கவும் தோன்றுகின்றது. இல்லையா?

27. தனிப்பாடல்.

# 8. திருத்தண்காலூர் அப்பன்

திருமந்திரத்திலுள்ள 'ஓம்' எனப்படும் முதற் பதமாகிய பிரணவம் சகல வேதசாரம் என்று சொல்லப் பெறுகின்றது. 'ஓம்' என்பதில் அ, உ, ம் என்னும் மூன்று எழுத்துகள் அடங்கியுள்ளன. இம்மூன்று எழுத்து களும் மூன்று பதங்களாய், மூன்று பொருள்களைத் தெரிவிக்கும். இவை ஒன்றாகச் சேர்ந்து இருக்கும் நிலையில் ஒரே எழுத்தாய், ஒரே பதமாய், ஒரே பொருளைத் தெரிவிக்கும். இருக்கு, யஜுர், சாமம் ஆகிய மூன்று வேதங்களையும் துருவிப் பார்த்ததில் இருக்கு வேதத்தின் சாரமாக பூ: என்பது தோன்றியது; யஜுர் வேதத்தின் சாரமாக பு: தெரிந்தது; சாம வேதத்தின் சாரமாக ஸுவ: அறியப் பெற்றது. இம் மூன்மையும் பொற்கட்டிகளாகக் கொள்ள வேண்டும். ஈசுவரன் இம் மூன்றையும் தனது சங்கற்பத்தினால் ஒன்றாகச் சேர்த்து உருக்கி ஓடவிட்டுத் தூய்மையாக்கி அதில்ருந்து முதலில் அகாரத்தையும், இரண்டாவதாக உகாரத்தையும், மூன்றாவதாக மகாரத்தையும் தோன்றுமாறு செய்தான். பகவான் இங்ஙனம் அடைவே வெளியிட்டதை மனத்திற் கொண்டே பிள்ளை உலகாசிரியர்,

> "மூன்று தாழியிலேதயிரை நிறைத்துக்
> கடைந்து வெண்ணெய் திரட்டுமாப்
> போலே, மூன்று வேதத்திலும் மூன்று
> அட்சரத்தையும் எடுத்தது."[2]

---

1. முமுட்சுபடி-34 2. முமுட்சுபடி-33

என்று மிக அழகாகக் கூறியுள்ளார். இதில் 'தாழிக்கு வேதமும், அத்தாழியில் உள்ள 'தயிருக்கு' அவ்வேதத்தில் சொல்லப்படும் அறம் பொருள் இன்பம் வீடுகளாகின்ற பலன்களும், அவற்றின் சாதனங்களும், 'நிறைத்து' என்பதற்கு மேலெழுந்த வாரியாய்த் தோன்றும் தோற்றமும், 'கடைந்து' என்பதற்கு உள் நுழைந்து காணும் ஆராய்ச்சியும், 'வெண்ணெய்க்கு' அட்சரம் மூன்றும். 'திரட்டுதலுக்கு' எடுத்தலும் உவமேயங்களாக அமைந்து விளக்குதலைக் கண்டு மகிழலாம். இதனால்தான் பிரணவம் சகல வேதசாரமாகின்றது என்பதையும் அறிகின்றோம்.

இதனைச் சிந்தித்த வண்ணம் சீவில்லிபுத்தூரிலிருந்து பேருந்தில் திருத்தண்காலூரை நோக்கி வந்து கொண்டிருக்கின்றோம். திருத்தண்காலூர்[3] சீவில்லிபுத்தூர்-விருதுநகர் நெடுஞ்சாலையில் உள்ள ஒரு சிற்றூர். விருதுநகர் — தென்காசி இருப்பூர்தி வழியிலுள்ள சிவகாசி என்ற இருப்பூர்தி நிலையத்தில் இறங்கியும் இவ்வூருக்கு வரலாம், இரண்டு கல் தொலைவு பேருந்திலோ குதிரை வண்டியிலோ வரவேண்டும். நாம் வரும் பேருந்து திருக்கோயிலுக்கு நூறு கெஜ தூரத்தில் நிற்கின்றது. வண்டியிலிருந்து இறங்கித் திருக்கோயிலை நோக்கி நடக்கின்றோம். இஃது அண்மையில் திருப்பணி செய்யப்பெற்றுப் புதுப்பிக்கப் பெற்றுள்ளது.

இத்திவ்விய தேசம் பூதத்தாழ்வாராலும் திருமங்கையாழ்வாராலும் மங்களா சாசனம் செய்யப் பெற்றுள்ளது.

''தமருள்ளம் தஞ்சை தலையரங்கம் தண்கால்
தமருள்ளும் தண்பொருப்பு வேலை — தமருள்ளும்
மாமல்லை கோவல் மதிள்குடந்தை என்பரே
ஏவல்ல எந்தைக் கிடம்.''[4]

3. காஞ்சியில் இருக்கும் திருப்பதி தண்கா என்று வழங்கப்பெறும். இங்கு எழுந்தருளியிருப்பவர் விளக்கொளிப் பெருமாள் (தீபப் பிரகாசர்). வேதாந்த தேசிகர் திருவதரித்த தலம் இது.

4. இரண் திருவந் 70

[தலை - திருப்பதிகளில் தலைமையான; தமர்—பக்தர்கள்; உள்ளும்-தியானிக்கும்; தண்பொருப்பு-அழகிய திருமலை; வேலை-திருப்பாற்கடல்; மாமல்லை- மாமல்லபுரம்; ஏவல்ல- எதிரிகளை முறியடிக்கவல்ல.]

என்பது பூதத்தாழ்வார் பாசுரம். இதில் அன்பருடைய நெஞ்சகம், தஞ்சைமாமணிக் கோயில், திருவரங்கம், திருத்தண்கால், திருமலை, திருப்பாற்கடல், மாமல்லபுரம், திருக்கோவலூர், திருக்குடந்தை என்னுமிடங்கள் எம்பெருமான் எழுந்தருளியிருக்குமிடங்களாகக் குறிப்பிடுகின்றார் ஆழ்வார். இவை 108 திருப்பதிகளில் மற்று முள்ளவற்றிற்கும் உபலட்சணம். இவற்றைவிட அன்பருடைய நெஞ்சகமே மிகவும் உவப்பாக இருக்கும் என்பதை குறிப்பிடவே 'தமருள்ளம்' என முற்படக் கூறப்பெற்றது என்பதனையும் அறிகின்றோம்.

திருமங்கையாழ்வார் திருவரங்கம் மீதுள்ள திருமொழியில்,

"பேரானைகுறுங்குடிஎம்
பெருமானை திருத்தண்கால்
ஊரானை, கரம்பனூர்
உத்தமனை."[5]

[பேர்—திருப்பேர் நகர்;கரம்பனூர்—உத்தமர் கோயில்]

என்று குறிப்பிடுவர். திருப்பேர்நகர் முதலான இடங்களில் சேவை சாதிப்பவனும் பிரளய காலத்தில் கடலேழும் மலையேழும் உலகேழும் அமுது செய்தவனுமாகிய எம்பெருமானைத் திருவரங்கத்தில் கண்டதாகக் கூறுகின்றார். திருநெடுந்தாண்டகத்தில் இவ்வாழ்வார் பாசுரம் தாய்ப் பாசுரமாகச் செல்லுகின்றது.

---

5. பெரி. திரு 5.6:2

''பொங்கார்மெல் இளங்கொங்கை பொன்னே பூப்பப்
பொருகயல்கண் நீர்அரும்பப் போந்து நின்று
செங்கால மடப்புறவம் பெடைக்குப் பேசும்
சிறுகுரலுக் குடலுருகிச் சிந்தித்து, ஆங்கே
தண்காலும் தண்குடந்தை நகரும்பாடித்
தண்கோவ லூர்பாடி ஆடக் கேட்டு,
'நங்காய்!நங் குடிக்கிதுவோ நன்மை?' என்ன,
நறையூரும் பாடுவாள் நவில்கின் றாளே.''[6]

[பொங்குஆர் - வளர்ச்சிமிக்க; பொன்-தேமல்; பொரு-போரிடும்; செங்கால-சிவந்த கால்களையுடைய; புறவம்-புறாக்கள்.]

என்பது பாசுரம். இதில் ஆழ்வாருக்கு நாயகி நிலை ஒரு புறமும், தாயின் நிலை மற்றொரு புறமும் நடக்கின்ற படியால் எம்பெருமானை அநுபவிப்பதில் விரைவு உண்டானமையும், 'நாம் பதறக்கூடாது' என்ற தீர்மானமும் உண்டாவதையும் காண்கின்றோம். அவனுடைய தனிச்சிறப்பை நோக்குமிடத்தில் பதற்றம் உண்டாதலையும் பார்க்கின்றோம்.

தெய்வக் காதலால் எம்பெருமானுடன் கலவி ஏற்பட்ட பிறகு கொங்கைகளில் பசுமை பூக்கின்றது. கண்களில் சோகக் கண்ணீர் அரும்புகின்றது. விரகத் தீயால் உள்ளுலர்ந்து நீர்ப்பசையற்றுக் கிடக்கையாலே 'அரும்ப' எனறு கூறும் நுட்பத்தையும் உணர்கின்றோம். 'நாயகனே வந்து மேல் விழவேண்டும்படியான முலையழகையும் கண்ணழகையும் உடைய நீ அவன் மீது விழுதல் தகாது' என்று தாய் சொன்ன அறவுரை அவள் செவியில் நாராசம்போல் புகுகின்றது. தீப்பற்றின வீட்டினின்றும் பதறிப் புறப்பட்டது போல் அத்தாய் இருந்த வீட்டினின்றும் சடக்கென வெளிவருகின்றாள் ஆழ்வார் நாயகி. பாம்புக்கு அஞ்சியோடியவன் புலியின் வாயில் விழுந்தாற் போலா

6. திரு. நெடுந். 17

யிற்று அவள் நிலை. வெளியிலே வந்தவள் காதில் தாயின் சொல்லைவிடக் கொடிய சொல் விழுகின்றது. ஆண் புறாவும் பெண் புறாவும் கொஞ்சும் பேச்சுகள் அவள் செவியில் விழுகின்றன. இந்நிலையில் தன்னிலை கண்டு உடலுருகுகிறாள். பண்டு அவனும் தானும் கலந்து பரிமாறின படிகளை நினைக்கின்றாள் இதனால் மேலும் உடலுருகுகின்றாள். ஆண் புறாவின் செங்கால்கள் நாயகனுடைய செந்தாமரை அடிகளை நினைப்பூட்டுகின்றன. புறாவின் சிறுகுரல் அவன் இரகசியமாகப் பேசும் பேச்சு கேட்கப் பெறுவது என்றோ எனக் கவன்று உடலுருகுகின்றாள்.

இதனால் ஆற்றாமை மீதூர்ந்த பரகால நாயகி எம்பெருமானோடு கலந்து பரிமாறுவதற்கான சில திருத்தலங்களின் திருநாமங்களை வாய்விட்டுப் பேசுகின்றாள். தண்கால், தண்குடந்தை, தண்கோவலூர் முதலான திருப்பதிகளைப் பாடத் தொடங்குகின்றாள். அங்குள்ள எம்பெருமான் குளிர்ந்த தென்றல் போலவே சிரமம் போக்குகின்ற வடிவையுடையவனாக இருக்கையினாலே அத்திருத்தலம் தண்கால் என்று திருநாமம் பெற்றது என்ற செவிவழி மரபினையும் சிந்திக்கின்றோம். பண்டு அப்பெருமான் தன்னைத் தழுவினபோது சிரமம் எல்லாம் தீர்ந்து மிக இனிமையாக இருந்ததுபோல் மீண்டும் அங்ஙனமே ஆகவேண்டும் என்று தன் காலைப் பாடுகின்றாள். திருமழிசையாழ்வாரின் வாழ்க்கை வரலாற்று நிகழ்ச்சியொன்று திருக்குடந்தையை நினைக்கச் செய்கின்றது. எம்பெருமான் அமுது செய்த போனகம் சேஷபூதம் உண்ண உரியது என்ற முறையிருக்க, திருக்குடந்தை ஆராவமுதப் பெருமான் தமக்கு ஆக்கின திருப்போனகத்தை முற்படத் திருமழிசைப் பிரானை அமுது செய்யப் பண்ணுவித்துப் பின்னைத் தான் அமுது செய்ததாக நிகழ்ச்சி ஒன்றுண்டு. இப்படியாக அன்பரோடு புரையறக் கலந்து பரிமாறுகின்றவன் எம்பெருமான் என்ற உட்கருத்தினைக் குறிப்பிடுவாள்போலத் திருக்குடந்தையைப் பாடுகின்றாள். முதலாழ்வார்கள் மூவரும் மொழி

விளக்கேற்றி முகுந்தனைத் தொழுது ஆநந்தப் பெரு வெள்ளம் எய்தின வரலாற்றை நெஞ்சில் கொண்டு திருக்கோவலூரைப் பாடுகின்றாள்.

இங்ஙனம் மூன்று திருத்தலங்களையும் பாடிய பிறகும் மனநிறைவு பெறாத ஆழ்வார்நாயகி ஆடவும் தொடங்குகின்றாள். இங்ஙனம் இவள் பாடுகின்ற படியைக் கேட்டும் ஆடுகின்ற படியைக் கண்டும் திருத்தாயார் 'நங்காய்! நம் குடிக்கு இதுவோ நன்மை?' என்கின்றாள். "சேதநலாபம் ஈசுவரனுக்குப் புருஷார்த்தமேயன்றி ஈசுவரலாபம் சேதநனுக்குப் புருஷார்த்தமன்றே; அவனுடைய பேற்றிக்கு அவன் அன்றோ பதற வேண்டும்? நீ பதறுவது தகாது," என்று குறிப்பிடுகின்றாள். இதனைச் செவிமடுக்கும் ஆழ்வார் நாயகி நறையூரையும் பாடத் தொடங்குகிறாள்.

"பெடையடர்ந்த மட அன்னம்
பிரியாது மலர்கமல
மடல் எடுத்து மதுநுகரும்
வயல்உடுத்த திருநறையூர்"[7]

என்பது பாசுரம். அந்த நறையூரை அடைவது எந்நாளோ? என்கின்றாள்

இங்ஙனம் ஆழ்வார் பாசுரங்களில் ஆழங்கால் பட்ட வண்ணம் திருக்கோயிலின் கருவறையில் நின்ற திருக்கோலத்தில் கிழக்கே திருமுக மண்டலம் கொண்டு சேவை சாதிக்கும் திருத்தண்காலூர் அப்பனை வணங்குகின்றோம். இந்த எம்பெருமானுக்கு அன்னநாயகி, அநந்தநாயகி, அமுதநாயகி, ஜரம்பவதி என்ற நான்கு நாச்சிமார்கள் உள்ளனர் இவர்களையும் சேவிக்கின்றோம். தீர்த்தம் திருத்துழாய் பெற்று, சடகோபம் சாதிக்கப்பெற்ற நிலையில் திவ்விய கவியின் திருப்பாசுரம் நெஞ்சில் குமிழியிடத் தொடங்குகின்றது.

---

7. பெரி திரு. 6.9:1

“மாறுபட வாடைஎனும்
வன்கால்வந் தெனமுலைமேல்
ஊறுபட ஊர்ந்த
உளைவெல்லாம் —மாறத்
திருத்தண்கால் ஊரான்
திருத்தண் துழாயின்
மருத்தண்கால் ஊராதோ
வாய்ந்து.”[8]

[மாறுபட-விரோதமாக; வன்கால்-வலியகாற்று; ஊர்ந்த தவழ்ந்ததனால் உண்டாக்கிய; உளைவு-வருத்தம்; மாற-நீங்கும்படி; மரு-மணம் பொருந்திய; தண்கால்-குளிர்ந்த காற்று; வாய்ந்து-இனிதாகப் பொருந்தி.]
என்பது பாசுரம். இதனையும் ஓதி உளங்கரைகின்றோம்.

இது தலைவனைப் பிரிந்த தலைவி வாடைகை இரங்கிக் வருந்திக் கூறுவதாக அமைந்துள்ளது. தலைவனுடன் கூடிப் பிரிந்த தலைமகளின்மீது காமத்தை மிகுதிப் படுத்துவதான வாடைக் காற்று வீசி அவளை வருத்து கின்றது. அதனை ஆற்றமுடியாத தலைவி தலைவனு டைய சம்பந்தம் பெற்ற பொருளின் தொடர்பினாலாவது ஒருவாறு இந்நோய் தணியப் பெறலாம் என்று கருது கின்றாள். தலைவன் அணிந்த திருத்துழாயின்மீது பட்டு அந் நறுமணத்துடன் வருகின்ற காற்றாவது தன் மீது வீசப்பெறுமோ என்று ஏங்கிக் கூறிச் செல் வதாக அமைந்துள்ளது இப்பாசுரம். நாமும் தலைவி நிலையை எய்தியதாகப் பாவனை செய்து கொண்டு இதனை ஓதுகின்றோம். அந்நிலை ஏற்படப் பரம பக்தி நிலை வரவேண்டும்.

திருக்கோயிலை விட்டு வெளிவந்து முன் மண்டபத் தில் ஓரிடத்தில் அமர்கின்றோம். நம் சிந்தனை சிலப்பதி

8. நூற். திருப். அந். 45

காரக் காலத்திற்குச் செல்லுகின்றது. கட்டுரைக் காதையில் மதுராபுரித் தெய்வம் கணவனை இழந்த கண்ணகிக்கு ஆறுதல் கூறும் போக்கில் அவளது பழம் பிறப்பை எடுத்துக் கூறுகின்றாள். அப்பொழுது அவள் 'தென்னவன் தீதுஇலன்' என்பதை விளக்கும் முறையில் சில நிகழ்ச்சிகளை எடுத்துக்காட்டுகின்றாள். அவற்றுள் ஒன்று பராசரன் என்ற அந்தணன் வரலாறு. இவன் சோழ நாட்டைச் சேர்ந்தவன். சேரவேந்தனின் கொடைத்திறம் கேட்டு காடும் நாடும் ஊரும் கடந்து சேரநாட்டை அடைகின்றான். சேரன் அவையில் உள்ள பல சாத்திர வல்லுநர்களுடன் சொற் போர் புரிந்து 'பார்ப்பன வாகை' சூடித் தன் வெற்றிக்குப் பொருத்தமாகச் சேரமன்னன்பால் நல்ல அணிகலன்களையும் பரிசிலாகப் பெற்றுக் கொண்டு தன் ஊர் நோக்கி மீண்டும் வருபவன் இத் 'திருத்தங்கால்' (தண்கால்) என்ற ஊரில் அரசமரத்தையுடைய ஒரு மன்றத்தின்கண் தங்கி இளைப்பாறுகின்றான். தன ஊன்றுகோல், குண்டிகை, வெள்ளைக்குடை, சமித்துகள் இவற்றையும், பரிசிலாகப் பெற்றப் பண்டங்களையு முடைய ஒரு சிறிய மூட்டையையும் மிதி அடியையும் தன் அருகில் நிலத்தின்கண் வைத்து இளைப்பாறு கின்றான்.

இளைப்பாறுகின்றவன் சும்மா இருக்கவில்லை. தனக்குப் பரிசில் நல்கிய சேரனைப் பலவாறு வாழ்த்து கின்றான். அந்த வாழ்த்தொலியைக் கேட்ட அம்மன் றத்தின்கண் விளையாடிக் கொண்டிருந்த அந்தணச் சிறுவர்கள் அப்பராசரனைச் சூழ்ந்து கொள்ளுகின்றனர். அந்தணன் அச்சிறுவர்களை நோக்கி 'பிள்ளைகாள், நும்மில் எவரேனும் என்னோடு சேர்ந்து மறையினை ஓதவல்லீராயின் இச்சிறிய மூட்டையைப் பரிசிலாகப் பெறுவீர்' என்ற அறிவிக்கின்றான். உடனே வார்த்திகன் என்னும் அந்தணனின் செல்வமகன் **தட்சிணாமூர்த்தி**

என்னும் சிறுவன் மறையின் ஒலி சிறிதும் வழுவாத வண்ணம் மிக்க மகிழ்ச்சியுடன் அப் பராசரனுடன் நன்கு பொருந்த ஓதுகின்றான். அச்சிறுவனின் திறமைக்கு மெச்சி முத்துக் கோவையாகிய பூணூலும், அதற்கேற்ற அணிகலன்கள் பிறவும் கைக்குக் கடகமும் காதிற்குத் தோடும் ஆகிய இவற்றுடன் தான் கொணர்ந்த பண்டச் சிறு பொதியையும் அச் சிறுவனுக்கு வழங்குகின்றான் பார்ப்பனவாகை பெற்ற அப் பராசரன்.

தட்சிணாமூர்த்தியின் குடும்பம் செழிப்புடன் இருக்கும் நிலை கண்ட அவ்வூரில் பணியாற்றும் அரசு அலுவலர்கள் பொறாமை கொள்ளுகின்றனர். அரசியல் முறைக்கு மாறாகப் புதையற் பொருளைக் கவர்ந்து கொண்டவன் என்று வார்த்திகனைப் பிடித்துக் காவலில் வைக்கின்றனர். பின்னர் அவனைச் சிறைக் கோட்டத்தின் கண் இடுகின்றனர். அந்த வார்த்திகன் மனைவி கார்த்திகை என்பாள் அச் செயல் கண்டு பெரிதும் வருந்தி நிலத்தில் வீழ்ந்து புரண்டு, சினத்தினால் பொங்கி செங்கோலையும் வெறுத்துப் பேசுகின்றாள். கார்த்திகை என்னும் பத்தினிப் பெண்ணுக் குற்ற நிலைமைகண்டு மதுரையில் உள்ள கொற்றவை (ஐயை)என்னும் கோயிலின் சிறப்பக் கதவு திறக்கபபடாத நிலையை அடைகின்றது. இதைக் கேட்ட பாண்டியன் நெடுச்செழியன் தன் ஏவலரை வருவித்து இந்நிலையை ஆராயுமாறும் தனது ஆட்சியில் செங் கோன்மைக்கு மாறான செயல் நிகழ்ந்ததுண்டா என் பதை ஆராயுமாறும் பணிக்கின்றான். அப்பணியாளர் ஒற்றர்கள் மூலம் அனைத்தையும் அறிந்து வார்த்திகனைச் சிறைவீடு செய்து அவனை அரசன்முன் கொணர்ந்து நிறுத்தி உண்மையைக் கூறுகின்றனர். அரசன் தன் பணியாளரால் நேர்ந்த தவற்றினுக்கு வருந்தி அவனுக்குப் புகழுரை பல சொல்லி தன் அரசியல் முறை பிழைத்தமைக் குப் பொறுக்குமாறு அவ்வந்தணனை வேண்டுகின்றான்.

மேலும், நீர்வளம் நிலவளம் மிக்க அவ்வந்தணன் பிறந்த ஊராகிய திருத்தங்காலையும்குறையாத விளையுளையுடைய வயலூர் என்னும் ஊரினையும் அப்பார்ப்பனனுக்கு முற்றூட்டாக வழங்குகின்றான். பின்னர் அவ்வந்தணனை யும் கற்புடைத் தெய்வமாகிய கார்த்திகையையும் தன் மார்பு நிலத்தில்பட வீழ்ந்து வணங்குகின்றான். இங்ஙனம் இத்திருத்தலப் பயணம் சிலப்பதிகார நிகழ்ச்சி யொன்றினையும் நினைக்கச் செய்கின்றது. இதனால் இத்திருக்தலத்தின் தொன்மையையும் பழம் பெருமையையும் அறிந்து போற்றியவண்ணம் பேருந்துமூலம் விருதுநகரை அடைகின்றோம. அங்கிருந்து இருப்பூர்தியின் மூலம் மதுரை வந்து நாம் தங்கியிருக்கும் மங்கம்மாள் சத்திரத் திற்கு வந்து சேர்கின்றோம்.

# 9. ஆழ்வார் திருநகரி ஆதிநாதப் பெருமாள்

சீமந் நாராயணனே முழுமுதற் கடவுள் என்பதை ஆழ்வார் பெருமக்கள் தம் பாசுரங்களில் பல் வேறு விதமாக நிலை நாட்டியுள்ளனர். நம்மாழ்வாரின் பெரிய திருவந்தாதியில் ஒரு பாடல்.

"முதலாந் திருவுருவம் மூன்றென்பர்; ஒன்றே
முதலாகும் மூன்றுக்கும் என்பர்-முதல்வா!
நிகரிலகு கார்உருவா! நின்னகத்த தன்றே
புகரிலகு தாமரை பூ."[1]

[இலகு-ஒத்து விளங்கும்; புகர்-தேசு; இலகு-மிக்கு விளங்கும்]

இப்பாடலில் மேற்கூறப்பெற்ற சித்தாந்தம் நிலை நாட்டப் பெற்றுள்ளது. சீமந் நாரரயணன் ஒருவனே பரதத்துவம் என்பது தோன்ற 'முதல்வா!' என்று விளிப்பது கருதத் தக்கது. சேவிக்கும்பொழுதே எல்லாத் தாபங்களும் ஆறும்படியான திருமேனி கொண்ட தெய்வமே பரதத்துவம் என்பது விளங்க 'நிகர் இலகு கார் உருவா!' என்றும் விளிக்கின்றார். இதனையே திருமங்கையாழ்வாரும்.

"ஒருருவம் பொன்னுருவம்; ஒன்று செந்தீ;
ஒன்றுமா கடலுருவம்; ஒத்து நின்ற
மூவுருவும் கண்டபோது, ஒன்றாம் சோதி
முகிலுருவம் எம்மடிகள் உருவந் தானே"

1. பெரி-திருவந்-72
2. திருநெடுந். 2

என்று அருளிச் செய்து பரதத்துவ நிர்ணயம் பண்ணி யிருப்பது கருதத் தக்கது. இதில் அவரவர்களுடைய தொழிலுக்கு அவரவருடைய உருவம் பொருத்தமா யிருப்பதைச் சொல்லுகின்றார். நான்முகன் உருவம் பொன்னுருவம்; பொன் பல்வேறு அணிகளைச் செய் வதற்கு உரித்தாயிருப்பது போல, பதினான்கு உலகங் களையும் படைப்பதற்கு உரிய உருவமென்று தோற்றி யிருக்கும். நெருப்பின் இயல்பு அனைத்தையும் எரித்து அழிப்பதாகையால், உருத்திரனுடைய இயல்பை நோக்கின் இந்த அகிலத்தையெல்லாம் அழிப்பதற்கு உரித்தாயிருக்கும் என்று தோற்ற விருக்கும். கண்டார்க்கு விடாயைத் தீர்ப்பதும், பல்வேறு பிராணிகளையும் இரத்தினம், முத்து முதலிய எல்லாப் பொருள்களையும் வேறுபாடின்றித் தன்னுள் வைத்துக் காப்பதும் கடலின் இயல்பாகத் தோற்றுகின்றது; அப்படியே எம்பெருமானது இயல்பை நோக்கின், அண்டினாரின் தாபங்களைத் தீர்க்குமவராயும், அவர்களைத் தன் அன்பினால் காப்பவராகவும் இருப்பது தோற்ற விருக்கும். 'மாகடலுருவம்' என்பதையே இறுதியில் 'முகிலுருவம்' என்று மீண்டும் மூதலிக்கின்றார்.

மேற்குறிப்பிட்ட நம்மாழ்வார் பாசுரத்தில் எம் பெருமானிடத்துள்ளதாகக் குறிப்பிடப் பெற்றிருக்கும் தாமரைப் பூவே இப்பரதத்துவத்தை அறுதியிடுவதாக இருக்கும். சிவன் நான்முகனிடமிருந்து தோன்றியதாகவும் அந்த நான்முகன் எம்பெருமானின் திருவுந்திக் கமலத்தில் தோன்றியதாகவும் சாத்திரங்கள் சொல்லியிருப்பதால், அந்தத் தாமரையையுடைய எம்பெருமானே பரதத்துவமாக இருக்கத் தகுதியுண்டென்று அறுதியிடுகின்றார் ஆழ்வார். மேலும், திருமங்கை மன்னன் சித்திரித்துக் காட்டும்,

''நெற்றிமேல் கண்ணானும் நிறைமொழிவாய்
  நான்முகனும் நீண்ட நால்வாய்
ஒற்றைக்கை வெண்பகட்டின் ஒருவனையும்
  உள்ளிட்ட அமர ரோடும்

வெற்றிப்போர்க் கடலரையன் விழுங்காமல்
தான்விழுங்கி உய்யக்கொண்ட
கொற்றப்போர் ஆழியான்குண''[3]

[நால்வாய்-தொங்குகின்ற வாய்;ஒற்றைக்கை-துதிக்கை; வெண்பகடு-ஐராவதம்.]

இதை நோக்கும்போதும் சீமன் நாராயணனின் பரதத்துவம் உறுதிப்படுத்துகின்றது.

இந்த எண்ணங்கள் நெல்லையில் ஒரு விடுதியில் தங்கியிருக்கும் நம் மனத்தில் குமிழியிடத் தொடங்குகின்றன. அதிகாலையில் எழுந்து நம்மாழ்வார் அவதரித்த திருக்குருகூர் என்ற திவ்விய தேசத்தைச் சேவிக்கச் சித்தமாகின்றோம். தண்பொருநை ஆற்றின் இருகரைகளிலும் அடுத்தடுத்து ஒன்பது திவ்விய தேசங்கள் உள்ளன. இவற்றை 'நவ திருப்பதி' என வழங்குவர். அவற்றுள் பொருநை யாற்றின் தென்கரையிலிருப்பவை திருக்குருகூர், திருக்கோளூர், தென்திருப்பேரை என்ற மூன்றுமாகும். மற்றவை ஸ்ரீ வைகுண்டம், நத்தம் என வழங்கப்பெறும் வரகுணமங்கை, திருக்குளந்தை, திருப்புளிங்குடி, தொலைவிலி மங்கலம் (இரட்டைத் திருப்பதி) ஆகிய ஆறும் ஆகும். இவை பொருநையாற்றின் வடகரையிலுள்ளன. இந்த நவதிருப்பதிகளையும் நம்மாழ்வார் மங்களாசாசனம் செய்துள்ளார். இவை யாவும் திருக்குருகூரைச் சுற்றியே அமைந்துள்ளன. முதல். திருப்பதிதான் திருக்குருகூர். இது நெல்லை—திருச்செந்தூர் நெடுஞ்சாலையில் சுமார் 22 கல் தொலைவிலுள்ளது. நம்மாழ்வார் திருவவதரித்த காரணத்தாலேயே, இத்திருப்பதி 'ஆழ்வார் திருநகரி' என்ற பெயரையும் பெற்றுத் திகழ்கின்றது. இந்த ஆழ்வார் திருகரி நெல்லை — திருச்செந்தூர் இருப்பூர்தி வழியிலுயிள்ள ஓர் இருப்பூர்தி நிலையம். இந்த நிலையத்தினின்றும் ஒருகல் தொலைவிலுள்ளது இத்திவ்விய தேசம். ஆகவே நெல்லையிலிருந்து

3. பெரி. திரு 11.6:3

இருப்பூர்தி—மூலமும் இவ்வூரை வந்தடையலாம். நாம் அதிகாலையில் நன்னீராடி நல்லுடை உடுத்து எஸ். ஆர். சுப்பிரமணிய பிள்ளை பதிப்பகத்தார் அன்புடன் அனுப்பிய 'சிற்றுந்தில்' (Van) புறப்படுகின்றோம்; முக்கால்மணி நேரத்தில் திருநகரியை வந்தடைகின்றோம்.

ஊரை நெருங்க நெருங்க அவ்வூர்ச் சூழ்நிலையும் வளமும் நம் கண்ணில் படுகின்றன. ஆற்றுநீர் பாயும் இடமாதலால் நெல் வயல்களும் சோலைகளும் நமக்குக் காட்சியளிக்கின்றன. "மலிந்து செந்நெல் கவரி வீசும் திருக்குருகூர்"[4] "சேற்றில் செந்நெல் கமலம் ஓங்கு திருக்குருகூர்,"[5] "கொக்கு அலர் தடம் தாழைவேலித் திருக்குருகூர்"[6], "வளங்கொள் தண்பனை சூழ்ந்து அழகு ஆய திருக்குருக்கூர்,"[7] "செறுவில் செந்நெல் கரும்பொடு ஓங்கு திருக்குருகூர்"[8] என்று ஆழ்வார் பாசுரங்களில் குறிப்பிடப் பெறும் வளத்தையும், அவ்வளம் இன்றும் நின்று நிலவுவதையும் கண்டு மகிழ்கின்றோம். நம் வண்டியைச் சாலையின் ஓர் ஒதுக்குப் புறத்தில் நிறுத்தி விட்டு ஊரின்மீது நம் பார்வையைச் செலுத்துகின்றோம். ஊர் சற்றுப் பெரிய ஊரே. நகர்களில் உள்ளவாறு போல மிகப் பெரிய கட்டடங்கள் ஒன்றும் இல்லை. நம்மாழ்வார் காலத்தில் ஒன்றிரண்டு இருந்திருக்கலாம். "குன்றம் போல் மணி மாட நீடு திருக்குருகூர்"[9] 'மாடமாளிகை சூழ்ந்து அழகு ஆய திருக்குருகூர்"[10], "தேசமாமதிள் சூழ்ந்து அழகாய திருக்குருகூர்"[11] என்ற நம்மாழ்வாரின்

---

4. திருவாய். 4. 10:5 5. ஷை 4. 4. 10:6
6. ஷை 4. 10:8 கொக்கு அலர்—கொக்குபோல் வெண்ணிறமாக அலரும்
7. ஷை 4. 10 : 9 தண்பனை—குளிர்ந்த நீர் நிலங்கள்
8. ஷை 4. 10:10 செறு—விளை நிலம்.
9. திருவாய். 4. 10:1
10. ஷை 4. 10:2 11. ஷை 4. 10:3

திருவாக்குகளைச் சிந்திக்கின்றோம். பொதுவாக ஊரையோ ஊர்ச் சுற்றுப் புறத்தையோ கவிஞர்கள் வருணிப்பதுபோல் அந்த ஊர் நேரில் பார்ப்பவர்கட்குத் தோன்றுவதில்லை; அந்த ஊரைப் பார்க்காமல் இருக்கும்பொழுது அவ்வூரைப் பற்றி நம் மனத்தில் எழும் மானதக் காட்சிகள் அவ்வூரை நாம் பார்க்கும்போது ஓரளவுதான் பொருந்தும். இது இலக்கியச் சுவைஞர்களின் அநுபவமாகும்.

ஊரருகிலுள்ள சாலையை அடுத்தே திருக்கோயில் உள்ளது. புகை வண்டியில் சென்றாலும், பேருந்தில் சென்றாலும் நாம் முதலில் ஆதிநாதர் சந்நிதியைத் தான் வந்தடைகின்றோம். திருக்குருகூர் என்பதன் காரணத்தை அறிய நாம் ஆவல் கொள்ளுகின்றோம். புராணக் கண் திறக்கின்றது. ஒருநாள் நான்முகன் நாராயணனை வணங்குவதற்காக வைகுந்தம் செல்லு கின்றார். நாராயணன் நான்முகனை நோக்கி "அன்பனே, உன்னைத் தோற்றுவிப்பதற்கு முன்னரே தண்பொருநையாற்றின் கரையில் ஓர் இடத்தைத் தேர்ந் தெடுத்து அதனையே குடியிருப்பாகக் கொண்டுள்ளோம். அதனையே ஆதிக்கோயிலாகக் கொண்டு வழிபடுவாயாக" என்று கூறுகின்றார். நான்முகன் அந்தத் தலத்தை நோக்கி வருங்கால் தண்பொருநையாற்றில் மிதந்துவரும் வலம்புரிச் சங்கொன்று 'சங்கணித்துறை'யில் ஏறி அங்குள்ள ஆதிநாதரை வலம்வருவதைக் காண்கின்றார். இங்ஙனம் திருமால் உகந்து இடங்கொண்ட இடத்தில் இருக்கும் ஆதிநாதரை வழிபட்டுச் சத்தியலோகம் திரும்புகின்றார் நான்முகன். திருமாலே குருவாக வந்து உபதேசித்த தலமாதலால் இதற்குக் 'குருகூர்' என்ற பெயர் வழங்கலாயிற்று. இதனை அறிந்த வண்ணம் திருக்கோயிலை நோக்கி நடக்கின்றோம்.

திருக்கோயிலின் வாசலில் ஒரு தகரக் கொட்ட கையும், அதைச் சேர்ந்தாற்போல் ஒரு பெரிய மண்டப மும் நம் கண்ணில் படுகின்றன. இந்த மண்டபத்தில்தான்

இராமயணக் குறடு உள்ளது. இராமாயணக் குறட்டை அடுத்து இருப்பது கோபுர வாயில். இதனை அடுத்துள்ள கொங்கணையான் குறடு. கிளிக் குறடு ஆகியவற்றைக் கடந்து கருட மண்டபத்தினை அடைகின்றோம். இதனைக் கடந்து அர்த்த மண்டபத்திற்கு வருகின்றோம். இப்படி வந்து கொண்டிருக்கும் பொழுதே இத் திருப்பதிபற்றிய நம்மாழ்வாரின் திருவாய்மொழிப் பாசுரங்கள் நம் மனத்தில் குமிழியிடத் தொடங்குகின்றன. அர்ச்சா வதாரத்தில் எம்பெருமானின் பரத்துவத்தை மூதலிக் கின்ற வீறு பெற்ற பாசுரங்களை ஒன்றன் பின் ஒன்றாகச் சிந்திக்கின்றோம்.

ஒன்றுந் தேவும் உலகும் உயிரும்
மற்றும் யாதுமில்லா
அன்று நான்முகன் தன்னொடு தேவர்
உலகோ டுயிர் படைத்தான்

.........................................

நின்ற ஆதிப்பி ரான்நிற்க மற்றைத்
தெய்வம் நாடுதிரே.''[12]

என்பது முதற் பாசுரம். மூதலிரண்டடிகள் எம்பெரு மானின் ஜகத் காரணத்துவத்தை மூதலிக்கின்றன. 'தேவும் உலகும் உயிரும மற்றும் யாதும் ஒன்றும் இல்லா அன்று' என்று கூட்டிப் பொருள் கொள்ள வேண்டும். எல்லாப் பொருள்களையும் படைத்தவனான சர்வேசுவரன், தாய் சந்நிதி ஒழியக் குழந்தை வளராதாப் போலே, தன் சந்நிதி ஒழிய இவை சீவிக்கமாட்டா என்று பார்த்துத் திருநகரியிலே எளியனாய்க் காட்சி தந்தருளா நிற்க, 'வேறே அடையக் கூடிய பொளுரும் உண்டு' என்று தேடித் திரிகின்றீர்களே, இஃது என்ன அறிவுக் கேடு!' என்று வேறு தெய்வங்களை நாடுவோரை நோக்கி வெறுப்புக் காட்டுகின்றார் ஆழ்வார், இங்கே

12. திருவாய் 4.10:1

இன்சுவைமிக்க ஈட்டுஸூக்தி காண்மின்: "ஸர்வேசுவரன் சதுர்முகனை ஸ்ருஷ்டித்தான்; சதுர்முகன் பஞ்சமுகனை ஸ்ருஷ்டித்தான்; பஞ்சமுகன் ஷண்முகனை ஸ்ருஷ்டித்தான்; ஆக இதுதான் பஹுமுகமாயிற்றுக்காணும்" மேலும் நீர் வேட்கையையுடைய ஒருவன் கங்கை பெருகியோடா நிற்க அதிலே அள்ளிக்குடித்துத் தன் விடாய் தீரமாட்டாதே, அதன் கரையிலேயே குந்தாலி கொண்டு கிணறு தோண்டித் தன் விடாய்க்கு உதவ நாக்கு நனைக்க இருக்குமாறு போலே, அடையத் தக்கவனுமாய், எளிதில் ஆராதிக்கக் கூடியவனுமாய், நல்ல சுபாவத்தையுடையவனுமான இவனை விட்டு, அடையத் தகாதவராய், அரியராய், அரிதில் ஆராதிக்க, கூடியவராய்க் கெட்ட சுபாவத்தை உடையவராய், சீலித்து ஆராதித்தாலும் பலிப்பதும் ஒன்று இன்றிக்கே இருக்கிற திருவில்லாத தேவரைத் தேடி அடைவதற்குத் திரிகின்றீர்களே" என்ற ஈட்டின் விளக்கத்தையும் சிந்திக்கின்றோம்.

இந்த எம்பெருமான் மேவி உறையும் கோயிலுக்குப் பாடியாடிப் பரவிச் செல்லுமாறு உலகினரைப் பணிக்கின்றார் அடுத்த பாசுரத்தில்.

> "நாடி நீர்வ ணங்கும் தெய்வமும்
> உம்மையும் முன்படைத்தான்
> வீடில் சீர்ப்புக ழாதிப் பிரானவன்
> மேவி யுறை கோயில்
> ......... ....................
> பாடி யாடிப் பரவிச் செல்மின்கள்
> பல்லுலகீர்! பரந்தே"[13]

மக்கள் வணங்கும் சிறு தெய்வங்கட்கும் மக்களுக்கும் அதிக வேறுபாடு ஒன்றும் இல்லை. மக்களைக் காட்டிலும் அவர்கட்குச் சிறிது ஞானமும் சக்தியும் ஏறியுள்ளன; அவ்வளவுதான். ஆகவே, அத்தெய்வங்களையும் மக்களை

13. திருவாய் 4.10:2

யும் படைத்த காரணபூதனான சீமந் நாராயணன் சேவை சாதிக்கும் இடமான திருநகரியைச் சேவிக்குமாறு பணிக்கின்றார் ஆழ்வார்.

ஆதிப்பிரான் அவன மேவி உறைகோயில்: பரம பதத்தில் தன்னில் குறைந்தார் இல்லாமையாலே அவ்விடத்தைவிட்டு, நல்ல படுக்கையையும போகத்துக்கு ஏகாந்தமானவற்றையும் காற்கடைகொண்டு குழந்தையினுடைய தொட்டிற் காற்கடையிலே கிடக்கும் தாயைப் போல, காப்பாற்றுவாரை விரும்புபவர்களான சம்சாரிகள் இருக்கும் இடமாகையாலே விரும்பி வசிக்கும் இடம் இவ்விடமாயிற்று. 'அவன் மேவி உறை கோயில்' என்ற விடத்து நம்பிள்ளை ஈடு: ''அவன் பரமபதத்திலோ உள்வெதுப்போடே காணும் இருப்பது. சம்சாரிகள் படுகிற கிலேசத்தை அநுஸந்தித்து 'இவை என்படுகின்றனவோ' என்று திருவுள்ளத்தில் வெறுப்போடோயிற்று அங்கிருப்பது...''

இக் கருத்துபற்றி ஈட்டில் வரும் ஓர் இதிகாசத்தையும் சிந்திக்கின்றோம். பராசரபட்டர் என்பார், 'பரம பதத்திலும் சம்ஸாரிகள் படுகிற கிலேசத்தை யநுசந்தித்துத் திருவுள்ளத்தில் வெதுப்போடேயாயிற்று' என்று அருளிச்செய்ய, பண்டிதர் என்ற அன்பர் ஒருவர், 'ஆச்சானும் பிள்ளை யாழ்வானும் இதைக் கேட்டுப் பரமபதத்திலே ஆநந்தத்தால் பூர்ணனாயிருக்கிற இருப்பிலே திருவுள்ளத்திலே ஒரு வ்யஸனத்தோடேயிருந்தான் என்கை உசிதமோ? என்கின்றார்கள்' என்று வந்து விண்ணப்பம் செய்ய, அதற்குப் பட்டர், 'மனிதர்கட்குத் துக்கம் வருகின்ற காலத்தில் தானும் (எம்பெருமானும்) மிகவும் துக்கிக்கின்றான்' என்றது குணப்பிரகரணத்திலேயோ? தோஷப் பிரகரணத்திலேயோ? என்று கேட்கமாட்டிற்றிலீரோ? இது குணமாகில் குணமென்று பேர் பெற்றவற்றில் அங்கு இல்லாதது ஒன்று உண்டோ?' என்று அருளிச் செய்தார்.

இதனைச் சற்று விளக்குவோம். எம்பெருமானை 'ஸமஸ்த கல்யாண குணாத்மகன்' என்றும், 'உயர்வற உயர் நல முடையவன்' என்றும் கூறுகின்றவர்கள் 'ஒன்றொழியாமல் எல்லாக் குணங்களும் அப்பெருமானிடத்தே உள்ளன' என்று இசைந்தே தீரவேண்டும். ஒரு குணம் இல்லை என்றாலும் அது அவனைக் குறை சொன்னதாக ஏற்படும். துக்கப்படுவதென்பது கல்யாண குணமன்று என்றும், அது தாழ்வான குணம் என்றும் கலங்குவர் சிலர். தாமாக அநுபவிக்கும் சோகம் தாழ்வானதேயன்றிப் பிறர் பொருட்டு அநுபவிக்கும் சோகம் சிறந்த குணமாகும். எம்பெருமான் தமக்காக இன்ப துன்பங்கள் இல்லாமலிருந்தும் பிறர்படும் இன்ப துன்பங்களை அநுபவிப்பதனால் தாம் இன்பதுன்பங்களை அடைந்து விகாரப்படுவர்; இந்த விகாரம் பிறரிடத்திலுள்ள அன்புபற்றியதாதலால் அவனுக்குக் குற்றமாகாது என்று பட்டர் அருளின விளக்கத்தையும் சிந்திக்கின்றோம்.

எம்பெருமானைக் காட்டிலும் அவன் உகந்தருளின இடமே மிகச் சிறந்தது என்ற கொள்கையின்படி ஆழ்வாரும் 'திருக்குருகூரதனைப் பாடியாடிப் பரவிச் செல்மின்கள்' என்கின்றார். திவ்விய தேசத்திற்குச் சென்று சேவிப்பதைவிட வழிப் போக்குத்தானே மிக இனிதாகையாலே 'பாடியாடிப் பரவிச் செல்மின்கள்' என்கின்றார். 'பரந்தே' என்பதற்கு ஈடு: "பெரிய திருநாளுக்கு எல்லாத் திக்குகளின்றும் வந்து ஏறுமாறு போன்று, பல திக்குகளினின்றும் பாடியாடிப் பரவிச் செல்லுமாறு பணிக்கின்றார்." இதனையும் எண்ணி மகிழ்கின்றோம்.

உலகங்களைக் காப்பதற்காக எம்பெருமான் செய்து போகும் திருச் செயல்களை ஆராய்ந்து பார்த்தாலும் இவனே முழு முதற் கடவுள் என்பதும் தெளிவாகும். "தேவசாதி தொடக்கமாகப் பல உலகங்களைப் படைத்த செயலும்,

''மண்நாடும் விண்நாடும் வானவரும்
தானவரும் மற்றும் எல்லாம்
உண்ணாத பெருவெள்ளம் உண்ணாமல்
தான் விழுங்கி உய்யக் கொண்ட''[14]

பெருஞ் செயலும், பின்னர் அவற்றை வெளிநாடு காண புறப்படவிட்ட அருஞ் செயலும், வாமன அவதாரம் எடுத்து மூவடி நிலத்தை நீர் ஏற்றுப் பெற்று அளந்து கொண்ட அற்புதச் செயலும், வராக அவதாரத்தில் பூமியை அண்டபித்தியினின்றும் ஒட்டுவிடுவித்து எடுத்துக் கொண்டதுமாகிய தீரச் செயலும் இவனே பரதெய்வம் என்று திண்ணமாக அறுதியிடப் போதுமே; அந்தோ! தெளியமாட்டுகின்றிலீரே'' என்று இரக்கப்படுகின்றார் ஆழ்வார்.

''பரந்த தெய்வமும் பல்லுல கும்படைத்
தன்றுட னேவிழுங்கி,
கரந்து மிழ்ந்து கடந்திடந் ததுகண்டும்
தெளிய கில்லீர்.''[15]

என்பது அவர் திருவாக்கு. எல்லாத் தெய்வங்களும் சிரம் தாழ்த்தி வணங்கும் திருக்குருகூர் ஆதிப் பிரானே முழு முதற் கடவுள் என்று கூறி அப்படி வேறொரு தெய்வம் இருப்பதாக உலகினர்களுள் யாராவது கருதினால் அவர்களைத் தன்னுடன் வந்து கலந்து பேசுமாறு அழைக்கின்றார். ''பரன் திறமன்றிப் பல்லுலகீர்! தெய்வம் மற்றில்லை பேசுமினே.''

சிவனையும் நான்முகனையும் பரம்பொருள் என்று கருதும் சிலரைப் பார்த்து ஆழ்வார் பேசுவதை நினைக்கின்றோம்.

''பேச நின்ற சிவனுக் கும்பிர
மன்றனக் கும்பிறர்க்கும்
நாய கன் அவனே கபாலநன்
மோக்கத்துக் கண்டுகொண்மின்''[16]

---

14. பெரி. திரு. 11 6:7 15. திருவாய் 4. 10:3
16. ஷை 4.10:4

[கபாலம்-நான்முகனின் மண்டையோடு; மோக்கம் - விடுபடுதல்.]

என்பது ஆழ்வார் திருவாக்கு. ஒரு காலத்தில் சிவன் தன்னைப் போலவே பிரமனும் ஐந்து தலையுடையனா யிருப்பது பலரும் பார்த்து மயங்குவதற்கு இடமாயிருக்கிற தென்று கருதி அவனது தலையொன்றினைக் கிள்ளி எடுக்கின்றான். அத்தலை அப்படியே சிவன் கையில் ஒட்டிக்கொண்டுவிடுகின்றது. என்ன செய்வது என்றறி யாமல் கவலைப்படுகின்றான் சிவன். தேவர்களும் முனிவர் களும் 'இப்பாவம் தொலையப் பிச்சை எடுக்கவேண்டும்; என்றைக்குக் கபாலம் நிறையுமோ அன்றுதான் அது கையைவிட்டு அகலும்' என்று கூறுகின்றனர். அதன்படியே அவனும் பல தலங்களில் பிச்சையேற்று அலைந்து திரிகின்றான். என்றபோதிலும் அது நீங்கிற்றிலது. பின்பு ஒரு நாள் பதரிகாசிரமத்தை அடைந்து அங்கு எழுந்தருளி யிருக்கும் நாராயண மூர்த்தியை வணங்கி வருந்தி, இரக்கின்றான். அப்பெருமானும் 'அட்சயம்' என்று சொல்லிப் பிச்சையிடுகின்றான். உடனே கபாலம் நிறைந்து அதுவும் கையைவிட்டு நீங்குகின்றது என்பது கபாலமோக்க வரலாறு.

இவ்விடத்தித்தில் இன்சுவைமிக்க நம்பிள்ளை ஈடு: '.நீங்கள் ஈச்வரர்களாக சங்கித்தவர்களிருவரும் நின்ற நிலை கண்டதே; ஒருவன் தலைகெட்டு நின்றான்; ஒரு வன் ஓடுகொண்டு ப்ராயச்சித்தியாய் நின்றான். ஓட்டை யோடத்தோடு ஒழுகலோடமாய், உங்கள் குறைதீரப் பற்றுகிற நீங்கள் உங்களிலும் பெருங்குறையாளரையோ பற்றுவது? 'பாதகியாய் பிட்சைபுக்குத் திரிந்தான்' என்று நீங்களே சொல்லிவைத்து அவனுக்குப் பரத்துவத்தைச் சொல்லவோ? ஒருவனுடைய ஈசுவரத்துவம் தலையோடே போயிற்று. மற்றவனுடைய ஈச்வரத்துவம் அவன் கையோடே யென்று காட்டிக் கொடுக்கின்றார். [கண்டு கொண்மின்] உந்தம் அகங்களிலே நீங்கள் எழுதியிட்டு

வைத்த கிரந்தங்களைப் பார்த்துக்கொள்ள மாட்டி கோளோ? முன்னே நின்று பிதற்றாதே என்கிறார்'' இங்ஙனம் அநுமானத்தையே பிரமாணமாகக் கொண்டவர் களை[17] மறுத்துத் தள்ளுவதை எண்ணுகின்றோம்.

அடுத்து, ஆகமத்தைப் பிரமாணமாகக் கொண்ட வர்களை மறுக்கும் திறத்தைச் சிந்திக்கின்றோம். இவர் கள் இலிங்கியர்,[18] சமணர், பௌத்தர், விதண்டாவாதம் செய்யும் வைசேடிகர்கள் முதலியோர். நீங்களும், நீங்கள் வணங்குகின்ற தெய்வங்களும் ஆகிநின்றவன் திருக்குருகூரில் எழுந்தருளியிருக்கும் பொலிந்து நின்ற பிரானே[19] யாவன். அவனையே துதிசெய்யுங்கோள்'' என்று கூறுவதையும் சிந்திக்கின்றோம். அடுத்து, "நாராயணனே பரம்பொருளாயின் அவன் தன்னைப் போற்றும்படி செய்யாமல் இதர தெய்வங்களைத் தொழுமாறு எங்களைச் செய்தது ஏன்?" என்று சிலர் வினவுவதாக நினைத்து ஆழ்வார் அவர்கட்கு மறுமாற்றம் அளிக்கின்றார் அடுத்த பாசுரத்தில்.

''போற்றி மற்றோர் தெய்வம் பேணப்
புறத்திட்டு உண்மையின்னே
தேற்றி வைத்த தெல்லீரும் வீடுபெற்
றால்உலகு இல்லையென்றே

........................................

ஆற்ற வல்லவன் மாயம் கண்டீர்அது
அறிந்தறிந் தோடுமினே''[20]

[பேணுதல்-ஆதரித்தல்; புறத்திடுதல்-வேறுபடுத்துதல், தேற்றுதல்-நம்புதல்; உலகு-சாத்திரமரியாதை.]
என்பது பாசுரம், இதில் 'எல்லீரும் வீடு பெற்றால் உலகு இல்லை' என்ற தொடர் சற்று மயக்கத்தைத்தருவதாகும்.

17. இவர்கள் பாசுபத நையாயிக வைசேடிகர்கள்.

18. இலிங்கியர்-இலிங்கவாதிகள்; லிங்கம்-ஹேது; அநுமானம். 19. திருவாய் 4 10:5

20. ஷை - 4. 10:6 பரமபதத்திலிருப்பதைவிட இங்கே திருக்குணங்கள் நன்கு விளங்கப்பெற்றதனால் இப்பெயர் பெற்றார்.

'எல்லோரும் நாராயணனைத் தொழுது வீடு பெற்று விட்டால் இந்த லீலா விபூதி அடியற்றுப் போய்விடும்; அதற்காகவே உங்களை வேறு தெய்வங்களைத் தொழுமாறு செய்து சம்சாரிகளாகத் தொலைந்து போகும்படி செய்தான் என்பதாகப் பொருள் கொள்ளும்படி செய்துவிடும். இது[21] எம்பெருமானுக்குக் குறையை உண்டாக்கிவிடும். திருக்குருகைப்பிரான் பிள்ளான் உள்ளிட்ட எல்லா உரையாசிரியர்களும் 'உலகு' என்பதற்கு 'சாத்திர மரியாதை' என்று பொருள் கொண்டுள்ளார்கள். "அவரவர்கள் செய்த புண்ணிய பாவங்களுக்கேற்பப் பலன் கொடுப்பதென்று ஒரு சாத்திர மரியாதை ஏற்பட்டுள்ளது. நீங்கள் சென்ற பிறவிகளில் தீவினைகளைச் செய்திருந்தபடியால் அவற்றின் பலனாக உங்களை இப்பிறப்பில் சிறுதெய்வ வழிபாட்டில் தள்ளியுள்ளான். கொடிய பாவங்கள் பண்ணின் உங்களை புண்ணியான்மாக்களைப் போலவே நாராயண வழிபாடு செய்யும்படி செய்துவிடுவதானால் அப்போது சாத்திரமரியாதை குலைந்துவிடுமல்லவா? அங்ஙனம் அஃது அழிந்துவிடாதிருக்கும் பொருட்டே உங்களை இங்ஙனம் நிறுத்திவைத்தான்" என்ற சரியான பொருளையும் சிந்திக்கின்றோம்.

அடுத்த பாசுரத்தில் அவர்கள் இந்தச் சுழலிலிருந்து தப்பும் வழியைக் காட்டுகின்றார்.

"ஓடி யோடிப் பல்பி றப்பும்
பிறந்துமற் றோர் தெய்வம்
பாடி யாடிப் பணிந்து பல்படி
கால்வழி யேறிக்கண்டீர்

.................................

ஆடு புட்கொடி ஆதி மூர்த்திக்(கு)
அடிமை புகுவதுவே."[22]

21. திருவாய்மொழிக்கு வடமொழிப் பதவுரையிட்டு ஒன்பதாயிரப்படி இயற்றிய ஸ்ரீ ரங்கராமாநுஜ சுவாமி இப்பொருளையே பணித்துள்ளார்.

22. திருவாய் 4. 10:7

[ஓடி ஓடி-சம்சார சாகரத்தில் ஓடியோடி; பல்படிகால் வம்சபரம்பரையாக; புள்கொடி-கருடக்கொடி; புகுவது வியங்கோள் வினைமுற்று.]
இதில் கருடக் கொடியையுடைய எம்பெருமானுக்கு அடிமை புகுவதுவே அவர்கள் மேற்கொள்ள வேண்டியதாகும் என்கிறார். அடுத்து,

''புக்கடி மையினால் தன்னைக் கண்ட
மார்க்கண் டேயவனை,
நக்க பிரானும் அன் றுய்யக் கொண்டது
நாரா யணனருளே.''[23]

[புக்கு-உள்புக்கு; நக்கபிரான்-திகம்பரன் (உருத்திரன்)] என்று மார்க்கண்டன் வரலாற்றைக் கூறுகின்றார். யமன் மாக்கண்டனையும் இலிங்கத்தையும் தன் பாசத்தால் கட்டி இழுக்கும் பொழுது சிவபெருமான் நாராயணனைத் தியானித்து அவனது திருவருளால் இலிங்கத்தினின்றும் வெளிப்பட்டு யமனைக் காலாலுதைத்துத் தள்ளிமார்க்கண்டனுக்கு என்றும் பதினாறு வயதாக வாழும்படி அநுக்கிரகித்தான் என்பது வரலாறு. இந்த மார்க்கண்டன் நெடுநாள் வாழ்ந்த பிறகு மகாப் பிரளயத்தைக் காணவேண்டும் என்று ஆசைகொண்டு எம்பெருமானைப் போற்றி வணங்குகின்றான். அவன் அருளால் மகாப் பிரளயத்தைக் காணுங்கால் அப்பெருமானது திருவயிற்றினுள் திருமாலொருவனையன்றி மற்றைத் தேவர் எவரையும் பிழைத்திருப்பதைக் காணவில்லை. முடிவில் தான் திருமாலைச் சரணம் அடைந்து அவன் திருவடிப் பேறு பெறுகின்றான் என்பதையும் சிந்திக்கின்றோம். அடுத்து, ஆழ்வார் திருநகரியைச் சிந்தனை செய்யுமாறும் ஆதிப்பிரானுக்கு அடிமை செய்யுமாறும் ஆற்றுப்படுத்துவதையும் எண்ணுகின்றோம்.

அர்த்த மண்டபத்திலிருந்த வண்ணம் கருவறையில் நின்ற திருக்கோலத்தில் கிழக்கு நோக்கிய திருமுக

23. திருவாய் 4. 10: 8

மண்டலம் கொண்டு பெரிய பிராட்டியாரும் பூமிப் பிராட்டியாரும் இருபக்கங்களிலும் இருக்கும் நிலையில் சேவை சாதிக்கும் ஆதிநாதப் பெருமானைக் கண்டு வணங்குகின்றோம் இந்த எம்பெருமான் பற்றிய நம்மாழ்வார் பாசுரங்கள் நம்மிடற்றொலியாக வெளிப்படுமாறு ஓதி ஓதி உளங்கரைகின்றோம் இந்த ஆதிநாதருக்கு முன்பக்கத் திருப்பவரே உற்சவராகிய பொலிந்து நின்ற பிரான். இவர் பக்கத்தில் உற்சவர்களாக சீதேவி, பூதேவி, நீளாதேவி ஆகிய மூவரும் நிற்கின்றனர். இவரையும் நம்மாழ்வார்,

''இலிங்கத் திட்ட புராணத் தீரும்
சமணரும் சாக்கியரும்
வலிந்து வாதுசெய் வீர்களும் மற்றுநுந்
தெய்வமும் ஆகிநின்றான்
மலிந்து செந்நெல் கவரி வீசும்
திருக்குருகூரதனுள்
பொலிந்து நின்ற பிரான்கண்டீர் ஒன்றும்
பொய்யில்லை போற்றுமினே.''[24]
[சாக்கியர்-பௌத்தர்.]

என்ற பாசுரத்தால் மங்களாசாசனம் செய்துள்ளார். இப்பாசுரத்தைப் பாடி இவரையும் வணங்குகின்றோம்.

மூலவர் ஆதிநாதரும் அவர் பக்கத்திலிருக்கும் நாச்சியார்களும் சுதையினாலானவர்கள். இத்திருக்கோயிலில் ஆதிநாதவல்லியும் குருகூர்நாயகியும் தனிக்கோயில் நாச்சியார்களாகத் திகழ்கின்றனர். இவர்களைத் தவிர தெற்குப் பிராகாரத்தையொட்டிய மேடையின் மீது வராக நாராயணர் ஞானப் பிரானாக முனிவர்கட்குக் காட்சி நல்கும் நிலையில் நமக்கும் சேவை சாதிக்கின்றார். இவரிடம் சென்று இவரை வணங்கி நமக்கும் 'ஞானபிட்சை' அருளுமாறு வேண்டுகின்றோம்.

24. திருவாய் 4.10:5

ஆண்டவனைவிட அடியாரே மிகவும் பெருமை பெற்றவர் என்பது வைணவ சித்தாந்தம். மற்றைய ஆழ்வார்கள் யாவரும் எம்பெருமானைப் பாட மதுரகவி யாழ்வார் மட்டிலும் நம்மாழ்வாரையே பாடியிருப்ப தனால் இதனை அறியலாம். 'கண்ணி நுண் சிறுத்தாம்பு' என்ற திருமொழி நம்மாழ்வாரின் புகழையே பாடு கின்றது. அத்தகைய பெருமைவாய்ந்த நம்மாழ்வாரின் சந்நிதிக்கு வருகின்றோம். வீற்றிருக்கும் திருக்கோலத் தில் எழிலே வடிவமாகக் கொண்டு இலங்கும் 'வேதம் தமிழ் செய்த வித்தகரை'க் கண்டு வணங்குகின்றோம், பொதுவாக திருமால் கோயில்களில் நம்மாழ்வாரின் திருமேனி கூப்பிய கையராய்ச் சிலை வடிவிலும் செப்பு வடிவிலும் காணப் பெறும். ஆனால், இத் தலத்தில் அவர் உபதேசிக்கும் ஞான முத்திரையுடன் காட்சி தருகின்றார். மதுரகவியாழ்வாரின் சில பாசுர வரிகள் நம் உள்ளத்தை உருக்குகின்றன.

> "நண்ணித் தென்குரு கூர்நம்பி என்றக்கால்
> அண்ணிக் கும்அமு தூறுமென் நாவுக்கே"[25]

[அண்ணிக்கும்-பரமபோக்கியமாக இருக்கும்]

> "தேவு மற்றறி யேன்குரு கூர்நம்பி
> பாவின் இன்னிசை பாடித் திரிவனே.[26]"

[தேவு-தெய்வம்]

> "அன்னை யாய்அத்த னாய்என்னை ஆண்டிடும்
> தன்னை யான்சட கோபன் நம்பியே"[27]

[அத்தன்-தந்தை]

என்ற பாசுரப்பகுதிகளில் ஆழங்கால் படுகின்றோம். வகுள பூஷண பாஸ்கரராகிய நம்மாழ்வாரே உலகுய் யத் தோன்றிய குருமூர்த்திகளுள் முதன்மையானவர். ஆழ்வார்களுள் தலையாய ஆழ்வாராகத் திகழ்பவர். இயல்பாகவே மெய்யுணர்வு பெற்று தாம் உணர்ந்த

25. கண்ணிநுண்-1 26. ஷை-2
27. ஷை-4

வாறே திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி திருவாய்மொழி என்ற நான்கு பிரபந்தங்கள் வாயிலாக உலகுக்கு உணர்த்தியவர்[28] இத்தகைய பெருமை வாய்ந்த ஆழ்வார் பிறந்த திருக்குருகூர் என்ற ஊர் பெயர் ஆழ்வார் திருநகரி என்று மாறிவிட்டதே ஆழ்வாரின் பெருமைக்குச் சான்றாகும். இந்தத் திருநகரிக்கு வந்த கவிஞர் ஒருவர் மிகப் பெருமிதம் கொள்கின்றார்; அவருக்கு எக்களிப்பே உண்டாகி விடுகின்றது. அந்த எக்களிப்பில்,

''இதுவோ திருநகரி? ஈதோ பொருநை?
இதுவோ பரமபதத்து எல்லை?-- இதுவோதான்
வேதம் பகிர்ந்திட்ட மெய்ப்பொருளின் உட்பொருளை
ஓதும் சடகோபன் ஊர்?''[29]

என்று ஒரு வெண்பாவையே பாடி விடுகின்றார்.

நம்மாழ்வாருக்கு முதலில் 'சடகோபன்' என்ற திருநாமம் ஏற்பட்டதன் காரணத்தையும் எண்ணுகின்றோம். அன்னையின் கருவறையிலிருக்கும் பொழுது ஞானமுடையவனாயிருக்கின்ற குழவிகளை அவை பிறந்தவுடன் தனது தொடுகையால் அஞ்ஞானத்திற்கு உள்ளாக்கி அழுதல், அரற்றுதல் முதலியன செய்யும்படி பண்ணிவிடும் தன்மையதான 'சடம்' என்ற வாயு இவ்வாழ்வார் திருவவதரித்த பொழுது தொடுவதற்கு வர இவர் அப்பொழுது அதனை உங்காரத்தால் ஒறுத்து ஓட்டி ஒழித்ததனால் 'சடகோபர்' என்று இவருக்குத் திருநாமமாயிற்று என்பதனையும் சிந்திக்கின்றோம்.

ஆழ்வாரைச் சேவித்த பிறகு அவர் இருந்த புளிய மரத்தையும் பார்க்க விரைகின்றோம். இந்தப் புளிய மரமே தலவிருட்சம். வைணவர்கள் இதனைத் திருப்புளி

28 இந்த நான்கு பிரபந்தங்களையும் முறையே இருக்கு, யசூர், அதர்வண, சாமம் என்ற நான்கு வேதங்களின் சாரமாகக் கொண்டு போற்றுவர் வைணவப் பெருமக்கள்.

29. பழம் பாடல்

ஆழ்வார் என்றே வழங்குவர். நம்மாழ்வார் இருந்த மரத்தின் பகுதியில் நாடோறும் திருமஞ்சன வழிபாடு நடைபெற்று வருவதையும் காண்கின்றோம். ஒரே மரமாக இருக்கும் இது பல பொந்துகளுடன் திகழ்கின்றது. இஃது ஏழு பிரிவுகளாகப் பிரிந்து திருக்கோயில் விமான முழுவதும் பரவி நிற்கின்றது. இது காய்த்த போதிலும் காய்கள் பழுக்காமல் பிஞ்சிலே உதிர்ந்து போகின்றன. இத்தலத்தைச் சுற்றியுள்ள புளிய மரங்கட்கும் இதே நிலை தான். திருபுளியாழ்வாரின் அடியில் நம்மாழ்வார் தனிக் கோயிலில் சிலை வடிவில் காட்சி தருகின்றார். நம்மாழ்வாரது பூத உடலை அடக்கம் செய்த இடத்தில் தான் நம்மாழ்வாரின் திருக்கோயிலை அமைத்து நம்மாழ்வாரின் திருமேனியைப் பிரதிஷ்டை செய்துள்ளனர். திருப்புளியாழ்வாரைச் சுற்றிய பீடத்தின் மதிற் சுவர்களில் மேல் வரிசையில்36 திருப்பதி எம்பெருமான் களின் திருவுருவங்களும் கீழ்வரிசையில் ஆழ்வாராதிகளின் திருவுருவங்களும் அதற்கும் அடியிலுள்ள வரிசையில் யானை உருவங்களும் அமைக்கப் பெற்றுள்ளன. உற்சவ மூர்த்தமான ஆழ்வார் சோபன மண்டபத்திற்கு எதிரே யுள்ள பொன் குறட்டில் எழுந்தருளியுள்ளார்.

வைணவர்கள் 'மாறன்' என்ற சடகோபரையே ஏற்றமுடன் போற்றுவர். கம்பநாடனுக்கு நம்மாழ் வாரிடம் மிக்க ஈடுபாடு உண்டு இராமகாதை பாடு வதற்கு முன் நம்மாழ்வாரின் திருவடிகளை நினைந்து வணங்கியிருப்பதையும், அஷ்டப்பிரபந்தம் பாடியருளிய திவ்வியகவி பிள்ளைப்பெருமாள் அய்யங்காரும் நம்மாழ் வார் துதியைக் காப்பாக அமைத்திருப்பதையும் சிந்தித்துப் பார்க்கின்றோம். கம்பன் 'சடகோபர் அந்தாதி' என்ற ஒரு பிரபந்தத்தையே நம்மாழ்வார்மீது பாடியுள்ளார்.

இத்திவ்விய தேசத்தைப் பற்றிய திவ்வியகவியின் பாசுரம் நம் நினைவிற்குவர அதனையும் ஓதுகின்றோம்.

"வளந்தழைக்க உண்டாலென்?
வாசம் மணந்தாலென்?
தெளிந்தகலை கற்றாலென்?
சீசீ—குளிர்ந்தபொழில்
தண்குருகூர் வாவிச்
சடகோபன் ஊரெங்கள்
வண்குருகூர் என்னாத
வாய்."[29]

[வளம் தழைக்க-வளமாக; கலை- சாத்திரங்கள்; பொழில்-சோலைகள்; வாவி-குளம்.]

என்பது பாசுரம். திருத்துழாய், மணத்துடன் தோன்றுவதுபோல் ஞானநலத்துடன் திருவவதரித்த நம்மாழ்வார் பிறந்த ஊர் 'எங்கள் ஊர்' என்று ஒரு தரமேனும் சொல்லுதலே வாய்படைத்த பயன் என்பது திவ்விய கவியின் கருத்து என்பதையும் அறிகின்றோம்.

இவற்றையெல்லாம் அறிந்த வண்ணம் கோயிலின் பிராகாரத்தில் ஓரிடத்தில் அமர்ந்து மனஅமைதி பெறுகினறோம். திருக்கோயில் அலுவலர் ஒருவர் மூலம் இந்த ஊரில் தெற்கு மாடவீதியில் திருவேங்கடமுடையான் சந்நிதியும், மேற்கு மாடவீதியில் அரங்கநாதன் சந்நிதியும், வடக்கு மாடத்தெருவில் பிள்ளை உலகாசிரியர், அழகர், தேசிகர், ஆண்டாள் சந்நிதிகளும் இருப்பதை அறிகின்றோம். இத்தனை பேர்களும் ஆழ்வாரைத் தேடி வந்தனரோ என்றுகூட நமக்கு எண்ணத் தோன்றுகின்றது.

இத்திவ்விய தேசத்தைவிட்டுப் புறப்படுவதற்கு முன் இன்னொரு செய்தியையும் அறிகின்றோம். ஆற்றின்வடகரையில் 'காந்தீசுவரம்' என்ற சிவன் கோயில் ஒன்று உள்ளது. இங்குக் கரூர்சித்தர் என்ற பெரியார் ஒருவர் இருந்ததாக

29. நூற் திருப் அந் 49.

வும், அவரிடம் நாய் ஒன்று இருந்ததாகவும், நாள்தோறும் அது திருக்குருகூர் தெருக்களில் விழும் எச்சில் உணவை அருந்தி வந்ததாகவும் தெரிந்து கொள்ளுகின்றோம். ஒரு நாள் அந்நாய் குருகூரிலிருந்து ஆற்றைக் கடந்து தன் இருப்பிடத்திற்குத் திரும்புங்கால் வெள்ளத்தின் நீர்ச் சுழலில் சிக்கி உயிர் இழந்ததாகவும், அப்பொழுது அதன் உயிர் ஒளி பெற்று மீளா உலகினை அடைந்ததாகவும், இதனைக் கண்ணுற்ற சித்தர் அழகான பாடல் ஒன்றினை அருளியதாகவும் அறிகின்றோம்.

> ''வாய்க்கும் குருகைத் திருவீதி
> எச்சிலை வாரியுண்ட
> நாய்க்கும் பரமபதம் அளித்தாய்
> அந்தநாயோடு இந்தப்
> பேய்க்கும் பலமளித் தால்பழுதோ?
> பெருமாள் மகுடம்
> சாய்க்கும் படிகவி சொல்லும்
> ஞானத் தமிழ்க்கடலே.''

என்பது அவர் பாடிய பாடல். இவரும் நம்மாழ்வாரைப் பாடி அவர் திருவருளைப் பெற்றதை நினைந்த வண்ணம் திருக்கோளூர் என்ற திவ்விய தேசத்தை நோக்கிப் பயண மாகின்றோம்.

# 10. திருக்கோளூர் வைத்தமாநிதி

இந்த உலகில் ஒருவன் ஒரு பொருளின்மீது பற்று வைத்திருந்து, அப்பற்றும் அளவற்றதுமாக இருந்தால், அப்பற்று அப்பொருளுடன் நின்று விடாமல், அதனோடு சம்பந்தம் பெற்ற பொருள்களிலும் பெருகிச் செல்லும் என்பதை நாம் அநுபவத்தால் அறியலாம். அங்ஙனமே, பாகவத பக்தி என்பது பகவத் பக்தியின் எல்லை நிலமாக உண்டாகும். இன்னும் தெளிவாகக் கூறினால், பகவத் பக்தியின் உறைப்பையே பாகவத பக்தி வெளிப் படுத்தும் எனலாம். எம்பெருமானுடைய பாதுகைகளில் நாம் ஆதரம் வைத்து அவற்றைக் கண்களில் ஒற்றிக் கொள்வதும், அவற்றைத் தலைமீது அணிந்து கொள்வதும் அவற்றை நீராட்டிய தீர்த்தத்தைப் பருகுவதும் செய் கின்றோமன்றோ? இதற்குக் காரணம் நாம் எம்பெருமா னிடம் கொண்டுள்ள அளவற்ற பக்தி அல்லவா? மயர்வற மதிநலம் அருளப் பெற்ற நம்மாழ்வார் அருளியுள்ள திருவாய்மொழியில்,

"அடியார் அடியார்தம்
அடியார் அடியார்தமக்கு
அடியார் அடியார்தம்
அடியார் அடியார்களே."[1]

என்று பாகவத சேஷசத்துவாதிசயத்தைப் பேசுவது பகவத் சேஷத்துவத்தின்[2] உறைப்பையே பேசினபடியாகும் என்பது நாம் அறியவேண்டியதொன்றாகும். ஆழ்வாரும் தம்மை,

---

1. திருவாய் 3.7 : 10

2. சேஷத்துவம்-அடிமை நிலை. இதன் எதிர்ப்பதம் சேஷித்துவம்; அதாவது தலைமை நிலை.

"நேர்பட்ட நிறைமூ வுலகுக்கும்
நாயகனதன அடிமை
நேர்பட்ட தொண்டாதொண்டர் தொண்டர்
தொண்டன் சடகோபன்"[3]

என்று தம்மைச் சொல்லிக் கொண்டிருப்பதும் இதனாலே யன்றோ?

'ஓம் நமோ நாராயணாய' என்னும் திருமந்திரத்தில் அகங்காரமும் மமகாரமும் நீங்கப் பெற்று பகவத் சேஷத்துவம் உள்ளபடி பிரகாசிப்பது 'நமஸ்ஸிலே' என்று சாத்திரங்கள் பகரும். அந்த பகவத் சேஷத்துவத்தின் எல்லை நிலமான பாகவத சேஷத்துவம் இந்த 'நமஸ்ஸிலே' அநுசந்திக்கப் பெறவேண்டும் என்பதை அவை வற்புறுத்துகின்றன. இந்தப் பாகவத சேஷத்துவம் திருமந்திரத்தினுள் பிரணவத்தின் உள்ளீடான அகாரத்தில் தோன்றும் என்று சிலரும், உகாரத்தில் தோன்றும் என்று சிலரும் சொல்வார்கள். இதனை விளக்குவோம்.

ஒரு பொருள் ஒருவனுக்குச் சொந்தமாக உள்ள தென்று வைத்துக் கொள்வோம். அந்தப் பொருள் அவனுக்கும், அவன் வழிவருவோருக்கும், அநுபவித்தற்கும் விற்றற்கும் பிறருக்குத் தானம் செய்தற்கும் இன்னும் தன் விருப்பத்திற்கேற்பப் பயன்படுத்திக் கொள்ளற்கும் உரித்தாக இருக்கும்போதுதான் அஃது அவனுடைய சொந்த சொத்து எனக் கூறுவதற்கு இடம் தரும். அதைப் போலவே, பகவானுக்கு உடைமைப் பொருளாக இருக்கும் சீவன், அப்பகவானும் அவன் சம்பந்தம் பெற்ற பாகவதரும் அநுபவிக்கவும் தங்கள் இச்சைக்கேற்ப விநியோகம் கொள்ளவும் தகுதியுடையனா யிருக்கும் நிலையில்தான் சேஷத்துவ பூர்த்தி பெற்றவனா

3. திருவாய் 8.9 : 11
4. முமுட்சுப்படி-90

கின்றான். இவ்வாறு பாகவத சேஷத்துவம் பகவத சேஷத்துவத்தைச் சொல்லும் அகாரத்தில் புணர்ந்து கெட்ட வேற்றுமையில் கிடைக்கும்.

இனி, உகாரத்தில் பாகவத சேஷத்துவம் கிடைக்கும் விதத்தை விளக்குவோம். 'நறுமணம்' என்ற சொற்றொடரை எடுத்துக் கொள்வோம். இதில் 'நறு', 'மணம்' என்ற இரு சொற்கள் உள்ளன. இவற்றுள் மணம் போன்றது சீவனுடைய சேஷத்துவம். அம்மணத்தின் தன்மையான நன்மையைப் போன்றது சேஷத்துவத்தின் அநந்யார்ஹத்துவம்[5]. அதைக் குறிப்பதே 'உ' என்னும் எழுத்து. இச் சேஷத்துவத்தைத் தெரிவிப்பது அகாரத்தில் புணர்ந்து கெட்ட வேற்றுமை. அதன் தன்மையான அநந்யார்ஹத்துவத்தைத் தெரிவிப்பது உகாரம். அநந்யார்ஹ சேஷத்துவம் என்பது பிறருக்கு உரியனாயிருத்தல் அன்றி, ஈசுவரனுக்கே உரியனாயிருத்தல். இங்குப் பகவத் சம்பந்தம் பெற்ற பாகவதர்களைக் கழித்து, மற்றவர்களைப் பிறர் எனக்கொள்வது பொருத்தமுடைத்து. எனவே, இவ்வாறு பாகவத சேஷத்துவம் வரையிலுமுள்ள பகவத் சேஷத்துவத்தின் அநந்யார்ஹத்துவத்தை உகாரம் தெரிவிப்பதாகத் தோன்றுவதால் இப்பாகவத சேஷத்துவம் உகாரத்தில் கிடைக்கும் பொருள் என்பது சிலரது கருத்தாகும்.

திருமந்திரத்திற்கு முக்கியமான பொருள் பாகவத சேஷத்துவமே என்பதைத் திருமங்கையாழ்வார் பாசுரத்தாலும் அறியலாம். "மற்றெல்லாம் பேசிலும் நின் திருவெட்டெழுத்தும் கற்று உற்றதும் உன்னடியார்க்கு அடிமை"[6] என்ற பாசுரப் பகுதியைக் காண்க. இதனை மேலும் தெளிவுபடுத்துவோம். உலகில் தமக்குத் தொண்டு

---

5. அநந்யார்ஹத்துவம் — பிறருக்கு உரியனல்லாதிருத்தல்; அதாவது ஈசுவரனுக்கே உரித்தாயிருத்தல்.

6. பெரி. திரு 8. 10; 3.

புரிவதைக் காட்டிலும், தம் குழந்தைகளுக்கு அன்புடன் தொழில் புரியும் போதல்லவா பெற்றோர் மிகவும் மகிழ்ச்சியடைகின்றனர்? அங்ஙனமே, ஈசுவரனும் தன் அடியார்க்குத் தொண்டு புரியும்போதுதான் பூரணமான முகமலர்ச்சியை அடைகின்றான். இதனைத் திருமுருக கிருபானந்தவாரியார் கூறும் உவமையைத் துணை கொண்டும் விளக்கலாம். கடிதங்களை நேரே அஞ்சல் நிலையங்களில் சேர்த்தால் வீதிகளில் உள்ள அஞ்சல் பெட்டிக்கு வருவதில்லை. ஆனால், வீதிகளில் உள்ள அஞ்சல் பெட்டிகளில் இடும் கடிதங்கள் அஞ்சல் நிலையத்தை அடையும். அஞ்சல் நிலையும் திருக்கோயிலில் உள்ள இறைவன்; அஞ்சல் பெட்டிகள் அடியார்கள்; பாகவதர்கள். ஆகவே இறைவனுக்கு அடிமை செய்வதை விட பாகவதர்கட்கு அடிமை செய்வது உயர்ந்தது என்பது தெளிவாகின்றதல்லவா?[7]

இந்த எண்ணங்கள் நம் மனத்தில் குமிழியிட்ட வண்ணம் ஆழ்வார் திருநகரியிலிருந்து கிழக்கே இரண்டு கல் தொலைவிலுள்ள "திருக்கோளூர்" என்ற திவ்விய தேசத்திற்குப் புறப்படச் சித்தமாகின்றோம். திருக்கோளூர் நவதிருப்பதிகளுள் ஒன்பதாவது. இஃது ஆழ்வார் திருநகரிக்குக் கிழக்கே இரண்டு கல் தொலைவிலும், திருப்பேரைக்கு மேற்கே இரண்டு கல் தொலைவிலும் உள்ளது. இதுவும் தண்பொருநைத் தென்கரையில் உள்ளது. நம்மாழ்வாரின் அந்தரங்க சீடரான மதுரகவி யாழ்வார் அவதரித்த திவ்வியதேசம். இது வரலாறு: தீர்த்த யாத்திரை திவ்வியதேச யாத்திரைகளில் திருவுள்ள முடைய மதுரகவியாழ்வார் பல திருப்பதிகளைச் சேவித்து வடநாட்டுத் திருப்பதிகளைச் சேவித்துக் கொண்டு திருவயோத்தியை அடைந்தார். அந்தப் பரிசுத்த பூமியில் வாசம் செய்யக் கருதிச் சில காலம் அங்கு வாழ்ந்து வரலாயினர்.

7. குமுதம்—21-11-74 இதழ்.

அக்காலத்தில் ஒருநாள் இரவில் இவர் திருக்கோளூர் எம்பெருமானைத் திசை நோக்கித் தொழக் கருதியவர் தென் திசை நோக்கிக் கண் செலுத்தினார். அப்பக்கத்தில் வானுறவளர்ந்து விளங்கும் திவ்வியமான பேரொளியைக் கண்டு வியப்புற்றார். இப்பேரொளி இங்ஙனமே இரண்டு மூன்று நாட்களிலும் தொடர்ந்து காணப்பெற்றது; அச்சுடர்த் திரள் முச்சுடரொளியிலும் மிக்குத் திகழ்ந்தது. அதனை அருகிற்சென்று பார்த்துத் தெளியக் கருதினார் மதுரகவி. அப்பெருஞ்சோதியைக் குறியாகக் கொண்டு அதிவிரைவாக நெடுவழி கடந்து ஆழ்வார் திருநகரியை அடைந்தார். அடைந்தவர் அந்நகரில் அவதரித்தருளியுள்ள யோகநிலையிலிருந்து நம்மாழ்வாரின் திருமேனி விளக்கத்தைச் சேவித்து இதுவே அத்தொலைதூரம் பிரகாசித்த சோதி என்பதை அறிந்து வியந்தார். அவருடைய திருமேனியும் தான் கேள்வியுற்றிருந்தபடியே பிரகிருதி சம்பந்தமற்றிருப்பதையும் கண்ணுற்றார்.

வியப்புடன் நின்ற மதுரகவி அத்திருமேனிக்குக் கட்புலன் உண்டோ என்று சோதிக்கும் பொருட்டு அத்திருமேனியின் முன்னிலையில் ஒரு சிறு கல்லை எடுத்துப் போட்டார். கல் விழுந்த ஒலியைக்கேட்ட நம்மாழ்வார் தம் திருக்கண்களை விழித்துப் பார்த்தருளினார். உடனே மதுரகவிகள் வாய்ப்புலனும் உண்டோ என்று எண்ணி,

> **''செற்றதின் வயிற்றிலே சிறியது**
> **பிறந்தால் எத்தைத் தின்று எங்கே கிடக்கும்!''**
>
> [செற்றது-அசேதமான உடல்; சிறியது-அணுவளவான சீவான்மா.]

என்று விண்ணப்பித்தார். நம்மாழ்வாரும்,

> **''அத்தைத் தின்று அங்கே கிடக்கும்''**

[அத்தை-உடலைச்சார்ந்த சுக துக்கங்களை; தின்று-அநுபவித்துக் கொண்டு; அங்கே-அந்த உடலிலேயே.]

என்று வீடையருளி செய்தார். அதுகேட்டு மதுரகவிகள் மிக மகிழ்ந்து நம்மாழ்வாரின் ஞானத்தைக் கொண்டாடி இவரை யடைந்து தான் கடைத்தேறக் கருதி இவர் திருவடிகளில் தாளும் தடக்கையும் கூப்பி விழுந்து தண்டனிட்டு அவரையே ஞானகுருவாகக் கொண்டார்.

அதுமுதல், மதுரகவிகள் தான் ஆழ்வாரிடம் உபதேசம் பெற்ற திவ்வியப் பிரபந்தங்களைக் கைத்தாளமெடுத்துப் பண்ணிசையோடு பாராயணம் செய்துக் கொண்டு திருக்கூர் நம்பிக்கு முதல் சீடராய், பரதாழ்வானுக்குப் பணிவிடை புரிந்தொழுகின சத்துருக் காழ்வானைப் போல், பகவத் பக்தியைவிட பாகவத பக்தியையே சிறப்பாக அநுட்டித்துக்கொண்டு வாழ்வாராயினர். அப்பொழுது ஆழ்வார்விஷயமாகக் "கண்ணிநுண் சிறுத்தாம்பு" என்ற திவ்வியப் பிரபந்தத்தையும் பாடியருளினார்.

"தேவுமற்று அறியேன் குருகூர் நம்பி
பாவின் இன்னிசை பாடித் திரிவேனே"[8]

என்ற பாசுரப் பகுதியினால் மதுரகவிகளின் வாழ்க்கையை ஒருவாறு அறியலாம். பரமபாகவதரான ஆழ்வாரையே அன்னையாயும் அத்தனாயும் தெய்வமாயும் கருதிக் கைங்கரியம் புரிந்துவந்த மதுரகவிகளின் பிரபந்தம் வைணவர்களால் 'நமப்பதத்தின்' பொருளைக் காட்டுகிறதாகப் போற்றப்படுகின்றது.

இங்ஙனம் மதுரகவிகளைப் பற்றிச் சிந்தித்த வண்ணம் 'நல் வளஞ்சேர் பழனத் திருக்கோளூரை'[9] நோக்கி வருகின்றோம். வருங்கால் இத்திவ்விய தேசம் பற்றிய நம்மாழ்வாரின் திருவாய்மொழியும் நம்மனத்தில் குமிழியிடத் தொடங்குகின்றது. இத்திருவாய்மொழி தாய்ப்

8. கண்ணிநுண்-2
9. திருவாய் 6. 7 : 2

பாசுரமாக அமைந்துள்ளது. திருக்கோளூர் சென்று அவ்விடத்து எம்பெருமானுடன் கலந்து அநுபவிக்க வேண்டும் என்ற ஆழ்வாருடைய விருப்பம் இத்திருவாய் மொழியாகப் பரிணமித்துள்ளது.

பராங்குச நாயகியின் படுக்கையில் அவளுடன் படுத்துக்கொண்டு அவள் விரகதாபத்துக்கு உபசாரங்கள் பண்ணிக்கொண்டிருந்த திருத்தாயார் படுக்கையைத் தடவிப் பார்க்கின்றபோது, தன் மகள் காணப் பெற்றிலள் தன் மகளுக்குத் திருக்கோளூர் எம்பெருமானிடத்திலிருந்த கழிபெருங்காதலினை (வியா மோஹம்) நன்கு அறிந்தவளாதலின் அப்பதிக்கே தன் மகள் சென்றிருத்தல் வேண்டுமென்று அறுதியிட்டுரைப்பதாகச் செல்கின்றது இத் திருவாய்மொழி. தனியே சென்ற தன் மகளின் போக்கை நினைந்து கவல்கின்றாள் திருத்தாயார்.

பெரிய திருமொழியில் வயலாலி மணவாளன் பரகால நாயகியின் கையைப் பிடித்துக்கொண்டு போகிற நிலையைக் கண்டு திருத்தாயார் பேசுகின்றதாகவுள்ள "கள்வன் கொல்யானறியேன்"[10] என்ற திருமொழி இத் திருவாய் மொழியுடன் ஒருபுடை ஒத்திருப்பதை எண்ணுகின்றோம். அகப் பொருள் நூலார் இதனை 'உடன் போக்கு' என்று வழங்குவதையும் சிந்திக்கின்றோம்.

ஆளவந்தார் கோஷ்டியிலே நிகழ்ந்த ஓர் இதிகாசமும் நம் நினைவிற்கு வருகின்றது. 'உண்ணுஞ் சோற்றிற்' பிராட்டிக்கு அஞ்ச வேண்டுவது அதிகமோ, 'கள்வன் கொல்லிற்' பிராட்டிக்கு அஞ்ச வேண்டுவது அதிகமோ என்ற ஆராய்ச்சி நிகழ்ந்ததாம். அவண் குழுமியிருந்த முதலிகள் "கள்வன் கொல்லில்' இருவராய்ப் போனமை சொல்லுகிறது; 'உண்ணும் சோற்றில்' மகள் தனியே போனமை சொல்லுகிறது. இருவராய்ப் போனவர்களுக்கு

10. பெரி. திரு 3.7:3

வயிறெரிய வேண்டுவது அத்தனை அவசியமன்றே; தனியே வழி போனவளுக்கன்றோ அதிகம் வயிறெரிய வேண்டுவது!' என்றார்களாம். அப்பொழுது ஆளவந்தார், "அங்ஙனன்று காண்மின். தனியே போனவளைப்பற்றி ஒரு பயமில்லை; இருவராய்ப் போனவிடத்திற்குத்தான் வயிறெரிய வேணும்" என்று அருளிச் செய்தாராம். இதன் கருத்தை விளக்குவோம். தனியே போனவள் தான் கருதிச் செல்லும் இடத்திற்கு யாதொரு இடையூறுமின்றிச் சென்று சேர்ந்திடுவள். இருவரும் செல்லுங்கால் ஒருவரோடொருவர் கொண்டுள்ள காதலுக்கு ஊற்றுவாயாகையாலே ஒருவரால் ஒருவர் மயங்கி விழுந்து 'என்னாகுமோ! என்னாகுமோ" என்று வயிறெரிய வேண்டியிருக்கும் என்பதாகும்.

இத் திருவாய்மொழியின் இன்சுவைமிக்க ஈட்டின் உரை: 'ஆனாலும் எங்கேனும் போகிலும் இருவராயல்லதிராது அங்கு. தனியே போன இவள் என்படுகிறாளோ என்று மிகவும் நொந்து கூப்பிடுகின்றாள் இவளுடைய திருத்தாயார்.' இது சுவைத்து மகிழத் தக்கது.

திருத்தாயார் இவ்வாறு பேசுகின்றாள்:

"உண்ணும் சோறு பருகுநீர்
தின்னும்வெற் றிலையுமெல்லாம்
கண்ணன் எம்பெருமான் என்றென்
றேகண்கள் நீர்மல்கி
மண்ணினுள் அவன்சீர் வளமிக்
கவன்ஊர் வினவி
திண்ணம் என்இள மான்புகு
ஊர்திருக் கோளூரே." 11

[வினவி-விசாரித்து; புகும்ஊர்-சேரந்த இடம்.]

முன்னிரண்டடிகளில் ஆழ்வாருடைய உண்மையான தன்மை கூறப்படுகின்றது. சோறு, நீர் வெற்றிலை

11. திருவாய் 6.7:1

இவற்றின் அடைமொழிகளின் நயம் உய்த்துணரத்தக்கது. வயிறு நிறைய உண்டவனுக்கு அறுசுவை உண்டி கிடைப் பினும் அஃது உண்ணும் சோறாகாது; கங்கைக்கரையில் திரிபவனுககுக் கிணற்று நீர் பருகு நீராகாது. ஆகவே. பெரும் பசியனுக்குக் கிடைத்த சோறுதான் உண்ணும் சோறு; பெருவிடாயனுக்குக் கிடைத்த நீர்தான் பருகு நீர் என்று கொள்ள வேண்டும். பெரும் டசியனுக்குச் சோற்றி லும் விடாய்த்தவனுக்கு நீரிலும் எப்படிப்பட்ட அவா இருக்குமோ அப்படிப்பட்ட அவா ஆழ்வாருக்கு பகவத் விஷயத்தில் இருந்தது என்பது கருத்து.

தனக்கு 'எல்லாம் கண்ணன்' என்று பலகால் சொல்லிக் கொண்டு நீர்மல்கு கண்ணினராயிருப்பதே ஆழ்வாருடைய இயல்பாகும். இப்படிப்பட்ட பராங்குச நாயகி "அப் பெருமானுடைய திருக்குணங்களும் திவ்விய மான ஐசுவரியமும மிக்கு விளங்கும் திருக்கோளூர் எங்கு உளது? எவ்வளவு தூரம் நடக்க வேணும்?" என்று வினவிக்கொண்டே திருக்கோளூர்க்கே சென்று சேர்ந் திருப்பாள். "வேறு எங்கும் போவதற்குக் காரணம் இல்லை. இது திண்ணம்" என்கின்றாள் திருத்தாயார்.

'புகுமூர்' என்ற விடத்து ஈடு: "காட்டுத் தீயிலே அகப்பட்டவன் பொய்கையும் பொழிலும் தேடிப் புகுமாப் போலே சம்சாரமாகிற பாலை நிலத்தில் காட்டுத் தீயிலே அகப்பட்டவனுக்கு உகந்தருளின நிலங்களானவை பொய்கையும் பொழிலும் போலேயிறே, 'புகுமூர்' என் கையாலே புக்கார் போகுமூர் அன்றென்கை." இன்சுவை மிக்க இதனை எண்ணி மகிழ்க. எம்பெருமானார் திவ்விய தேச யாத்திரையாக எழுந்தருளுகையில் திருக்கோளூரை நோக்கிச் செல்லுங்கால், அப்போது அவ்வூரினின்றும் வெளியேறுகின்றாளோர் அம்மையாரைக் கண்டார். அவரைப் பார்த்து 'எங்கு நின்றும் புறப்பட்டபடி?" என்று வினவ, அந்த அம்மையார் 'திருக்கோளூரில் நின்றும்'

என்று பதிலுரைத்தார். அது கேட்டு யதிராசர் 'அவ்வூரில் புக்க பெண்களும் வெளியே போகக் கடவராயிருப்பார் களோ?'' என்றாராம். 'புகுமூர்' என்ற சொல்லின் சுவடறிந்து அருளிச் செய்த ஆசாரியரின் வினாவின் உட்பொருளைச் சிந்தித்து மகிழ்க.

அடுத்து, பராங்குச நாயகியின் விளையாடு கருவியாக அமைந்த பூவைகளை நோக்கி, "என் பக்கலில் என் மகள் நசையற்று ஒழிந்தாளாகிலும் உங்களை நினைத்தாவது இங்கு மீண்டு வரக் கூடுமோ? சொல்லுங்கள்'' என்கின்றார் திருத்தாயார். "இங்கிருந்த போது தன்னைப் போலவே தன்னைச் சேர்ந்த எல்லோரையும் எம்பெருமானுடைய திருநாமங்களையும் சின்னங்களையும் இடையறாது சொல்லிக் கொண்டிருக்கும்படி செய்தவளல்லவா என் மகள்? இங்கே ஆட்கள் இலர் என்ற குறையால், அங்குப் போனாளா?'' என்கின்றாள்.[12]

மேலும் பேசுகின்றாள்: "பூவைகள், பைங்கிளிகள், சிறு சோறு சமைக்கும் பானைகள், பூவிடும் குடலைகள் முதலானவற்றைக் கண்டால் விளையாடும் இன்பம் (மகிழ்ச்சி) பெற வேண்டிய பருவத்திலும் எம்பெருமான் திருநாமத்தையே சொல்லிப் பெறுகின்றவள் அல்லவா என் மகள்?'' என்கின்றாள். "அங்ஙனம் போன பின்பு இனிச் செய்யலாவதொன்றில்லை. போன இடத்திலாவது நன்றாக இருக்க வேண்டுமே. ஒரு பேச்சுப் பேச வாய் எடுத்தாலும், வாய்விட்டுப் பேசமுடியாதபடி உதடு நெளிக்குமே. கண்ணநீர் வெள்ளமிட்டுப் பெருகுமே. இப்படி என்ன பாடுபடுகின்றாளோ?'' என்று தடுமாற்றம் அடைகின்றாள்.[13]

தன் மகள் பிரிந்து சென்ற செய்தியறிந்த வம்பளக்கும் இயல்புடைய ஊர்ப்பெண்கள் உகப்பார்களோ? அன்றி வெறுப்பார்களோ? என்று ஐயுறும் திருத்

12 திருவாய் 6.7:2 13. திருவாய் 6.7:3

தாயார்,[14] "தன் வயதுக்குரிய விளையாட்டிலும் பொருந்தாத என் மகள் எம்பெருமானுடைய ஊரில் சோலைகளையும் தடாகங்களையும் அவனுடைய திருக்கோயிலையும் கண்டு தன் நெஞ்சு குளிரும்படி எங்ஙனம் களித்திருக்கின்றாளோ? அறிகிலேன்" என்று தளர்கின்றாள்.[15]

தன் மகள் நிலையைக் குறித்துத் திருத்தாயார் இங்ஙனம் ஊகிக்கின்றாள்: "துணையின்றி வருந்திச் சென்றவள் தன்னைச் சிறப்பாகக் கவர்ந்த எம்பெருமானின் திருக்கண்களை முந்துற முன்னம் நோக்குவள். அர்ச்சாவதார சமாதியையும் கடந்து விம்மி வெளி விழுகின்ற, தெளிவாகாத, இனிய புன்முறுவல் பொங்கு மிடமான செவ்வாயைப் பிறகு காண்பள். இந்த இரண்டு திவ்விய அவயவங்களையும் கண்டவள் பெருவெள்ளத்தில் இளகின கரைபோலே உடைகுலைப்பட்டு நைந்து கொண்டிருப்பள்"[16] "நீர் நிரம்பிய கண்களையும் கழிபெருங் காதலையுடைய நெஞ்சையும் உடைய என் மகள். அல்லும் பகலும் 'நெடுமாலே!' என்று கூவிக்கொண்டிருந்தாள். இப்போது ஒடுங்கியொடுங்கி அசைந்து நடந்து தளர்ந்த நிலையில் அத்திருக்கோளூர்க்கு எப்படிப்போய்ச் சேர்ந்திருப்பாளோ?" என மனங் கவல்கின்றாள்.[17]

தன் மகள் வழியில் நடந்து செல்லும் நிலையை, அவள் மேனியின் மெலிவை, ஈரநெஞ்சினை, கண்ண நீர் பெருகும் காட்சியை அநுசந்திக்கும் திருத்தாயாரின் வாக்கு இது:

"ஒசிந்த நுண்ணிடை மேல்கையை
வைத்து நொந்துநொந்து
கசிந்த நெஞ்சின ளாய்க்கண்ண
நீர்துளும்பச் செல்லுங்கொல்?"[18]

---

14. திருவாய் 6.7:4　　15. ஷை 6.7:5
16. ஷை 6.7:6　　17. ஷை 6.7:7
18. ஷை 6.7:8

[ஒசிந்த-துவண்ட; நொந்து-நோவு பெற்று; கசிந்த-ஈரமான; துளும்ப-பெருகும்படி]

வழி நடக்கும்போது சிறிதும் சிரமமின்றி நடந்து செல்பவர்கள் கையை வீசிக்கொண்டுபோவர், சிரமத்தில் இளைத்துச் செல்பவர்கள் இடுப்பின்மீது கையை ஊன்ற வைத்துக்கொண்டு சிரமம் தெளிவாகப் புலனாகும்படி செல்வர். உலகிற்காணும் இந்த இயல்பினை எண்ணுகின்றாள் திருத்தாயார். "திருக்கோளூர் எம்பெருமான் மீது கழிபெருங் காதல் கொண்டவள் ஊராரின் பழிமொழிகட்கும் அஞ்சாமல் எம்மையும் ஒரு பொருளாக மதியாமல் சென்றனளே."[19] என்கின்றாள். இங்ஙனமெல்லாம் தன்னருகிலுள்ளாரைப் பார்த்துச் சொல்லி அலமந்த திருத்தாயார் இறுதியாக ஆகாயத்தை நோக்கி, "அந்தோ! திருக்கோளூர்க்குப் போனவள் எம்பெருமானைச் சேவித்துத் திரும்பலாகாதோ? அவ்விடத்திலேயே மண்டி விட்டாளே! அவண் உறையும் செந்தாமரைக் கண்ணனை ஒரு கணநேரமும் விட்டுப் பிரியாத நிலையிலுள்ளாளே! இக்குடிக்கு வரும் பெரும் பழியையும் நினையாமல் கிடக்கின்றாளே!"[20] என்கின்றாள்.

இங்ஙனம் இத் திவ்விய தேசம்பற்றிய திருவாய்மொழியில் ஆழங்கால்பட்ட வண்ணம் திருக்கோயிலை அடைகின்றோம். கிடந்த திருக்கோலத்தில் புயங்க சயனம்கொண்டு கிழக்கு நோக்கிய திருமுக மண்டலத்துடன் சேவை சாதிக்கும் **வைத்த மாநிதியையும் கோளூர் வல்லி நாச்சியாரையும்** வணங்குகின்றோம். திருவாய்மொழி முழுவதையும் சந்நிதியில் மிடற்றொலியாக ஓதி உளங்கரைகின்றோம். இத்திருவாய்மொழியை,

19. ஷை 6.7:9    20. ஷை 6.7:10

''சித்தம் வைத்து ரைப்பார்
திகழ்பொன் னுலகாள்வரே.''[21]

[பொன் உலகு-பரமபதம்.]

என்ற பலனையும் சிந்திக்கின்றோம். இந்நிலையில் திவ்விய கவியின் பாசுரமும் நம் நினைவிற்கு வருகின்றது.

''பிறப்புஅற்று மூப்புப்
பிணியற்று நாளும்
இறப்புஅற்று வாழ
இருப்பீர்—புறப்பற்றுத்
தள்ளுங்கோள் ஊர்அரவில்
தாமோ தரன்பள்ளி
கொள்ளுங்கோ ளூர்மருவுங்
கோள்.''[22]

[அற்று-ஒழிந்து; மூப்பு-கிழத்தனம்; பிணி-நோய்; அரவு-பாம்பு; தாமோதரன்-திருமால்; மருவுங்கோள்-சென்று சேருங்கள்.]

என்ற பாசுரத்தையும் ஓதுகின்றோம்.

இத்தலத்து எம்பெருமானின் குணம் பற்றிய ஆசாரிய ஹிருதய சூத்திரத்தையும் எண்ணுகின்றோம்.

''கைம்முதல் இழந்தார் உண்ணும்
நிதியின் ஆபத்சகத்வம், புகும்ஊரிலே
சம்ருத்தம்[23]

[ஆபத்சகத்வம்-ஆபத்துக்குதவுலாகிற பெருங்குணம்; சம்ருத்தம்-நிறைவு]

திருக்கோளூர் இறைவனுக்கு வைத்த மாநிதி என்பது திருப்பெயராதலாலும், நிதி ஆபத்துக்கு உதவுமாத

---

21. திருவாய் 6.7:11
22. நூற். திருப். அந்-58
23. ஆசா. ஹிரு-169

லாலும், மேல் திருப்பதிகத்தால் (6.6) இழந்தமை கூறி[24] 'உண்ணும் சோறு' என்று இத் திருப்பதிகம் தொடங்குவதனாலும் இத் திவ்விய தேசத்தில் ஆபத் சகத்வம் (ஆபத்துக்குதவுதலாகிற பெருங்குணம்) விளங்கும் என்கிறார். கைம் முதல் இல்லாதவர்கள் எடுத்து உண்ணும் தகையதாக இருப்பது நிதி ஆகையால், இந்த வைத்த மாநிதியும், மேல் திருப்பதிகத்தில் 'ஏலக்குழலி இழத்தது சங்கே' (6.6:1) என்று தொடங்கி 'கற்புடையாட்டி இழந்தது கட்டே' (6.6:10) என்று முடிக்கையாலே போலி உபாய உபயேங்கள் எல்லாம் தன்னடையே விட்டுக் கழிந்தமை பெறப்படும். இத்திருப்பதிகத்தில் தொடங்கும் முதல் திருப்பாசுரம் 'உண்ணும் சோறு' என்பதாகையாலே 'உண்ணும் நிதி' என்கிறார். 'இளமான் புகுமூர் திருக்கோளூரே' (6.7:1) என்ற திருப்பாசுரத்தைத் திருவுள்ளம் பற்றிப் 'புகுமூர்' என்கிறார். 'செல்வ மல்கியவன் கிடந்த திருக்கோளூர்' (6.7:4) என்ற திருப்பாசுரப் பகுதியைத் திருவுள்ளம்பற்றிச் 'சம்ருத்தம்' என்கின்றார்.

இங்ஙனம் ஆழங்கால்பட்ட நிலையில் திருக் கோயிலின் உட்புறம் திருவாயிலின் அருகில் அமர்ந்து எம்பெருமான் திருப்பெயரையும் திவ்விய தேசத்துத் திருப் பெயரையும் பற்றிய சிந்தனையில் ஆழ்கின்றோம். புதைத்து வைக்கப்பெறும் பொருள் 'நிதி' எனப்படும். தைத்ரீய உபநிடதத்தினால் எம்பெருமான் நிதியாக அறியப் படுவன். நிலத்தினுள் புதைத்து வைத்து ஆள வேண்டிதா யிருக்கும் நாட்டிலுள்ள நிதி; எம்பெருமானாகின்ற நிதி அங்ஙனமின்றி நெஞ்சிலே புதைத்து ஆளத்தக்கது என்ற வேற்றுமை கண்டு மகிழ்த்தக்கது.

நிதியானது தன்னையுடையவர்களை இரவும் பகலும் கண்ணுறங்க வொட்டாது; எந்த நேரத்தில் யார் கொள்ளை

24. இழந்தது சங்கே (6.6:1) இது போன்றவை

கொள்வரோ என்ற அச்சத்தால் துஞ்சா திருப்பர் நிதியுடையார். எம்பெருமானும் அப்படியே; 'கண்ணாரக் கண்டு, கழிவதோர் காதல் உற்றார்க்கும் உண்டோ கண்கள் துஞ்சுதலே'[25]. காண்பதற்கு முன்பும் உறக்கம் இல்லை; கண்டாலும் காதல் மிகுதியால் உறங்குவதில்லை. நிதியானது 'சித்தாஞ்சனம்' அணிந்த சில பாக்கியசாலிகட்கே கிடைக்கும்; எம்பெருமானும் 'பக்தி சித்தாஞ்சனம்' பெற்ற ஆழ்வார்கள் போன்ற சில பாக்கியவான்களுக்கே கிடைப்பன்.

நிதியுடையவன் மார்பு நெறிப்பன்; எம்பெருமானைக் கைக்கொண்டவர்களும் 'எனக்கு ஆரும் நிகரில்லையே',[26] 'மாறுளதோ இம் மண்ணின் மிசையே',[27] 'இல்லையெனக் கெதிரில்லையெனக் கெதிரில்லையெனக் கெதிரே'[28] என்று செருக்கிப் பேசுவார்கள். நிதி படைத்தவனை உலக மெல்லாம் போற்றிப் புகழும். எம்பெருமானைக் கைக் கொண்டவர்களையும் அறிஞர் புகழ்வர்.

நிதியை இழந்தவன் கதறிக்கதறி யழுவன்; எம்பெருமானை இழந்தவனும் அப்படியே. சீராமனாகிய வைத்த மாநிதியை இழந்த பரதாழ்வான் சபையில் கதறியழுதானன்றோ? 'பழுதே பல பகலும் போயின என்று அஞ்சி, அழுதேன்',[29] 'இன்பத்தை இழந்த பாவியேன் எனதாவி நில்லாதே',[30] 'எழில்கொள் நின் திருக்கண்ணின் நோக்கந் தன்னையும் இழந்தேன் இழந்தேனே',[31] 'உன்னைக் காண்பான் நான் அலம்பு ஆய் ஆகாயத்தை நோக்கி யழுவன்',[32] 'என் சொல்லிப் புலம்புவனே',[33] என்று இப்படியெல்லாம் கதறியழுவார்கள்.

25. திருவிருத்—97 26. இராமாநுச. நூற்—47
27. திருவாய் 6. 4:9 28. பெருந் தொகை—1838
29. முத. திருவந் 16 30. பெரு. திரு 7:4
31. பெரு. திரு 7:7 32. திருவாய் 5. 8:4
33. திருவிருத்—86

எம்பெருமானுடைய சிந்தனையை இழந்து ஒரு கணப் பொழுது கழியப்பெற்றாலும் கள்வர் எல்லாச் சொத்து களையும் கொள்ளை கொண்டால் எப்படிக் கதறி அழக் கூடுமோ அப்படிக் கதறி அழவேண்டும் என்பர் அறிவுடையோர்.

இங்ஙனம் எம்பெருமான் திருப்பெயரில் ஆழங்கால் பட்ட நம் மனம் ஊர்ப்பெயரை எண்ணுகின்றது. நவ நிதிகள் இங்கு ஒளித்துக்கொண்டுள்ளன என்று அதருமம் குபேரனுக்குக் கோள் சொல்லிய இடமாதல் பற்றி இத்திருத்தலம் 'திருக்கோளூர்' என்ற திருப்பெயரால் வழங்குகின்றது என்ற புராண வரலாற்றையும் அறிகின்றோம். இந்தச் செய்திகளை அறிந்த நிலையில் திருப்பேரை என்னும் திவ்விய தேசத்திற்குப் புறப்படு கின்றோம்.

# 11. திருப்பேரெயில் மகரநெடுங் குழைக்காதன்

திருமாலுக்கு அடிமை செய்தலை வைணவ சமயத்தின் முடிந்த முடிபான குறிக்கோள் பொருளாகக் கொள்வர் வைணவப் பெருமக்கள்.

> "எற்றைக்கும் ஏழ்ஏழ்
> பிறவிக்கும் உன்தன்னோடு
> உற்றோமே ஆவோம்
> உனக்கேநாம் ஆள்செய்வோம்"[1]

என்ற சூடிக்கொடுத்த சுடர்க்கொடியின் திருவாக்கினால் இதனை அறியலாம். எம்பெருமானிடம் ஈடுபட்டு அவனுக்குத் தொண்டு புரிதலே பிறவியின் பயனாகக் கருது கின்றார் கோதைப் பெருமாட்டி. எத்தனை பிறவிகள் எடுப்பினும் பிறவியின் பயன் கைங்கரியம் புரிதலே யாகும் என்பது அன்னையாரின் முடிந்த முடிபாகும்,

ஈசுவரனிடம் பக்தி செய்து அவனுக்குத் தொண்டு பூண்டொழுகுவார் இருதிறப்படுவர். இவ்வுலகச் செயல் களையேனும் வீட்டின் பேற்றையேனும் கருதி இறைவன் மாட்டு அன்பு செலுத்துவர் ஒருசாரார்; அவன் தத்துவத்தை யும், ஆன்மாவின் உண்மை நிலையினையும் ஆய்ந்து எம்பெருமானுக்கு இன்பத்தை (முகமலர்ச்சியை) ஊட்ட வேண்டும் என்னும் ஒரே எண்ணத்தைக் கொண்டு

1. திருப்—29

அவனிடன் பக்தி செலுத்தி அவனுக்குக் கைங்கரியம்[2] செய்வார் மற்றொரு சாரார். இவற்றுள் பிந்தியவரே உண்மைப் பக்தராவர். இவ்விடத்தில்,

**''கைங்கரியம் தன்னைப் பல சாதனம்**
**ஆக்காதே பலமாக்க வேணும்''[3]**

[சாதனம்-ஒரு பலனைப் பெறுவதற்குக் கருவியாக இருப்பது; பலமாக்குதல்--இறைவனுடைய பிரீதி ஒன்றனையே கருதுதல்-]

என்ற ஸ்ரீவசன பூஷணத்தின் சூத்திரம் கருதத்தக்கது. இதன் கருத்தை,

**''அதாவது, தான் கை ஏலாதே அவனைக் கை**
**ஏற்கப் பண்ணுகை.''[4]**

என்ற அடுத்த சூத்திரத்தால் விளக்குவர் பிள்ளை உலக ஆசிரியர். கைங்கரியம் செய்கின்ற தான் எம்பெருமான் பக்கல் ஒன்றனையும் விரும்பாமல் கைங்கரியம் செய்தலையே ஒரு பயனாகக் கொண்டு கைங்கரியம் கொள்ளுகின்ற அவனைத் தன் நிறைவினைப் பாராமல் விருப்பத்தோடு கூடியவனாய் விரும்பிக் கைக் கொள்ளும்படி பண்ணுதலாகும்.

மேற்கூறிய செயல் மட்டிலும் போதாது, இன்னும் ஒருபடி மேலும் போக வேண்டும் என்று விரும்புகின்றார் அந்த ஆசிரியர்.

---

2. கைங்கரியம்—கிங்கரன் செயல்; கிங்கரனாவான்—தனக்கென்று ஒரு பயனையும் கருதாது, தலைவனது விருப்பின்படியே செய்பவன். எதையும் செய்கிறவன் என்றவாறு.

3. ஸ்ரீ வசன பூஷ—287.

4. ஷை—288.

"கொடுத்துக் கொள்ளாதே. கொண்டதற்குக்
கைக்கூலி கொடுக்க வேணும்.[5]

என்பதால் அந்தப் படியைக் காட்டுகின்றார். தன் கை ஏலாது அவனைக் கை ஏற்கப் பண்ணுதல் மட்டிலும் போதாது. தான் கொடுத்ததனை அவன் ஏற்றுக் கொண்டதற்குப் பிரதி உபகாரமும் செய்ய வேண்டும் என்பது இதன் கருத்து. இதனைத் திருப்பாவைச் செல்வியாரின் செயலால் தெளிவாக்கலாம். திருமாலிருஞ் சோலை நம்பிக்கு நூறு தடாவில் அக்கார அடி சிலையும் நூறு தடாவில் வெண்ணெயையும் நிறைத்து வைக்கின்றார். இவற்றை ஏற்றுக் கொள்ளுமாறு அழகரை இறைஞ்சுகின்றார் அன்னையார். இக் கைங்கரியத்துடன் நிற்கமனமில்லாதவர்,

"இன்றுவந்து இத்தனையும்
அமுதுசெய்திடப் பெறில்,நான்
ஒன்றுநூ றாயிரமாகக் கொடுத்து
பின்னும் ஆளும்செய்வன்
தென்றல் மணங்கமழும்
திருமாலிருஞ் சோலைதன்னுள்
நின்றபிரான் அடியேன்மனத்
தேவந்து நேர்படிலே."[6]

என்று பகர்கின்றார். 'இவற்றை அமுது செய்து அடியாள் இதயத்தில் வந்து தங்கின், இன்னும் நூறாயிரம் தடாக்கள் வெண்ணெயும் அக்கார அடிசிலும் தருவேன். அத்துடன் நின்று விடுவேனோ? இல்லை, இல்லை, ஆழ்வாரைப் போன்று உமக்கு என்றும் எல்லாவிதக் கைங்கரியங்களையும் புரிவேன்' என்கின்றார் இப் பாசுரத்தில்.

வேறு பயனொன்றையும் கருதாமல் கைங்கரியத்தையே பலனாகக் கொண்டு செயலாற்றியவர்கள்

5. ஸ்ரீ வசனபூஷ-289.
6. நாச். திரு 9:7.

வைணவ உலகத்தில் உள்ளனர். அன்புடனும் ஆதரத்துடனும் கண்ணனுக்கு அமுது படைத்து மகிழ்ந்த விதுரர், கண்ணனுக்கும் பலராமனுக்கும் அணிந்து கொள்ள மலர் மாலை கொடுத்த மாலாகாரர், கண்ணனுக்குப் பூசிக் கொள்ளுவதற்காக சந்தனம் கொடுத்த கூனி ஆகியோர் இவர்கள். இவர்களை வைணவ உலகம் நினைந்து போற்றுகின்றது.

இந்த எண்ணங்கள் மனத்தில் குமிழியிட்ட வண்ணம் திருப்பேரெயில் என்ற திவ்விய தேசத்தை நோக்கி வருகின்றோம். அங்ஙனம் வருங்கால் ஊரின் பெயரைப் பற்றி நம் மனம் ஆராயத் தொடங்குகின்றது. இத்திருத்தலம் நெல்லை- திருச்செந்தூர் நெடுஞ்சாலையில் உள்ளது;ஆழ்வார் திருநகரியிலிருந்து மூன்று கல்தொலைவிலுள்ளது. தண் பொருநை யாற்றின் தென் கரையிலுள்ள இத்தலம் நவதிருப்பதிகளுள் ஐந்தாவது. நம்மாழ்வார் மட்டலும் ஒரு பதிகத்தால் இத் திருப்பதி எம்பெருமானை மங்களாசாசனம் செய்துள்ளார். கண்ணனாகவே கருதி ஈடுபட்டு பேசுகின்றார். சில பதிப்புகளிலுள்ள இத் திருவாய் மொழிப் பாசுரங்களில் பாசுரந்தோறும் 'தென் திருப்பேரை' என்று பதிப்பித்திருக்கக் காண்கின்றோம். இத் திருவாய் மொழியின் ஒன்பதாவது பாசுரத்தில் 'தென் திருப்பேரெயில் மாநகரே' என்று அருளிச் செய்யப்பெற்றிருப்பதாலும், வியாக்கியானத்தில் 'திருப்பேரெயிலாகின்ற மாநகரிலே' என்று தெளிவாக அருளிச் செய்யப்பெற்றிருப்பதாலும் ஆழ்வார் திருவுள்ளத்தில் 'திருப்பேரெயில்' என்ற பெயரே நிலை பெற்றிருத்தல் வேண்டும். இத்திருவாய் மொழியின் ஐந்து, ஆறு, ஏழாம் பாசுரங்களில் 'பேரெயிற்கே' என்று மூலம் அமைந்திருந்தும் சிலர் 'பேரையிற்கே' என்று பதிப்பித்திருப்பது தவறு. 'பேரை' என்பது தலத்தின் திருநாமமாயின் அதனுடன் வேற்றுமை உருபு சேருங்கால் 'பேரைக்கு' என்றாகுமேயன்றி 'இன்' சாரியை வந்து 'பேரையிற்கு' என்று ஆகாது. ஐகாரவீற்றதான சொல்லின்

அருகில் 'இன்' சாரியை வருவதில்லை. ஆயினும், 'தென்திருப்பேரை' என்று ஐகாரவீற்றதாக இத் திவ்விய தேசம் வழங்கி வருவதிலும் குற்றமில்லை. நாங்கூரை 'நாங்கை' என்றும், தஞ்சாவூரைத் 'தஞ்சை' என்றும், குடமூக்கைக் 'குடந்தை' என்றும், அழுந்தூரை 'அழுந்தை' என்றும், நெல்வேலியை 'நெல்லை' என்றும், 'அயிந்திர புரத்தை' அயிந்தை என்றும் இங்ஙனம் ஐகாரவிற்ற தாக்கி வழங்கிவரும் முறையிருப்பதனால் திருப்பேரெயிலைத் 'திருப்பேரை' என்று வழங்குவது பொருத்தமே யாகும். எனவே, நூற்றெட்டுத்திருப்பதி யந்தாதியிலும், ஈடு முதலிய வியாக்கியானங்களிலும் 'திருப்பேரை' என்றிருப்பது தவறு இல்லை. ஆகவே, திருத்த வேண்டிய அவசியமும் இல்லை. ஆயினும், திருவாய்மொழி மூலத்தில் மட்டிலும் 'பேரெயில்' என்றிருப்பதே சரியான பாடமாகும். எனினும். இத் திருவாய்மொழியில் ஒன்று. இரண்டு மூன்று, நான்கு எட்டு, பத்தாம் பாசுரங்களில் 'தென்திருப்பேரையில்' என்று பாடங்கொள்வதால் தவறு இல்லை என்பது சிலருடைய கருத்து.

திருப்பேரெயில் என்ற திவ்விய தேசம் நீர்வளம் நிலவளம் மிக்கது. 'தேன்மொய்த்த பூம்பொழில் தன் பணை சூழ் தென்திருப்பேரெயில்'[7] 'கனிந்த பொழில் திருப்பேரெயில்'[8] 'கோலச் செந்நெற்கள் சுவரி வீசும் கூடுபுனல் திருப்பேரெயிற்கே'[9] 'ஏர் வள ஒண்கழனிப் பழனத் தென்திருப்பேரெயில்'[10] என்ற ஆழ்வார் திருவாக்குகளால் இதனை அறியலாம். சிற்றுந்தில் (Van) வந்து கொண்டிருக்கும்பொழுதே இந்தச் சூழ் நிலையை நாம் காண்கின்றோம்.

வண்டி ஊருக்குள் செல்கின்றது. ஊர் பெரிய ஊரும் அன்று; சிற்றூரும் அன்று. ஆழ்வார் காலத்தில் ஒருகால்

7. திருவாய் 7.3:2 8. ஷை 7,3:5
9. ஷை 7.3:6 10. ஷை 7.3:9.

சற்றுப் பெரிய ஊராக இருந்திருக்கலாம். 'சிகரமணி நெடுமாட நீடு தென்திருப்பேரெயில்,[11] என்ற ஆழ்வார் திருவாக்கால் அக் காலத்தில் மாடமாளிகை கூடகோபுரங்கள் கொண்ட ஊராக இருந்திருக்கக்கூடும் என்று ஊகம் செய்யலாம். இன்று அத்தகைய பெரிய மாளிகைகள் தென்படவில்லை.

பக்தி இயக்கம் ஓங்கியிருந்த ஆழ்வார் வாழ்ந்த காலத்தில் சிறந்தோங்கும் திருக்கோயில்கள் உள்ள ஊர்களில் அந்தணர்கள் நான்மறைகளை ஓதும் முழக்கத்திற்கும், நாள்தோறும் நடைபெறும் விழாக்கட்கும், திங்கள்தோறும் நடைபெறும் விழாக்கட்கும், ஆண்டுதோறும் நடைபெறும் பெரு விழாக்கட்கும் குறைவில்லை. உண்மையான கடவுள் பக்தியும் வழிபாடும் அருகி வரும் இக் காலத்திலேயே திருவரங்கம், திருப்பதி போன்ற திவ்விய தேசங்களில் விழாக்கள் தவறாது நடைபெறத்தான் செய்கின்றன. அப்படியிருக்கும் போது அக் காலத்தில் திவ்விய தேசங்களில் எவ்வளவு விழாக்கள் நடைபெற்றிருக்க வேண்டும்? நான்மறை ஓதும் வழக்கம் மலிந்திருந்தது என்பதை 'எங்கும் எழுந்த நல்வேதத்தொலி நின்றோங்கும் தென்திருப் பேரெயில்,[12] 'நான்மறையாளரும் வேள்வி ஓவா......... திருப்பேரெயில்'[13] என்ற ஆழ்வார் திருவாக்குகளால் அறிகின்றோம். இன்னொரு பாசுரத்தில் 'வேத ஒலியும் விழா ஒலியும் பிள்ளைக்குழாம் விளையாட்டொலியும் அறாத்தென்திருப்பேரெயில்' என்று மூன்று ஒலிகளும் கலந்து திகழும் ஊர் என்பதாகவும் குறிப்பிடுகின்றார் ஆழ்வார்.

நாம் வந்த சிற்றுந்தினை தெருவின் ஓர் ஓரத்தில் நிறுத்திவிட்டு திருக்கோயிலை நோக்கி விரைகின்றோம்.

11. திருவாய் 7.3:10. 13. ஷை 7.3:6.
12 ஷை 7.3:4

இத் திருக்கோயிலின் சந்நிதித் தெரு சற்று விசால மானது. சிற்றூரில் சிறு பிள்ளைகள் விளையாடுவதற்கு 'ஆடுகளன்' (Play ground) தனியாக இருக்க முடி யாதல்லவா? இளஞ்சிறார்கள் தெருவினையே ஆடு களனாகப் பயன்படுத்திக் கொண்டு சதா ஏதாவதொரு விளையாட்டில் ஈடுபட்டிருப்பதை இன்னும் சிற்றூர் களில் நாம் காணலாம். இந்தத் திருப்பதியில் சிறார்கள் விளை யாடும் இடம் கோயிலின் திருமுன்பிருக்கும் சந்நிதித் தெருவாகவே அமைந்துள்ளது. இதனைக் கருத்தில் கொண்டே ஆழ்வாரும் 'பிள்ளைக்குழாம் விளையாட் டொலியும் அறாத்திருப்பேரெயில்'[14] என்று சிறப்பித் தனர் போலும்! இத் திருப்பதி எம்பெருமானும் அச் சிறார்கள் ஆடும் விளையாட்டின் சுவையைக் கண்டு களிக்க ஆசைப்பட்டதாக ஓர் ஐதிகம் உண்டு. எதிரே யுள்ள பெரிய திருவடி சந்நிதி அவர்கள் விளையாடும் காட்சியை மறைப்பதாக இருப்பதைக் கண்டு வருந்தி 'கருடா, அப்பால் செல்க!' என்று பெருமாள் வெறுத் துரைத்தாராம். அந்த ஐதிகம் இன்றும் நிலை பெற் றிருப்பதை உணர்த்துவான் வேண்டி கருடன் சந்நிதி சற்று ஒதுக்கமாக இருப்பதை நாம் காணலாம்.

திருக்கோயிலுக்குள் நுழையச் சித்தமாகின்றோம். இத் திருக்கோயில் எம்பெருமான்மீது நம்மாழ்வார் மட்டிலும் ஒரு திருவாய்மொழியால் மங்களா சாசனம் செய்துள்ளார். இத்திருவாய்மொழி மகள் பாசுரமாகச் செல்லுகின்றது. பெண்மை நிலையிருந்து கொண்டு ஆழ்வார்கள் எம்பெருமானை அநுபவிக்கும்பொழுது அவர்கள் தாய், தோழி, மகள் என்ற இம்மூவரில் ஒரு வரின் தன்மையைத் தாம் அடைந்து கூற்றுகள் நிகழ்த் துவர் என்றும், இவற்றிற்குத் தத்துவமும் உண்டு என்றும் விளக்கியுள்ளோம். அவற்றினை அன்பர்கள் அந்த

14. திருவாய் 7.3:1.

இடங்கள் நோக்கி அறிந்து தெளிய வேண்டுகின்றேன்[15] பராங்குச நாயகிக்குத் 'திருப்பேரெயில் எம்பெருமானைக் கிட்டியேதீர்வேன்' என்னும் ஆற்றாமை பிறக்கின்றது. அந்த எம்பெருமானிடம் போக வேண்டுமென்று புறப் படுகின்றாள் ஆழ்வார் நாயகி. தோழிமாரும் தாய்மாரும் அவளைச் சூழ்ந்துகொண்டு, 'உனக்கு அவனிடம் இவ் வளவு ஈடுபாடு ஆகாது; இது நமக்குப் பழியாக முடியும்' என்கின்றனர். 'நீங்கள் தடைசொல்லுகின்ற வற்றால் ஒரு பயனும் உண்டாக மாட்டாது. 'நீங்கள் எனக்கு உரைப்ப தெல்லாம் ஊமையரோடு செவிடர் வார்த்தையாக முடியும்'[16] நான் திருப்பேரெயில் எம் பெருமானால் நெஞ்சு பறியுண்டேன். ஆகவே, நானே போனதாக ஏற்படாமல் நீங்களே என்னை அங்குக் கொண்டு போய்ச் சேர்க்கப் பாருங்கள்' என்று பராங் குசநாயகி அவர்கட்குக் கூறித் தனக்குப் பிறந்த துணிவை அவர்கட்குச் சொல்லுகிறதாகச் செல்லு கின்றது இத் திருவாய்மொழி. பாசுரங்கள் ஒன்றன் பின் ஒன்றாக நமது உள்ளத்தில் குமிழியிடத் தொடங்கு கின்றன.

"வெள்ளைச் சுரிசங்கொடு ஆழி ஏந்தி
தாமரைக் கண்ணன்என் நெஞ்சினூடே
புள்ளைக் கடாகின்ற ஆற்றைக் காணீர்
என்சொல்லிச் சொல்லுகேன் அன்னை மீர்காள்?"[17]

[சுரிதல்—உள்ளே சுழித்திருத்தல்; ஆழி—சக்கரம்; புள்—கருடன். கடாகின்ற ஆறு—நடத்துகின்றபடி]

15, சுப்பு ரெட்டியார், ந : மலைநாட்டுத் திருப்பதிகள் கட்டுரைகள் 7, 8, காண்க. அன்றியும், இதே ஆசிரியர் எழுதியுள்ள "திருவேங்கடமும் தமிழ் இலக்கியமும்" (பாரி நிலைய வெளியீடு) என்ற நூலிலும் பக். (123 – 132)காண்க.

16. நாச். திரு 12:1. 17. திருவாய் 7.3:1

இதில் பராங்குசநாயகி தனது உள்ளத்தினுள்ளே ஒரு பெரிய திருவடித் திருநாள் நடந்து செல்லுகின்ற படியைத் தாய்மாரிடம் பேசுகின்றாள். அவள் பெற்ற இறையநுபவம் நம்மையும் பற்றத் தொடங்குகின்றது. "கங்குலும் பகலும்' (திருவாய் 7.2) என்ற திருவாய் மொழியில் பராங்குசநாயகியின் நிலையைத் திருத் தாயார் கூறியது நமது நினைவுக்கு வருகின்றது. 'சங்கு சக்கரங்கள் என்று கை கூப்பிய'வளாதலாலும், 'தாமரைக்கண் என்றே தளர்'ந்தவளாதலாலும் அந்தத் திவ்வியாயுதங்களை ஏந்திக்கொண்டு இவளுக்குக் காட்சி தருகின்றான் எம்பெருமான். 'வன்காற்று அறைய மறிந்து கிடந்து அலர்ந்த மென்கால் கமலத் தடம்போல் பொலிந்து நின்ற எம்பிரான் தடங் கண்கள்' (திருவிரு. 42) என்று ஒருக்கணித்துக் கடைக் கண்ணால் நோக்கிய திருக்கண்ணழகுடன் காட்சி தந்த விதத்தையும் பேசுகின்றாள் ஆழ்வார் நாயகி. முகில் வண்ண நிறத்துக்குப் பொருத்தமான வெளுப்பையும் சுரியையும் உடைத்தான திருச்சங்கையும், அங்ஙனம் ஒரு விசேடணம் இட்டுச் சொல்ல வேண்டாதபடியான அழகையுடைத்தான திருவாழியையும் ஏந்திய வண்ணம் தாமரைக் கண்கள் பிறழவந்து பெரிய திருவடித் திருத் தோளில் ஏறிச் சாரிகை வந்து தன் நெஞ்சினுள் உலாவு கின்ற எம்பெருமானைக் காணுமாறு அன்னைமார்களை வேண்டுகின்றாள் பராங்குசநாயகி. இவ்விடத்தில் எம் பெருமான் திருமேனிக்கு திவ்விய ஆயுதங்கள் பிரகாச மாகத் திகழ்வதுபோல அவனுடைய ஆன்ம குணங் கட்குத் திருக்கண்கள் பிரகாசமாக இருப்பதை எண்ணு கின்றோம். தண்ணளி தோன்றுவது கண்வழி அல்லவா?

இவ்விடத்தில் பெரியாழ்வார் திருவுள்ளத்தில் திருக் கோயில் கொண்ட எம்பெருமானையும் நினைக்கின்றோம்.

''அரவத்து அமளி யினோடும்
அழகிய பாற்கட லோடும்
அரவிந்தப் பாவையும் தானும்
அகம்படி வந்து புகுந்து
பாவைத் திரைபல மோதப்
பள்ளிகொள் கின்ற பிரான்''[18]

[அரவம் — பாம்பு; அமளி — படுக்கை; அரவிந்தப் பாவை — பெரிய பிராட்டி.]

என்றவாறு அந்த ஆழ்வார் மனத்து எழுந்தருளிய பிரானும் நமக்குக் காட்சி தருகின்றான்.

பராங்குசநாயகி செய்ய நினைத்த செயலையும் எண்ணுகின்றோம். வேத ஒலியும் விழா ஒலியும் பிள்ளைக் குழாம் விளையாட்டொலியும் மலிந்து கிடக்கின்ற திருப்பேரைக்குச் சென்று சேர்வதே தன் பணியாகும் என்று கூறினதை நினைக்கின்றோம். அன்று ஆழ்வார் நாயகி பெற்ற அநுபவக் காட்சிகள் எல்லாம் ஒன்றன்பின் ஒன்றாக நம்மனத்தில் எழுகின்றன.

இங்ஙனம் தாய்மார்களின் முகம் நோக்கிப் பேசிக் கொண்டிருக்கும்பொழுது தோழிமார்களும் அயற்சேரி மாதர்களும் வந்து குழுமுகின்றனர் அவளுக்கு இதோபதேசம் செய்வதற்காக. அவர்களை நோக்கி, ஆழ்வார் நாயகி.

'நானக் கருங்குழல் தோழி மீர்காள்!
அன்னையர் காள்!அயற் சேரியீர்காள்!
நானித் தனிநெஞ்சம் காக்க மாட்டேன்
என்வசம் அன்று இது''[19]

[நானம் - பரிமளம், நறுநாற்றம்; காக்க - அடக்கி ஆள.]

18. பெரியாழ். திரு. 5.2:10
19. திருவாய் 7. 3: 2

என்று பேசுகின்றாள். எம்பெருமான் பக்கலிலே ஆழ்ந்து போன தன் நெஞ்சை மீட்கமாட்டாத நிலையைக் கூறு கின்றாள். அந்த நெஞ்சு,

> "வானப் பிரான்மணி வண்ணன் கண்ணன்
> செங்கனி வாயின் திறத்ததுவே."[20]
>
> [வானப்பிரான் - பரமபதநாதன்]

என்று எம்பெருமானின் திருப்பவளத்தில் படிந்துவிட்ட திறத்தைக் கூறுகின்றாள். தன் நெஞ்சைக் கடல் கொண்டது என்கின்றாள் போலும். நெஞ்சுக்குத் தான் வசப்பட்டிருக்கும் நிலையைக் கூறி, தான் அவர்களால் திருத்தமுடியாதவள் என்பதையும் புலப்படுத்துகின்றாள்.

தோழியைத் தவிர எல்லோரும் இவளைத் திருத்தத் தம்மாலாகாது என்று சற்று அகன்று போகின்றனர். தோழிமட்டிலும் இவளை நோக்கி இப்படி நாணமற்றுச் சொல்லுவது தகுதியோ என்று ஆழ்வார்நாயகியைக் கேட்க, அவள் இங்ஙனம் கூறுகின்றாள்;

> "செங்கனி வாயின் திறத்த தாயும்
> செஞ்சுடர் நீண்முடி தாழ்ந்த தாயும்
> சங்கொடு சக்கரம் கண்டு கந்தும்
> தாமரைக் கண்களுக கற்றுத் தீர்ந்தும்
> ................... ..............................
> நங்கள் பிரானுக்கென் னெஞ்சம் தோழீ!
> நாணும் நிறையும் இழந்த துவே."[21]
>
> [நாண் - வெட்கம்; நிறை - அடக்கம்]

என்பதாக. செங்கனிவாய், திருமுடி, சங்கு, சக்கரம், திருக்கண் ஆகிய நான்கில் நெஞ்சு அகப்பட்டமையைக் கூறுகின்றாள். இவற்றை ஒரு சேரச் சொல்லாது தனித் தனியாகச் சொன்னதன் நயத்தைச் சிந்திக்கின்றோம்.

20. திருவாய் 7. 3: 2
21. ஷை 7. 3: 3

இராமன் திருமணம் புரிந்துகொண்டபின் பிராட்டியுடன் மிதிலை நகர் வலம் வருங்கால் அவனுடைய அழகினை அநுபவித்த பெண்களைக் கூறுங்கால்,

"தோள்கண்டார் தோளே கண்டார்
தொடுகழல் கமலம் அன்ன
தாள்கண்டார் தாளே கண்டார்
தடக்கைகண் டாரும் அஃதே "[22]

என்று கம்பநாடன் கூறுவதைப் போலவே, ஆழ்வார் நாயகியின் திருவுள்ளம் தனித்தனி வடிவுகொண்டு ஒவ்வொருஉறுப்பிலும் தனித்தனியே சுழியாறுபட்டதுஎன்று அறிதல்வேண்டும். இவ்விடத்தின் நம் பிள்ளை ஈடு: "ஸௌபரி என்பானொருத்தன் ஒரு ஸ்க்ருதமடியாக ஐம்பது வடிவு கொண்டானிறே; அவ்வள வல்லவிறே இவள் கலந்து விஷயம் பண்ணவல்லது. அவன் வ்யக்திதோறும் பரிஸமாப்ய வர்த்திக்குமாபோலவாயிற்று இதுவும் அவயவங்கள் தோறும் தனித்தனி அகப்பட வல்லபடி"[23] "நான்

22. கம்ப. பால. உலாவியற்-19

23. ஸௌபரி என்பவன் ஒரு மாமுனிவன். இவன் நீர் நிலையிலிருந்து தவம் புரிகையில் அங்கு மீன்கள் கூடிக் களித்து விளையாடா நின்றமையைக் கண்ணுற்று தானும் குடும்ப வாழ்க்கையில் கூடி நின்று சிற்றின்பம் நுகர்ந்து களிக்க வேண்டும் என்று ஆவல் கொள்கின்றான். பலபெண் பிள்ளைகளைப் பெற்ற மாந்தாதா என்னும் அரசனிடம் சென்று தனக்குக் கன்னிகாதனம் செய்யுமாறு வேண்ட, அவ்வரசனும் கிழத்தனத்தையும் குரூர வடிவத்தையும் கண்டு இசையாது, முனிவன் சாபத்திற்கஞ்சி பெண்களிடம் அனுப்புகிறான். முனிவன் தன் தவவலிமையால் அழகான வடிவம் கொண்டு செல்ல, எல்லாப் பெண்களும் போட்டி போட்டுக் கொண்டு அவனை மணக்கின்றனர். முனிவன் தன் தவவலிமையால் ஐம்பது வடிவமெடுத்து அப் பெண்களை மணந்து மகிழ்ந்தான் என்பது புராண வரலாறு.

தன்னை இழந்தேன்; தாய்மார் தோழிமார் என்னை இழந்தனர்; நெஞ்சு நாணும் நிறையும் இழந்தது'' என்று அங்கலாய்க்கின்றாள் ஆழ்வார் நாயகி.

அன்னை மார்கள் தன்னை முனிகின்றனர் என்று கருதி மேலும் கூறுகின்றாள்:

**''இழந்த எம்மாமை திறத்துப் போன**
**என்னெஞ்சி னாருமாங் கேஒ ழிந்தார்**
**உழந்தினி யாரைக்கொண் டென்உ சாகோ?**
**..... ... ..........................................**
**முழுங்குசங் கக்கையன் மாயத்து ஆழ்ந்தேன்**
**அன்னையர் காள்என்னை என்மு னிந்தே''[24]**

[உழந்து - வருந்தி, உசாவுதல் - ஆராய்தல்; மாயம்- ஆச்சரிய குணங்கள்.]

''இழந்த என் மாமை நிறத்தை மீட்டுக்கொண்டு வருவதாக வீரவாதம் செய்து சென்ற என் நெஞ்சும் அங்கே தகர்ப் புண்டது. என் செய்வேன்? இனி யாருடன் எதனைச் சொல்லிப் பொழுதுபோக்குவேன்?'' என்கின்றாள். பகவத் விஷயத்தில் ஈடுபட்ட அதிசயத்தைப் புலப்படுத்தவே ஆழ்வார் நாயகி நெஞ்சினை 'நெஞ்சினார்' என்று உயர்வு பொருளாகக் கூறுகின்றாள். 'ஆரைக்கொண்டு உசாகோ' என்ற விடத்து இன்சுவை மிக்க நம் பிள்ளை ஈட்டையும் நினைக்கின்றோம்; ''தேகாதமாபிமாநிகளான சம்சாரி களைக் கொண்டு போது போக்கவோ? ஈஸ்வரோஹம் என்று இருக்கிற பிரமன் சிவன் முதலாயினோர்களைக் கொண்டு போது போக்கவோ? பகவதநுபவத்திலே நோக்காக இருக்கிற நித்திய சூரிகளைக்கொண்டு போது போக்கவோ? இத்தலையை உரி சூறைகொண்டு[25] போன

24. திருவாய் 7. 3: 4

25. உரி - புடைவை; சூறை கொண்டு - கொள்ளை யடித்துக்கொண்டு.

வனைக்கொண்டு போதுபோக்கவோ? ஆரைக்கொண்டு எத்தை உசாவுவது?'' என்ற ஈட்டுரையைக் காண்மின்.

அடுத்து, ஆழ்வார் நாயகி தாய்மார் தன்னைக் கடுகக் கொண்டுபோய்த் தென்திருப்பேரையில் சேர்ப்பதே அவர்கள் கடன் என்பதை வற்புறுத்துகின்றாள்.

**''முனிந்து சகடம் உதைத்து மாயப்**
**பேய்முலை யுண்டு மருதி டைபோய்**
**கனிந்த விளவுக்குக் கன்றெ றிந்த**
**கண்ண பிரானுக்கென் பெண்மை தோற்றேன்**
**முனிந்தினி யென்செய்தீர் அன்னை மீர்காள்!**
**முன்னி யவன் வந்து வீற்றி ருந்த**
**கனிந்த பொழில்திருப் பேரெ யிற்கே**
**காலம் பெறவென்னைக் காட்டு மினே''[26]**

[மாயப்பேய் — வஞ்சகப்பேய்; முனிந்து - சினந்து; காலம் பெற-காலதாமதமின்றி.]

என்ற பாசுரத்தில், எம்பெருமானுடைய சில வீரச் செயல்களில் தான் ஈடுபட்டமையைத் தெரிவிக்கின்றாள். சகடம் ஒன்றில் ஆவேசித்து வந்த அசுரனை முடித்த தீரச்செயலிலும், அழகிய வடிவங்கொண்டு நஞ்சூட்டிய முலையினால் பாலூட்டிக் கொல்ல வந்த பூதனையின் உயிர் குடித்த அற்புதச் செயலிலும், தன்னைக்கொல்லுவ தற்காகச் சமயம் பார்த்திருந்து விளாமரத்தில் ஆவேசித் திருந்த கபித்தாசுரனையும், அங்ஙனமே கன்றின்மீது ஆவேசித்திருந்த வத்ஸாசுரனையும் ஒருங்கே முடித்த வீரச் செயலிலும், இரட்டை மருதமரங்களிடையே தவழ்ந்து சென்று நளகூபரமணிக்கிரீவர்களின் சாபத் தைப் போக்கின அதிசயச் செயலிலும் ஆழ்வார் நாயகி ஆழங்கால்பட்டுத் தன் பெண்மைக் குணங்கள் அனைத் தையும் இழந்தமையைப் புலப்படுத்துகின்றாள். இச்

26. திருவாய் 7. 3 : 5

செயல்களில் ஈடுபடாததற்கு முன்னரே முனிந்தாலும் பயனுண்டு. தண்ணீர் பெருகிச் சென்றபின் அணை கட்டப் பார்ப்பதில் பயனில்லை. ஆகவே, தன்னைக் கொண்டு போய்க் காலதாமதமின்றி அவன் காலடியில் சேர்ப்பதே அவர்கள் கடமையாகும் என்கின்றாள்.

ஆழ்வார் நாயகி எம்பெருமானை உருவெளித் தோற்றத்தில் காண்கின்றாள். ஆகவே, காலம் நீட்டியாது அவனைத் தான் காணுமாறு செய்யும்படி வேண்டு கின்றாள்.

**"காலம் பெறஎன்னைக் காட்டு மின்கள்**
**காதல் கடலின் மிகப் பெரிதால்**
**நீல முகில்வண்ணத் தெம்பெ ருமான்**
**நிற்குமுன் னேவந்துஎன் கைக்கும் எய்தான்."[27]**

[முகில்-மேகம்; வண்ணம்-நிறம்.]

என்பது அவள் திருவாக்கு. ஆழ்வார் நாயகி தனது ஆராக்காதலை இதில் புலப்படுத்துகின்றாள். ஐந்தாம் பத்தில் "மாசறுசோதி" என்ற திருவாய் மொழியில்,

**"பேரமர் காதல் கடல்புரைய விளைவித்த**
**காரமர் மேனி"[28]**

என்று தன் காதலைக் கடலோடொத்ததாகச் சொன்னவள் ஈண்டு அது 'கடலினும் மிகப் பெரிதால்' என்று கூறுகின்றாள்; கடலினும் விஞ்சியதாகச் செப்புகின்றாள். இத் திருத்தலத்துமீதுள்ள திருவாய்மொழி எட்டாம் பாசுரத்தில்,

**"என்காதல் உரைக்கில் தோழீ,**
**மண்டிணி ஞால மும்ஏழ் கடலும்**
**நீள்வி சும்பும் கழியப் பெரிதால்."[29]**

---

27. திருவாய் 7. 3 : 6    28 ஷை 5. 3 :4
29. ஷை 7. 3 : 8

[மண் திணி-மண்செறிந்த; ஞாலம்-பூமி; விசும்பு-ஆகாயம்]

என்று கூறுகின்றாள். இறுதியாக,

'சூழ்ந்தத னில்பெரிய என்அவா'[30]

என்று தன் அவா தத்துவத்திரயத்தையும் வளைத்துக் கொண்டு அதனிலும் மிகப் பெரியது என்று சொல்லித் தீர்க்கின்றாள். இப்படிக் கனத்த காதலையுடையவள் எங்ஙனம் பதறாது இருப்பது என்கின்றாள் போலும். 'நீல முகில் வண்ணத்து எம்பெருமான் முன்னே வந்து நிற்கும்' போது 'இஃது எங்ஙனம் சாத்தியமாகும்?' என்கின்றாள். 'காலம் பெற என்னைக் காட்டுமின்கள்' என்பதற்கு ஈடு: "குடிக்குப் பரிஹாரமன்றாகிலும் எனக்குப் பரிஹாரம் இஃதல்லது இல்லை." வெறும் உருவெளிப் பாடன்றியே கண்ணாலே கண்டநுபவிக்கலாம். திருப்பதியிலே போகப் பார்ப்பதாகப் பகர்கின்றாள்.

அடுத்த பாசுரத்தில் அவள் கூறுவது: "இலங்கையை நீறாக்கியொழித்த எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் இடமான திருப்பேரைக்குச் சென்ற என் நெஞ்சு மீண்டும் திரும்பிவரக் காணேன். வெற்றித் திருமகளுடன் எழுந்தருளியிருக்கும் எம்பெருமான் இருப்பைக் கண்ட பிறகு அது திரும்பி வராது என்பது உறுதி. ஆகவே,

"ஆரை யினியிங் குடையம் தோழி!
என்னெஞ்சம் கூவவல் லாரு மில்லை
ஆரை யினிக்கொண்டென் சாதிக் கின்றது?
என்னெஞ்சம் கண்டது வேகண் டதுவே.[31]

என்கின்றாள். "என் நெஞ்சினை அழைத்து வரவல்லாரும் இல்லை. ஆகவே என் நெஞ்சு போய்ச் சேர்ந்த தேசத்திலேயே நானும் போய்ச் சேர்வதே தகுதி" என்று உரைக்கின்றாள். 'பேரெயிற்கே புக்கென் னெஞ்சம் நாடிப்

30. திருவாய் 10. 10 : 10    31. ஷை 7. 3 : 7

பேர்த்துவர வெங்கும் காணமாட்டேன்' என்ற இப் பாசுரத்தின் இரண்டாம் அடிக்கு இன்சுவை மிக்க நம் பிள்ளையின் ஈடு : "மீளவொண்ணாத லங்காபுரியிலே புக்க திருவடியும் மீண்டு வந்தான்; அணித்தான இவ்வூரிலே புக்க நெஞ்சு மீண்டுவரக் காண்கிறிலேன். நெஞ்சுங்கூட வாராத பின்பு அவன் வாராமை சொல்ல வேண்டாவிறே" இது சுவைத்து மகிழத்தக்கது. அடுத்த பாசுரத்திலும் "தென்திருப்பேரெயில் சென்று சேர்வன்"[32] என்று தன் மன உறுதியைத் தோழிக்குப் புலப்படுத்துகின்றாள். அதற்கடுத்த பாசுரத்தில் "என்னைத்தேற்ற வேண்டா; என் நெஞ்சும் அடக்கம் முதலான குணங்களும் இங்கில்லை. எனவே, மேற்படி திருப்பதியை சென்று சேரக்கடவேன்"[33] என்று தோழியர்க்கும் அன்னைமார்க்கும் கூறுகின்றாள்.

"சென்று சேர்வேன், சென்று சேர்வேன்" என்று பலகாலும் சொன்ன பராங்குசநாயகியை நோக்கி, 'நங்காய், நீயே சென்று சேர்ந்தாயாகில் ஊரும் நாடும் மற்றுமெல்லாரும் உன்னைப் பழி சொல்லாரோ?' என்று வினவ, அதற்கு அவள், 'பழிசொல்லுவாரையன்றோ நான் தேடுவது?' என்று பதிலிறுக்கின்றாள். பழி சொல்பவர்கள் அவனையும் இவளையும் சேர்த்துப் பழி சொல்லுங்கால் அதுவே இவளுக்குப் பரம உத்தேசம் ஆகும். அவனுடன் தனக்குச் சேர்த்தி இல்லையேயாகிலும் பழி சொல்லுவாரின் கருத்தாலேயாகிலும் சேர்த்தி நேர்கின்றதன்றோ? அதுவே இவளுக்கு உவப்பாகும் போலும்.

இங்ஙனம் நாயகி நிலையை அடைந்து எம்பெருமான் மீது ஆராக்காதல் கொண்டு திருக்கோயிலில் நுழைந்து கருவறையை அடைந்து இத்திருப்பதி எம்பெருமான் **மகர நெடுங்குழைக்காதனையும்**[34] எம்பெருமாட்டி குழைக்**காது வல்லிநாச்சியாரையும்** சேவிக்கின்றோம். எம்பெரு

32. திருவாய் 7. 3 : 8 33. 7. 3 : 9
34. ஷை 7. 3: 10

மான் வீற்றிருக்கும் திருக்கோலத்தில் கிழக்கு நோக்கிய திருமுக மண்டலத்துடன் சேவை சாதிக்கின்றான். இந்த எம்பெருமானுக்கு நிகரில் முகில் வண்ணன்[35] என்ற மற்றொரு திருநாமமும் உண்டு. சந்நிதியில் இத்திருத் தலம் பற்றிய திருவாய்மொழிப் பாசுரங்களை மிடற்றொலி யாக அன்புருகப் பாடிச் சேவித்த வண்ணம் எம்பெரு மானின் திவ்விய மங்கள விக்கிரகத்தின் அழகில் மூழ்கி நிற்கின்றோம். இங்ஙனம் திருப்பேரெயில் ஆழி அம்கை யன் மீதுள்ள பாசுரங்களை ஓதியதும் எம்பெருமானின் நித்திய கைங்கரியத்திலே ஆழ்ந்தது போன்ற அநுபவத் தைப் பெறுகின்றோம்.

இந் நிலையில் திவ்விய கவியின் இத் திருப்பதி பற்றிய பாசுரம் நினைவிற்கு வருகின்றது.

''அரைசாகி வையமுழு
தாண்டாலும் இன்பக்
கரைசார மாட்டார்கள்
கண்டீர் —முரைசாரும்
தென்திருப்பேரைப் பதியான்சீர்
கேட்டு நாவிலவன்
தன்திருப்பேரைப் பதியா
தார்.''[36]

[வையம்-நிலவுலகம்; இன்பக் கரை-முத்தியுலகம்] என்ற பாசுரத்தை இனிக்க இனிக்க ஓதி உளங்கரைகின் றோம். இந்த நிலையில் ஆசாரிய ஹிருதயத்தின்,

''சென்று சேர்வார்க்கு உசாத்துணை
அறுக்கும் செளந்தர்யம், மாநகரிலே
கோஷிக்கும்.''[37]

[செளந்தர்யம்-அழகு; மாநகர்-திருப்பேர் எயில்; கோஷிக்கும்-ஒலிக்கும்.]

35. ஷை 7. 3: 10
36. நூற் திருப் அந்-52
37. ஆசா. ஹிரு-170 (புருடோத்தம நாயுடு பதிப்பு:)

என்ற சூத்திரம் நினைவிற்கு வர அதனையும் சிந்தனை செய்கின்றோம். இத் திருப்பதிக்குரிய திருவாய்மொழியின் "செங்கனிவாயின் திறத்ததாயும் செஞ்சுடர் நீள் முடி தாழ்ந்ததாயும், சங்கொடு சக்கரம் கையுகந்தும் தாமரைக் கண்களுக்கு அற்றுத் தீர்ந்தும்" (3) என்ற திருப்பாசுரப் பகுதியைத் திருவுள்ளம்பற்றி இத்திவ்விய தேசத்தில் சௌந்தரிய குணம் விளங்கும் என்றார். "தென் திருப்பேரெயில் மாநகரே" (9) என்ற திருப்பாசுரப் பகுதியைத் திருவுள்ளம் பற்றி 'மாநகர்' என்கின்றார். "எங்கும் எழுந்த நல்வேதத்தொலி நின்றோங்கும்" (4) என்ற திருப்பாசுரப் பகுதியைத் திருவுள்ளம் பற்றிக் 'கோஷிக்கும்' என்கின்றார். திருப்பேரெயில் சென்று சேர்வது என்று உறுதி பூண்டவர்களுக்கு எம்பெருமானது அழகானது அநுபவித்த மகிழ்ச்சியினால் அங்குள்ளார் பாடுகின்ற சாமவேத ஒலியிலே தெரியும்.

இந்நிலையில் பக்தியநுபவம் நிறைந்த மனத்துடன் திருக்கோயில் பிராகாரங்களில் வலம் வருகின்றோம். பிராகாரங்களில் உள்ள கடவுளர்களையெல்லாம் சேவிக்கவும் செய்கின்றோம். கோயில் பெரியது. இறுதியில் பிராகாரத்தில் ஓரிடத்தில் அமர்ந்து இத் திருத்தலம் பற்றிய குறிப்பு ஏதாவது கிடைக்குமா என்று சிந்திக்கின்றோம்.

பிற்காலப் பாண்டிய மன்னருள் ஒருவரான சுந்தர பாண்டியன் என்பான் பல சிற்றூர்களில் வாழ்ந்த சாமவேதிகளான நூற்றெட்டு ஸ்ரீ வைணவக் குடும்பத்தாரை இப்பகுதியில் குடியேறச் செய்து அவர்கட்கு இருப்பிடமும் நிலமும் வழங்கி வாழச்செய்தான். பின்னர் 17-ம் நூற்றாண்டில் தமிழகம் முழுவதும் விசயநகரப் பேரரசு ஆட்சியின்கீழ் அமைந்தது. அந்த ஆட்சியில் சொக்கநாத நாயக்கர் (கி. பி. 1659-83) ஆட்சிக் காலத்தில் தென்பாண்டி நாட்டை வடமலையப்பப் பிள்ளையன்

என்பவர் ஆண்டு வந்தார். இவர் தெய்வபக்தி நிறைந்த சீலர்; புலவர்களை ஆதரித்துப் போற்றும் வள்ளண்மை வாய்ந்தவர். இவரும் தமிழ்ப் புலமை மிக்கவர்; கவிபாடும் திறமையும் உடையவர். அந்நாளில் தென் திருப்பேரையில் நாராயண தீட்சிதர் என்பார் ஒருவர் வாழ்ந்திருந்தார். இவர் வடமொழி, தமிழ் ஆகிய இரண்டிலும் வல்லவர். தமிழில் கவிபாடும் ஆற்றலும் பெற்றவர், நாடோறும் ஆழ்வார் திருநகரிக்குச் சென்று நம்மாழ்வாரைப் பணிவதும், திருப்பேரை மகர நெடுங்குழைக்காதனை வணங்குவதும், நல்ல நூல்களை விரும்பிப் பயிலவதும் இவரது பொழுது போக்குச் செயல்களாகும். தமக்குச் சொந்தமாகவுள்ள வீடு, நிலம் இவற்றைக்கொண்டு அமைதியான வாழ்க்கையை நடத்தி வந்தார்.

ஓராண்டு மழையின்றி விளைச்சல் குறைந்தது. இவரும் இவரையொத்த சிலரும் அரசிறை செலுத்தத் தவறினர். வடமலையப்பப் பிள்ளையனிடம் நேரில் சென்று தலைவணை கேட்பதற்குள் அரசிறையை வசூலிக்கும் அதிகாரியொருவர் இவர்கள் கூறும் சமாதானத்தை ஏற்றுக்கொள்ளாது இவர்களைத் திருநெல்வேலிக்கு வருவித்துச் சிறையில் அடைப்பித்தார். சிறைப்பட்ட செந்தமிழ்ச் செல்வராகிய தீட்சிதர் எல்லாம் தம் விதியின் செயல் என்று கருதி சிறை வீடு பெறும் நோக்கத்துடன் மகர நெடுங்குழைக்காதன்மீது பாமாலையொன்று பாடத் தொடங்கினார். நாடோறும் சில பாடல்கள் வீதம் இயற்றி வந்தார். இதற்குள் ஒரு திங்கள் கழிந்தது.

**"திங்கள் ஒன்றாகச் சிறையிருந்**
**தோம்இச் சிறையகற்றி**
**எங்கள் தம்பா லிரங்காத**
**தென்னோ? இசைநான்மறையின்**
**சங்கமும் கீதத் தமிழ்ப்பாட**
**லும்சத்த சாகரம்போல்**
**பொங்குதென் பேரைப் புனித!**
**கருணைப் புராதனனே."**

என்ற பாடல் அரசர் உள்ளம் உருகிய நிலையை உணர்த்துகின்றது. மேலும் சில நாட்கள் ஓடின. 'இன்றாகும், நாளைக்கு நன்றாகும் என்றிங்கு இருப்பதெல் லால் ஒன்றாகிலும் வழி காண்கிலமே' என்று ஏங்கிய நிலையில் புலவர்கள்பால் பேரன்புடையவரும் தெய்வ பக்தி மிக்கவருமான வடமலையப்பப் பிள்ளையனிடம் தம் நிலையை எடுத்துச் செல்லுவார் யார் என்று எண்ணிய நிலையில் பாடல் ஒன்று உருப்பெறுகின்றது.

**"வன்வார் முரசதிர் கோமான்**
**வடமலை யப்பன்முன்னே**
**வில்வாரு மில்லை யினிஎங்கள்**
**காரியம் வெண்தயிர்பால்**
**கள்வா! அருட்கடைக் கண்பார்!**
**கருணைக் களிறழைத்த**
**புள்வாகனா! அன்பர் வாழ்வே!**
**தென்திருப் பேரைப் புராதனனே"**

இதனை மனமுருகிப் பாடுவதைக் கேட்ட சிறைக் காவலர் களில் ஒருவன் ஏதோ குறையால் தன் எசமானன் பெயரை அமைத்துச் செய்யுள் இயற்றி அதைத் திரும்பத் திரும்பப் பாடுவதாகக் கருதி நேரே சென்று பிள்ளை யனிடம் தெரிவித்தான். உடனே அவர் சிறைச்சாலைக்கு வந்து அவர்களைச் சிறை வீடு செய்தார். அது முதல் அவர் நிலங்களுக்கு வரியே இல்லாமல் செய்தார். 65 பாடல்களே நிறைவு பெற்றிருந்த நூலை முடித்தருளுமாறு வேண்டிய பிள்ளையன் விருப்பத்தை நிறைவேற்றினார் தீட்சிதர்.

நாள்தோறும் ஆழ்வார் திருநகரி சென்று குழைக் காதரையும் நம்மாழ்வாரையும் சேவித்த பின்னரே உணவு கொள்ளும் வழக்கத்தை மேற்கொண்டிருந்தார். திருக்கோயில் அர்ச்சகரும் தீட்சிதர் சற்றுத் தாமதமாக வந்த போதிலும் காத்திருந்து தீர்த்தம் திருத்துழாய்

அவருக்கு வழங்கிய பின்னரே தம் வீடு திரும்புவார். ஒரு நாள் தீட்சிதர் வருவதற்கு அதிகத் தாமதம் ஏற்பட்டது. அர்ச்சகர் திருக்கோயில் முன் மண்டபத்தில் ஒருவருடன் சொல்லாடிய வண்ணம் காத்திருந்தார் அங்கிருந்த சிலர் "தீட்சிதர் அதோ சந்நிதிக்குள் போகிறார். நீரும் செல்க" என்று அர்ச்சகரைத் தூண்ட அவரும் சந்நிதிக்குள் விரைந்தார். எங்கும் தீட்சிதர் காணப்பெறவில்லை. அன்று காலையில்தான் தீட்சிதர் பரமபதித்தார் என்ற செய்தி பிற்பகலில் தெரிய வந்தது. அர்ச்சகர் இச் செய்தியைப் பலரிடம் தெரிவிக்க. "தீட்சிதர் ஆன்மா ஆழ்வார் திருவடிகளில் கலந்தது" என்று சொல்லி அனைவரும் பாரித்தனர். இன்றும் பலர் தீட்சிதர்க்குச் சிறை வீடு தந்து பல துன்பங்களைப் போக்கிய குழைக்காதர் பாமாலை'யைப் பாராயணம் செய்து வருகின்றனர்.

இந்த நூலையும் நூலெழுந்த வரலாற்றையும் தென் திருப்பேரெயில் ஆசுகவி அபிநவ காள மேகம் அனந்த கிருஷ்ண அய்யங்கார் அவர்களிடமிருந்து ஐயரவர்கள் பெற்றுக்கலைமகளில் 1939-இல் வெளியிட்டும்,பின்னர் அவர் திருக்குமாரர் 1947-இல் சிறு நூல் வடிவில் வெளியிட்டும் வழங்கினர். இச் செய்தியை அறிந்த நிலையில் எம்பெருமானிடம் பிரியாவிடை பெற்றுச் சீவைகுண்டம் என்னும் திவ்விய தேசத்தை நோக்கி விரைகின்றோம்.

# 12. சீவைகுந்தத்துத் தேவன்

ஒருவருடைய நல்வினை தீவினையாகிய வினைகளின் தொகுதியை மூன்று வகையாகப் பகுத்துரைப்பர் சமயச் சான்றோர்கள். பிறவிதோறும் செய்து குவிந்து கிடக்கும் வினைத் தொகுதியில் இப்பிறப்பில் அநுபவித்தற்கென்று அளந்துகொள்ளப் பெற்ற வினையின் பகுதியைப் **பிராரத்தம்** (நுகர்வினை) என்று வழங்குவர். இது போக எஞ்சியவினைப் பகுதி **சஞ்சிதம்** (பழவினை) என்று வழங்கப்பெறும். இந்தப் பிறவியில் ஒருவர் செய்யும் வினைப் பகுதி **ஆகாமியம்** (எதிர்வினை) என்று கூறப்பெறும். இவற்றுள் பிராரத்தம் அநுபவித்தே ஒழிக்தற்பாலது. பிரபத்தி செய்யும் அனைவருக்கும் எம்பெருமான் இரட்சகனாக அமைந்துவிடுகின்றான்; மோட்சத்தையும் கொடுக்கின்றான். ஆனால் அவர்கள் இந்த உடல் முடியும் வரை (பிராரத்தம் தீரும் வரை) பொறுத்திருத்தல் வேண்டும். இந்தக் கருத்தை நம்மாழ்வார்.

**''சரணமா கும்தன தாளடைந் தார்க்கெல்லாம்**
**மரணமா னால்வைகுந் தம்கொடுக் கும்பிரான்''[1]**

என்ற திருவாய்மொழியால் விளக்குவர். தவம் செய்து மனம் தூய்மை அடைந்து, **'யான்'** என்ற அகப்பற்றையும் **'எனது'** என்ற புறப்பற்றையும் போக்கி மெய்யுணர்வு பெற்ற பெரியோர்களைச் சஞ்சித வினை நெருங்காது

1. திருவாய் 9. 10 : 5

அழிந்துபடும். அங்ஙனம் மெய்யுணர்வு பெற்ற பெரியோர்கள், தெரிந்து தமக்கென எவ்வினைகளையும் செய்யார்கள். எனவே, அவர்களிடம் ஆகாமிய வினை ஒன்றும் சேராது. அவர்கள் அறியாமல் இப் பிறப்பில் அவர்களால் ஏதேனும் வினை நிகழுமாயின் அதற்குப் பலன் இல்லை. ஆகவே, மெய்யுணர்வு பெற்ற பெரியோர்கட்குச் சஞ்சிதம், ஆகாமியம் என்னும் இருவகை வினைப் பகுதிகளும் இலவாகும் என்பது அறியத் தக்கது. அவ்விரு வகை வினைகளையும் இறைவன் 'தீயினில் தூசாகச்' செய்து விடுகின்றான் என்பது சமயமரபாக இருந்து வரும் நம்பிக்கையாகும்.

இந்த எண்ணங்கள் நம் சிந்தையில் எழுந்த வண்ணம் தென் திருப்பேரையினின்றும் சீவைகுந்தத்தை நோக்கி விரைவாக வந்து கொண்டிருக்கின்றோம் பரமபதத்திலுள்ள சீவைகுந்தத்திற்குச் செல்லுகின்றது போன்ற எல்லையற்ற மகிழ்ச்சியை அடைகின்றோம். இந்த ஊர் நெல்லைக்கு நேர்கிழக்கே பதினேழு கல் தொலைவிலுள்ள ஒரு சிற்றூர்; வட்டத்தின் தலைநகரம். இந்த ஊருக்கு இருபூர்த்தியிலும் சென்று சேரலாம். நெல்லை—திருச்செந்தூர் இருப்புப் பாதையில் ஸ்ரீவைகுண்டம் என்னும் நிலையத்திலிருந்து அரை மைல் தொலைவு நடந்து சென்று இவ்வூரை அடைதல் வேண்டும். இதற்குத் தண்பொருநை யாற்றில் கட்டப் பெற்றுள்ள அணையுடன் சேர்ந்த பாலத்தைக் கடந்து செல்ல வேண்டும். நாம் வரும் சிற்றுந்தும், இப் பாலத்தைக் கடந்தே சென்று சேர்கின்றது.

வண்டி பாலத்தின்மீது செல்லும்பொழுதே நூற்றுப் பத்தடி உயரமுள்ள கோபுரத்தின் தரிசனம் நமக்குக் கிடைக்கின்றது. இத் திவ்விய தேசம் நவ திருப்பதியில் ஆறாவது ஆகும். திருக்கோயிலின் வெளி மதிலோரத்தில் நம் வண்டியை நிறுத்திவிட்டுத் திருக்கோயிலில் நுழைகின்றோம். கோயில் சற்றுப் பெரிய கோயிலே; இது 580 அடி நீளமும் 396 அடி அகலமும்

உள்ள மதிலால் சூழப்பெற்றுள்ளது என்பதையும் அறிகின்றோம். திருக்கோயிலின் வாயிலில் அமைக்கப் பெற்றிருக்கும் தகரக்கொட்டகை கோயிலின் எழிலையையும் காம்பீரியத் தோற்றத்தையும் கெடுத்தே விடுகின்றது. இத் தகரக்கொட்டகையை அடுத்து இருப்பது இராமாயணக் குறட்டையுடைய மண்டபம். அதன் பின்னரே கோபுர வாயில். அதன் வழியாகச் சென்று கொடி மர மண்டபம், மணி மண்டபம் இவற்றையெல்லாம் கடந்து அர்த்த மண்டபத்தைச் சென்றுசேர்கின்றோம்.

அர்த்த மண்டபத்தில் தங்க மஞ்சத்தில் பெரிய பிராட்டியாரும் பூமிப் பிராட்டியாரும் இரு புறமும் இருக்க உற்சவர் கள்ளப்பிரான் கையில் கதையுடன் நின்ற திருக்கோலத்தில் காட்சி தருகின்றார். இவருக்குத் தங்கக் கவசமும் அணி செய்யப் பெற்றுள்ளது. கவசம் இன்றியே எழிலெலாம் திரண்ட திருமேனியையுடையவர். இவரைச் சமைத்த சிற்பி அவரது திருமேனி அழகில் சொக்கித் தன்னையும் மறந்து அவருடைய கன்னத்தைக் கிள்ளிக் கொஞ்சினான் என்றும், அப்படி அவன் தொட்டுக் கொஞ்சிய இடம் கன்னத்தில் பதிந்திருக்கிறதென்றும் அர்ச்சகர் சொல்வதைக் கேட்டு அக மகிழ்கின்றோம்.

அர்த்த மண்டபத்திற்கு அப்பாலுள்ள கருவறையில்தான் வைகுந்தநாதன் நல்ல சிலை வடிவில் கிழக்கு நோக்கிய திருமண்டலம் கொண்டு நின்ற திருக்கோலத்தில் சேவை சாதிக்கின்றார். இவர் அருகில் தேவிமார் இல்லை. தன்னந்தனியாகவே நிற்கின்றார். இவரைப் பற்றிய இதிகாசம் ஒன்றனை அர்ச்சகர் மூலம் அறிகின்றோம். சோமுகாசுரன் என்பவன் ஓர் அசுரன். அவன் நான்முகனிடத்திருந்த நான்கு வேதங்களையும் பறித்துக் சென்று விடுகின்றான். அதனால் மனங்கவன்ற நான்முகன் வைகுந்தநாதனை நோக்கித் தவம் செய்கின்றான். நான்முகன் தவத்திற்கு இரங்கி மகிழ்ந்த எம்பெருமான் பெரிய திருவடியின் மீது ஏறி வந்து

சோமுகாசுரனை வென்று நான்மறைகளையும் மீட்டு அவற்றை நான்முகனிடமே தந்து விடுகின்றான். நான்முகன் பொருட்டு அவசரமாக எழுந்தருளிய காரணத்தால் தேவிமார் இன்றித் தன்னந்தனியாக வந்திருக்கின்றார் போலும். இந்த எம்பெருமானையே 'பால் பாண்டியன்' என்றும் வழங்கி வருகின்றார்கள். இங்ஙனம் வழங்க வேண்டிய காரணத்தையும் எண்ணுகின்றோம்.

பண்டு நான்முகன் வழிப்பட்ட வைகுந்தநாதர் பின்னர் சிறிது காலம் எப்படியோ மண்ணுக்குள் மறைந்து விடுகின்றார். அப்படி மறைந்திருக்கும் இடத்தில் அக்கம் பக்கங்களில் மேய்ந்து கொண்டிருக்கும் பசுக்கள் பால் சொரியத் தொடங்குகின்றன. ஆநிரைகளை மேய்க்கும் ஆயர்கள் இச் செய்தியை அரசனிடம் தெரிவிக்கின்றனர். அரசனும் அதிசயத்துடன் அவ்விடம் போந்து ஆட்களை விட்டு மண்ணைத் தோண்டிப் பார்க்கின்றான். மண்ணுக்குள் மறைந்திருந்த வைகுந்தநாதர் காணப்படுகின்றார். அவரை வெளிக் கொணர்ந்து அவர் இருந்த இடத்தில் கோயில் எழுப்பி வழிபடுகிறான் அரசன். இது காரணமாகவே இன்றும் இவருக்குப் பால் திருமஞ்சனம் நடைபெற்று வருகின்றதாக அறிகின்றோம். பாற்கடலிலேயே அறிதுயில் கொள்ளும் பரந்தாமன் பாலபிஷேகம் பெறுவதும், அதனால் 'பால் பாண்டியன்' என்று திருநாமம் சூட்டப் பெறுவதும் இயல்புதானே.

இந்த வைகுந்தநாதனை நம்மாழ்வார் மட்டிலும் இரண்டு பாசுரங்களால் மங்களாசாசனம் செய்துள்ளார். இந்த இரண்டு பாசுரங்களும் நேரே இவரை மங்களசாசனம் செய்தவை அல்ல. அண்மையிலுள்ள திருப்புளிங்குடி எம்பெருமானை மங்களாசாசனம் செய்த திருவாய்மொழிப் பதிகத்தில் இந்த இரண்டு பாசுங்களும் வருகின்றன. ஒரு பாசுரத்தில் **திருவைகுந்தத்துள்ளாய்! தேவா!**[2] என்ற தொடர் மட்டிலுமே வருகின்றது. மற்றொரு

2. திருவாய் 9. 2 : 8

பாசுரத்தை மிடற்றொலியில் சேவித்து நின்ற திருக்கோலத்தில் சேவை சாதிக்கும் வைகுந்தநாதரை வணங்குகின்றோம்.

''புளிங்குடிக் கிடந்து வரகுண மங்கை
இருந்துவை குந்தத்துள் நின்று,
தெளிந்தஎன் சிந்தை அகங்கழி யாதே
என்னையாள் வாயெனக் கருளி,
நளிர்ந்தசீர் உலகம் மூன்றுடன் வியப்ப
நாங்கள்கூத் தாடிநின்று ஆர்ப்ப,
பளிங்குநீர் முகிலின் பவளம்போல் கனிவாய்
சிவப்பநீர் காணவா ராயே''.[3]

[அகம்கழியாதே-அங்குவிட்டுப் பிரியாமல்; நளிர்ந்த-குளிர்ந்த; சீர்-திருக்குணம்; முகில்-மேகம்.]

என்பது பாசுரம். இங்கும் 'வைகுந்தத்துள் நின்று' என்ற தொடர்மட்டிலுமே இந்த எம்பெருமானைக் குறிக்கின்றது. இந்த இரண்டு பாசுரங்களாலும் அர்ச்சாவதாரமாக எல்லாத் திருப்பதிகளிலும் எல்லாத் திருக்கோலங்களிலும் எழுந்தருளியிருப்பவன் பரமபத நாதனே என்ற தத்துவம் குறிப்பாகப் புலப்படுத்தியிருப்பதையும் அறிகின்றோம்.

பொதுவாக அர்ச்சை வடிவில் உள்ள எம்பெருமான் சில தலங்களில் சயனித்திருப்பான்; சிலவற்றில் வீற்றிருந்து சேவை சாதிப்பான்; இன்னும் சிலவற்றில் நின்ற திருக்கோலத்தில் காட்சி தருவான். ஆழ்வார்கள் இந்த மூன்று திருக்கோலங்களிலும் எம்பெருமானைத் தனித்தனியாக அநுபவித்து மகிழ்வர். இத்திருக்கோலங்கள் மூனறையும் ஒருசேர சேர்த்தும் அவர்கள் அநுபவித்துக் களிப்பர். திருமழிசையாழ்வார்,

''நின்ற தெந்தை ஊரகத்து
இருந்ததெந்தை பாடகத்து

3. திருவாய். 9. 2 : 4

அன்றுவெஃக ணைக்கிடந்தது"[4]

என்று அநுபவிக்கின்றதை நாம் அறிவோம். அங்ஙனமே நம்மாழ்வாரும் வேறொரு பாசுரத்தில்,

"நின்ற வாறும் இருந்த வாறும்
கிடந்த வாறும் நினைப்பரியன"[5]

என்று மூன்று நிலைகளிலும் எம்பெருமானை அநுபவித்து மகிழ்ந்துள்ளார். திருமங்கையாழ்வாரும் திருநெடுந் தாண்டகத்தில்,

"கல்லுயர்ந்த நெடுமதிள்சூழ் கச்சிமேய
'களிறுஎன்றும்' 'கடல்கிடந்த கனியே!' என்றும்,
'அல்லியம்பூ மலர்ப் பொங்கைப் பழன வேலி,
அணியழுந்தூர் நின்றுகந்த அம்மான்' என்றும்!"[6]

என்று இந்த மூன்று நிலைகளையும் பாடி அநுபவித்திருக் கின்றார். 'களிறு' என்றதற்குத் திருப்பாடகத்து எம்பெரு மானைப் பொருளாக உரைத்தார் பெரிய வாச்சான் பிள்ளை.[7] பெரியவாச்சான் பிள்ளை ஆழ்வாருடைய திருவுள்ளமறிந்து செய்தருளினவியாக்கியானத்தை எண்ணி மகிழ்கின்றோம். மேற்குறிப்பிட்ட பாசுர அடிகளில் 'கடல் கிடந்த கனியே' என்பதனால் கிடந்த கோலத்து அழகை யும், 'அணியழுந்தூர் நின்றுகந்த அம்மான்' என்பதனால் நின்ற திருக்கோலத்து அழகையும் அநுபவித்திருக்கை யாலே அதற்குப் பொருத்தமாக வீற்றிருக்கும் திருக்கோலத் தின் அழகின் அநுபவந்தான் ஆழ்வாருடைய திருவுள்ளத் தில் உறைந்திருக்கும் என்றும், அதற்குப் பொருத்த

4. திருச்சந். 64
5. திருவாய். 5. 10 : 6
6. திருநெடுந். 15

7. 'களிறு' என்பதற்கு காஞ்சி அத்திகிரிப் பேரரு ளாளப் பெருமானைப் பொருளாகக் கொள்வதே சரி என்றும் (அத்தி—யானை), அவரைவிட்டு எங்கோ ஒரு மலையிலுள்ள பாண்டவதூதனை ஏதுக்குப் பணித்தார் என்றும் சிலர் ஐயப்படுவர்.

மாகவே வீற்றிருக்கும் திருக்கோலத்தில் உள்ள பாண்டவ தூதனையே (திருப்பாடகத்திலுள்ள எம்பெருமான்) பொருளாகக் கொள்வதே அடுக்கும் என்றும் திருவுள்ளம் பற்றியே வீற்றிருக்கும் தலமான திருப்பாடகத்தை எடுத்துக் காட்டின அந்த உரை மன்னனின் நுட்பமான அறிவை எண்ணி மகிழ்கின்றோம். இது அநுபவாசனையின் போக்கு. இந்த முறையில் இப்பாசுரத்திலுள்ள,

**"புளியங்குடிக் கிடந்து வரகுண மங்கை**
**இருந்து வைகுந்தத்துள் நின்று"**

[புளியங்குடி-சீவைகுந்தத்தினின்றும் இரண்டு கல் தொலைவிலுள்ளது; வரகுணமங்கை - சீவைகுந்தத்தி னின்றும் ஒரு கல் தொலைவில் தூத்துக்குடி செல்லும் சாலையிலுள்ளது.]

என்பதன் பொருள் கண்டு அநுபவித்து மகிழத்தக்கது. திருப்புளிங்குடியில் கிடந்ததோர் கிடக்கும் அழகைக் காட்டியும், வரகுணமங்கையில் இருந்த கோலத்து எழிலைக் காட்டியும், சீவைகுந்தத்தில் நின்ற திருக்கோலத்து வனப்பைக் காட்டியும் தம்மை ஈடுபடுத்திக் கொண்ட எம்பெருமான் பெருங்கருணைத் திறத்தைப் பேசி மகிழ்கின்றார் ஆழ்வார் என்பதை நாமும் எண்ணிக் களிக்கின்றோம்.

இவ்விடத்தில் ஆசாரிய ஹிருதயத்தில் நம்மாழ்வார் உகந்த திவ்விய தேசங்களில் விளங்கும் திருக்குணங்களை ஒவ்வொன்றாக எடுத்துக்காட்டும் பகுதியில் இந்த மூன்று தலங்களிலும் சேர்ந்து ஒன்றாக விளங்கும் திருக்குணத்தை எடுத்துக்காட்டும்.

**"போக்கிய பாகத்வரை, தெளிந்த சந்**
**தைக்கு முன்னில் மூன்றிலும்**
**பிரகடம்"**[8]

8. ஆசா ஹிரு-177 (புருடோத்தம நாயுடு பதிப்பு.)

[போக்யம்-இனிய பொருள்; த்வரை-பதற்றம்; பிரகடம் -தெரியும்]

என்ற சூத்திரம் நம் நினைவுக்கு வருகின்றது. மிக்க பசியுடையான் ஒருவன் சோறுவேதற்கு முன்னே பதற்றத்தினால் அதன அருகே வந்து நிற்பது, இருப்பது, கிடப்பதுமாய்த் தனது அலமாப்பைக் காட்டுவது போன்று, எம்பெருமானும் தனக்கு இனியரான ஆழ்வாருக்குப் பரமபக்தியாகின்ற பக்குவம் பிறக்குமளவும் ஆறியிருக்க மாட்டாமல் தனக்குண்டான பதற்றத்தைச் சீவைகுண்டம், வரகுணமங்கை, புளிங்குடி ஆகிய மூன்று திவ்விய தேசங்களிலும் நிற்பது, இருப்பது, கிடப்பது என்ற நிலைமைகளினால் காட்டியருள்கின்றான் என்பது இதன் கருத்தாகும். இதனை ஆழ்வார் 'தெளிந்த என் சிந்தை அகம் கழியாதே என்னை ஆள்வாய்!'' என்ற விளியினால் ஒருவாறு காட்டியருளும் திறனையும் எண்ணி மகிழ்கின்றோம். பசிகனத்தவன் அன்னம் பக்குவமாகும் இடத்தை விட்டகலாதாப்போலே எம்பெருமானும் ஆழ்வாருடைய பக்திப் பரிபக்குவம் ஆகும் இடமான திருவுள்ளத்தை விட்டு அகலாமல் இருப்பதைக் காட்டுகின்றது இத் தொடர்,

சீவைகுந்தத்தில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானை ஆண்டிற்கு இரண்டு முறை பகலவன் (சூரியன்) வழிபாடு செய்கின்றான் என்பதை அர்ச்சகர் சொல்லக் கேட்கின்றோம். சித்திரைத் திங்கள் ஆறாம் நாளும் ஐப்பசித திங்கள் ஆறாம் நாளும் இளங்கதிரவனின் கிரணங்கள் கோபுரவாயில், மண்டபங்கள் இவற்றையெல்லாம் கடந்து வந்து எம்பெருமானின் திருமேனியைத் தடவி அதனைப் பொன்னிறமாக்குகின்றன. இத்தகைய ஒரு சிறப்பு இத்திருத்தலத்தைத் தவிர வேறிடங்களில் இல்லை என்பதையும் அறிகின்றோம்.

மூலவர், உற்சவர் இவர்களினின்றும் விடைபெறுவதற்கு முன்னர் திவ்விய கவியின் பாசுரம் தம் நினைவிற்கு வருகின்றது.

"தாருடுத்துத் தூசு தலைக்கணியும் பேதையிவள்
நேருடுத்த சிந்தை நிலையறியேன் போருடுத்த
பாவைகுந்தம் பண்டொசித்தான் பச்சைத் துழாய்நாடும்
சீவைகுந்தம் பாடும் தெளிந்து."[9]

[தார்-முடியில் அணியும் மாலை; தூசு-அரையில் உடுத்த வேண்டிய ஆடை; நேர் உடுத்த சிந்தை-நேர்மையாகச் சென்று கொண்டிருந்த மனம்; போர் உடுத்த-போர் புரிவதற்குச் சித்தமான; பாவை-தாடகை; குந்தம்-சூலாயுதம்; ஒசித்தான்-முறித்த திருமால்; நாடும்-விரும்புவாள்]

என்ற பாசுரத்தை ஓதி உளங்கரைகின்றோம். இது 'தலைவியின் இளமை கண்ட செவிலி இரங்கல்' என்ற துறையில் அமைந்தது. தலைமகனைக் (எம்பெருமானைக்) களவொழுக்கத்தால் கூடிப் பிரிந்த தலைமகள் அவன் தன்னைப் பிரிந்தமைக்கு ஆற்றாது மிகவும் வருந்துகின்றாள். அவளது மேனியும் பசந்து மெலிவடைகின்றது. அவளோ அப்பிரானது திருத்துழாய் மாலையைச் சூடுவது, அப்பிரான் எழுந்தருளியிருக்கும் தலங்களின் பெருமையைச் சொல்லி மகிழ்வது முதலிய செயல்களால் ஒருவாறு ஆற்றியிருக்க முயல்கின்றாள். தன் மகளிடம் இவ் வேறுபாடுகளையும் வாய்வெருவுதலையும் காணும் செவிலித் தாய், 'மிக்க இளம் பருவத்தாளாய இவளுக்குப் பருவம் நிரம்பியவர்க்கு வரக்கடவதான தன்மை நேர்ந்தது என்னோ!' என்று இரங்கிக் கூறுவதாக அமைந்தது இப் பாசுரம். 'பிஞ்சாய்ப் பழுத்தாளை ஆண்டாளை' என்றாற் போல வேட்கை பிறவாப் பருவமே தொடங்கி இவள் வேட்கை விஞ்சினள் என்கின்றாள் செவிலி. நமக்கும் எம்பெருமான்மீது காதல் ஏற்பட்டு விட்டதான பாவனையுடன் அவனை வணங்கி விடை பெறுகின்றோம்.

அர்த்த மண்டபத்தை விட்டு வெளிவந்து பிராகாரத்தை வலம் வருகின்றோம். இங்ஙனம் வலம் வருங்கால்

9. நூற் திருப் அந்—53

கன்னிமூலையில் வைகுந்த வல்லி நாச்சியாரும் அதற்கு எதிராக இருக்கும் திசையில் சோரநாத நாச்சியாரும் தனித்தனிக்கோயில் கொண்டு இருப்பதைக் காண்கின்றோம் சோரநாத நாயகியின் சந்நிதியைக் கடந்து வருங்கால் வைகுந்த வாசலைக் (பரமபத வாசல்) காண்கின்றோம். இந்த வாசல் ஆண்டுவோறும் வைகுண்ட ஏகாதசியன்று ஒரு முறை திறக்கப்படும் என்பதையும் அறிகின்றோம். இந்தத் திருவாசலின் அருகில்தான் மணவாள மாமுனிகளின் சந்நிதி உள்ளது. அந்த ஆசாரிய புருடனைச் சேவித்துவிட்டு மேலும் நடந்தால் சிலை உருவில் தசாவதாரக் காட்சியும், இதற்கு எதிர்த்திசையில் தென்கிழக்கு மூலையில் தனிக்கோயில் கொண்டுள்ள யோகநரசிம்மரின் காட்சியும் நம் கண்ணில் படுகின்றன. இந்த யோகநரசிம்மரின் முன்னிலையில் செப்புச்சிலை உருவில் அழகிய வடிவில் இலக்குமி நரசிம்மர் அமர்ந் திருப்பதையும் காண்கின்றோம். இந்தச் சந்நிதியில் செவ்வாய்க்கிழமை தோறும் இரவில் சிறப்பான பூசை நடக்கிறதாகவும் அறிகின்றோம்.

இவர்களையெல்லாம் சேவித்து விட்டு வெளி வருங்கால் பலிபீடம்; கண்ணன் குறடு, இவற்றிற்கு வடபுறம் ஒரு பெரிய மண்டபம் ஆகியவற்றைக் காண்கின்றோம். இந்த மண்டபத்தில்தான் திருவேங்கடமுடையானின் சந்நிதி உள்ளது. இத்திருக்கோயிலின் சிற்பச் சிறப் பெல்லாம் இம் மண்டபத்தில்தான் உள்ளது. இச் சிறப்பை விளக்குவதற்கு ஒரு பாஸ்கரத் தொண்டைமான்தான்[10] அருகில் இருக்க வேண்டும். நாம் ஓரளவு

---

10. மாவட்ட ஆட்சியாளராகத் திகழ்ந்து பல நூல்களை எழுதித் தமிழுலகிற்கு அளித்தவர். இவரது ‘வேங்கடம் முதல் குமரி வரை’ என்ற தலைப்பில் வெளியான நான்கு நூல்களும் தமிழ் கூறு நல்லுலகத்தின் பாராட்டு தலைப் பெற்றவை. இவர் இன்று வைகுந்தவாசி.

சிற்பங்களைக் கண்டு மகிழ்ந்தாலும் அவர் தரும் விளக்கம் நம்மைச் சுவையின் கொடு முடியில்கொண்டு செலுத்தும்.

இந்தத் திவ்விய தேசத்தில் ஆறு கல்வெட்டுகள் இருப்பதையும் தெரிந்துகொள்ளுகின்றோம். ஒரு கல் வெட்டு தேவர்பிரான்தாதருக்குக் கோனேரி மேல் கொண்டான் வல்லநாட்டில் ஐந்து மா அளவு நிவம் மடைப்புற இறையிலியாகக் கொடுத்ததைக் குறிக்கின்றது. மற்றொரு கல்வெட்டால் வைகுந்தவல்லித் தாயாரைப் பிரதிட்டை பண்ணியவர் திருவரங்கப்பெருமான் பல்லவராயர் என்று அறிகின்றோம். சடாவர்மன் குலசேகரர், கோனாடு கொண்ட சுந்தர பாண்டியத் தேவர் முதலியோர் செய்த திருப்பணி விவரங்களும் இக் கல்வெட்டு களால் அறியக் கிடக்கின்றன. வடநாடு வரைச் சென்று சைவ சமயத்தை நிலைநாட்டி அமிழ்தினுமினிய அருந் தமிழைப் பரப்பிய குமரகுருபர அடிகள் பிறந்திருளியதும் இத்திருத்தலத்தில்தான். இப்பெரியார் பெயரால் திருப் பனந்தாள் காசி மடத்தின் பேருதவியால் நீண்ட நாட் களாக ஓர் உயர்நிலைப் பள்ளி நடைபெற்று வருகின்றது. சில ஆண்டுகட்கு முன்னர் இவர் பெயராலேயே அத் திருமடத்தின் உதவியால் ஒரு கலைக் கல்லூரியும் தொடங்கப்பெற்று நன்முறையில் இயங்கி வருகின்றது. இச்செய்திகளை அறிந்த வண்ணம் வரகுணமங்கை என்னும் திவ்விய தேசத்திற்குப் பயணமாகின்றோம்.

# 13. வரகுணமங்கை விசயாசனர்

இருள் தருமா இவ்வுலகில் தோன்றிய மக்களுக்கு இன்பம் உண்டாவதற்கு இரண்டு வழிகள் உள்ளன. மெய், வாய், கண், செவி, மூக்கு ஆகிய ஐம்பொறி களால் அறிதற்குரிய பொருள்களை அநுபவிக்கும் பொழுது உள்ளத்தில் இன்ப உணர்ச்சி உண்டாகும். தமக்கு இனிய உறவினரை, நண்பர்களை, இனிய காட்சி களைக் கண்ணாற் காணும்போது உள்ளத்தில் இன்பம் உண்டாகும்; தம் மக்களின் மழலைச் சொற்கள், இனிய இசை முதலியவற்றைக் காதினால் கேட்கும்பொழுதும் உள்ளத்தில் இன்பம் தோன்றும். இவ்வாறே பிற பொறி கட்கும் எடுத்துக்காட்டுகள் தரலாம்.

இங்ஙனம் ஐம்பொறிகளின் தொடர்பால் இன்பம் உண்டாவதன்றி இவற்றின் தொடர்பின்றியே உள்ளத் தில் இன்பம் உண்டாதலும் உண்டு, அதுவே மிகவும் உயர்ந்த இன்பம் துன்பமான செயலை அநுபவித்துக் கொண்டே மனத்தில் இன்பம் உறுதலும் உண்டு. நாட்டின் விடுதலைக்காகப் பாடுபட்ட தேச பக்தர்கள் சிறைச்சாலையையே தவச் சாலையாக மகிழ்ச்சியுடன் ஏற்ற செயலை இதற்கு எடுத்துக்காட்டாக கொள்ள லாம். நம்மாழ்வாருக்கு எம்பெருமானை நினைக்க நினைக்க அவர் உள்ளத்தெழுந்த இன்பம் உடல்தொடர் பில்லாதது; அஃது உயிரை ஒட்டிய இன்பமாகும். ஐம்பொறி இன்பமாயின் அவ்வப் பொறிகளால் அநு

பவித்தற்கு உரிய பொருள்கள் இல்லாதபொழுது இன்பம் உண்டாகாது. ஆழ்வார் எம்பெருமானை ஊனக் கண்ணாற் கண்டிலர்; நினைந்து நினைந்தே இன்புற்றனர்; ஞானக் கண்ணாற்கண்டு இன்புற்றனர். அதனால் அவருடைய இன்பம் தடையின்றி நிகழ்ந்தது.

உலகப் பொருள்களில் இன்பம் தரத்தக்க பல்வேறு பொருள்களால் உண்டாகும் இன்பம் எல்லாம் ஒன்று சேர்ந்தாற்போல் எம்பெருமானை நினைத்தலால், ஆழ்வார் உள்ளத்தில் இன்பம் உண்டாயிற்று. அத்தகைய அவர் நிலைமையை அவர் பாசுரங்களில் கண்டு தெளியலாம்.

''தேனும் பாலும் கன்னலும்
அமுதும் ஆகித் தித்திப்ப,
யானும் எம்பி ரானையே
ஏத்தி னேன்யான் உய்வானே.[1]''
(கன்னல்-சருக்கரை)

என்ற பாசுரப் பகுதியில் தேன், பால் சருக்கரை, அமுதம் ஆகிய எல்லாவற்றின் இன்பமும் எம்பெருமானை நினைதலால் தனக்கு உண்டாவதாகக் கூறுகின்றார் ஆழ்வார். அப்படி இன்பம் உண்டாவதால்தான். தான் எப்பொழுதும் எம்பெருமானை ஏத்துவதாகச் செப்புகின்றார். அப்படி எம்பெருமானை நினைந்து ஏத்தி இன்பம் அடைவதால்தான் தான் உயிர் வாழ்ந்திருப்பதாகவும் மொழிகின்றார். அப்படி இல்லாவிடில் தான் உயிர் வாழ்தல் இயலாது என்றும் அறுதியிட்டு உரைக்கின்றார். ''யான் உய்வான் ஏத்தினேன்'' என்ற தொடர் இதனைக் காட்டுகின்றது. உய்தல் என்பது இங்கு நற்கதி யடைதலாகும்; உயிர் பிழைத்திருத்தல் என்பது பொருள். 'உண்ணும் சோறும் பருகும் நீரும்

1. திருவாய் 4.3.10

தின்னும் வெற்றிலை எல்லாம் கண்ணன்'[2] என்று கூறிய பெருமான் அல்லவா?

சீவைகுண்டத்திலிருந்து 'சிற்றுந்தில்' வரும் பொழுதே இந்த எண்ணங்கள் நம் மனத்தில் குமிழியிட்ட வண்ணம் உள்ளன. நம் சிற்றுந்து வரகுணமங்கையை வந்து அடைகின்றது. வரகுண மங்கை என்ற இத் திவ்விய தேசம் சீவைகுண்டத்திற்குக் கிழக்கே தூத்துக்குடி செல்லும் சாலையில் ஒரு கல் தொலைவில் உள்ளது. நவ திருப்பதிகளுள் இஃது ஏழாவது தலமாகும்; தண்பொருநை யாற்றின் வடகரையில் உள்ளது. நம் உந்தினைக் கோயி லருகில் நிறுத்தி விட்டுத் திருக்கோயில் எம்பெருமானைக் காண விரைகின்றோம். திருக்கோயிலில் நுழைந்து கருவறையில் இருந்த திருக்கோலத்தில் கிழக்கே திருமுக மண்டலம் கொண்டு சேவை சாதிக்கிம் விசயாசனரையும் (வெற்றி இருக்கைப் பெருமாள்) வரகுண வல்லித் தாயாரை யும் சேவிக்கின்றோம். நம்மாழ்வாரின்,

''புளிங்குடிக் கிடந்து வரகுண மங்கை
இருந்துவை குந்தத்துள் நின்று,
தெளிந்தஎன் சிந்தை அகங்கழி யாதே
என்னையாள் வாயெனக் கருளி,
நளிர்ந்தசீர் உலகம் மூன்றுடன் வியப்ப
நாங்கள்கூத் தாடிநின்று ஆர்ப்ப,
பளிங்குநீர் முகிலின் பவளமபோல் கனிவாய்
சிவப்பநீ காணவா ராயே.''[3]

[அகம்கழியாதே-அங்குவிட்டுப் பிரியாமல்; நளிர்ந்த-குளிர்ந்த; சீர்-திருக்குணம்; முகில்-மேகம்]

என்ற திருவாய்மொழிப் பாசுரத்தை மிடற்றொலி கொண்டு ஓதி உளங்கரைகின்றோம்.

இத்தலத்து எம்பெருமானை நம்மாழ்வார் மட்டிலும் மேற்குறிப்பிட்ட ஒரே ஒரு பாசுரத்தால் மங்களாசாசனம்

2. திருவாய் 6.7:1 3. ஷை 9.2:4

செய்துள்ளார். அதுவும் இந்தப் பாசுரம் நேரே இவரை மங்களாசாசனம் செய்ததன்று. அண்மையிலுள்ள திருப்புளிங்குடி எம்பெருமானை மங்களாசாசனம் செய்த திருவாய்மொழிப் பதிகத்தில் இப்பாசுரம் வருகின்றது. புளிங்குடி எம்பெருமானை மங்களாசாசனம் செய்து கொண்டிருக்கும் பொழுதே வரகுணமங்கை எம்பெருமானும் வைகுந்தநாதனும் விழுந்தடித்துக் கொண்டு ஓடிவந்து இவர் பாசுரத்தால் மங்களாசாசனம் பெறுகின்றனர். இப்பொழுது,

**''யான்ஒட்டி என்னுள் இருத்துவம் என்றிலன்,**
**தான்ஒட்டி வந்துஎன் தனிநெஞ்சை வஞ்சித்து,**
**ஊன்ஒட்டி நின்றுஎன் உயிரில் கலந்து,இயல்**
**வான்ஒட்டு மோஇனி என்னை நெகிழ்க்கவே?''[4]**

[ஒட்டி-இசைத்து: என்றிலன் - நினைத்திலேன்; வஞ்சித்து-வசீகரித்து; ஊன்-உடல்; இயல்வான்-இப்படி நடக்கிறவன்; நெகிழ்க்க-நீங்க; ஒட்டுமோ-இசைவனோ.]

என்ற திருவாய்மொழியை ஓதி உளங்கரைகின்றோம்.

இந்த நிலையில் திவ்விய கவி பிள்ளைப் பெருமாள் அய்யங்கார் அவர்களின் திருப்பாசுரமும் நம் நினைவிற்கு வருகின்றது.

**''காலமும் நோயும் கருதாத அன்னைமீர்**
**வேலன் வெறியை விலக்குமின்கள்—மாலாம்**
**வரகுண மங்கையன்றாள் வண்துழாய் மேல்ஆ**
**தரகுண மங்கை தனக்கு,''[5]**

[காலம்-பருவம்; வெறி-வெறியாட்டு; மால்ஆம்-திருமாலாகிய; தாள்—திருவடியில் சாத்திய; வள்துழாய் மேல்-வளப்பமுள்ள திருத்துழாயின்மீது; ஆதாரகுணம்-ஆசையாகிய குணம்.]

என்பது பாசுரம். இதனையும் ஓதுகின்றோம். களவொழுக்கத்தால் தலைமகளைக் கூடிய தலைமகன் (எம்

4. திருவாய் 1.7:7 5. நூற். திருப். அந்—55

பெருமான்) பின்பு அவளை வெளிப்படையாக மணஞ் செய்துகொள்ளும் பொருட்டுப் பொருள் தேடி வருவதற்காகப் பிரிகின்றான். குறித்த காலத்தில் வருவதாகச் சொல்லிப்போனவன் வரவில்லை. அந்நிலையில் அவன் பிரிவினை ஆற்றமாட்டாது மிகவும்வருந்துகின்றாள் தலைமகள். இந்நிலையில் தலைமகளைக் காணும் செவிலித் தாயார் அவளது வடிவு வேறுபாட்டை நோக்கி, 'இவள் இங்ஙனம் மெலிவதற்குக் காரணம் என்னோ?' என்று கவலையுற்றுக் கட்டுவிச்சியைக் குறி கேட்கின்றனர். அவளும் தன் குலமரபுப்படி நெல் முதலியவை கொண்டு ஆராய்ந்து 'இவளுக்கு முருகக் கடவுள் ஆவேசித்த தொழியப் பிறிது ஒன்றும் இல்லை' என்று கூறுகின்றாள். அதுகேட்ட செவிலித்தாயர் உடனே தலைமகள் பக்கல் தமக்கு உள்ள அன்பின் மிகுதியால் வேலனைக்கொண்டு வெறியாட்டயரத் தொடங்குகின்றனர். நோய் ஒன்றும் மருந்தொன்றுமாதலால் தான் காதலித்த புருடோத்தமனான தலைமகனது தகுதிக்கு ஏலாத அச்செயலை நோக்கித் தலைமகள் மேன்மேலும் வருந்துகின்றாள். அவளது துன்பத்தின் உண்மைக் காரணத்தை உணர்ந்த அவள் ஆருயிர்த்தோழி அச்சமயத்தில் செவிலியரை நோக்கி வெறி விலக்கித் தலைமகளது துன்பத்தின் உண்மைக் காரணத்தை உணர்த்துவதாக அமைந்த துறை இது. நாமும் தலைமகளின் நிலை எய்தி வரகுணமங்கை எம்பெருமானைக் காதலிப்பதாகப் பாவனை செய்து கொண்டு வழிபடுகின்றோம். பரிபூரண பிரம்மாநுபவம் பெற்ற நிலையில் திருக்கோயிலை விட்டு வெளி வருகின்றோம். திருக்குளந்தை என்னும் திவ்வியதேசத்துக்குச் செல்லச் சித்தமாகின்றோம்.

# 14. திருக்குளந்தை மாயக்கூத்தன்

மயர்வற மதிநலம் அருளப் பெற்ற நம்மாழ்வார் ''தீது அவம் கெடுக்கும் அமுதம்''[1] என்று ஒரு பாசுரத்தில் சிறப்பித்துப் பேசியுள்ளார். இத்தொடரிலுள்ள 'தீது', 'அவம்' என்ற இரண்டு சொற்களும் ஒரே பொருளைக் கொண்டவை. அப்படியிருக்க இங்கு இரண்டு சொற்களைக் கொண்டு ஒரே பொருளைக் குறிப்பது ஒரு சிறந்த கருத்தினை விளக்குதற் பொருட்டாகும். சஞ்சிதம், ஆகாமியம் என்ற இருவகை வினைகளையும் இறைவன், இருவகைப் பற்றும் அற்று மெய்யுணர்வு பெற்ற பெரியோர்களிடமிருந்து போக்கிவிடுகின்றான் என்பதை உணர்த்தற்பொருட்டே இங்ஙனம் கூறியுள்ளார் என்பது ஈண்டு அறியத்தக்கது. அன்றியும், கழுவாய் (பிராயச்சித்தம்) இல்லாத வினைகளும் கழுவாய் உள்ள வினைகளுமாகிய இருவகை வினைகளையும் குறிப்பதற்காகவே இங்ஙனம் 'தீது', 'அவம்' என்று இரு சொற்கள் பெய்து கூறினர் என்றும் கொள்ளலாம்.

உடலுக்கு ஏற்படும் பிணிகளைப் போக்கும் மருந்துகளில் உண்பதற்கு இனிமை இல்லனவும் உண்டு; உண்பதற்கு இனிமை உடையனவும் உண்டு. பால் ஒரு சிறந்த மருந்தாகப் பயன்படுதலின் அது 'பாலமிழ்தம்' என்ற பெயராலும்வழங்கப்பெறுகின்றது. பால் பருகுவதற்கு இனிமையுடையதாயும் சில நோய்களைப் போக்குவதாகவும்

1. திருவாய் 2.7:3

உள்ளது. அங்ஙனமே, 'தேனும் பாலும் கன்னலும் அமுத மாகித்'[2] தித்திக்கும் எம்பெருமானும் தன் அடியார்க்கு நேரிடும் இருவகை வினைகளாகிய பிணிகளை அவர்களை வருத்திப் போக்கும் இயல்பினை உடையவன் அல்லன்; அவர்களை மகிழ்வுற்றிருக்கச் செய்தே போக்குவான். உண் பதற்கு இனியதாய் உண்டாரைத் தேவராக நெடுங்காலம் வாழ்ந்திருக்கச் செய்யும் அமுதம் போன்றவன் இறைவன் என்பதனைக் குறிப்பிடுவதற்கென்றே ஆழ்வார் அவனை "தீது அவம் கெடுக்கும் அமுதம்" என்று உரைத்தார் என்று கொள்ளல் வேண்டும்.

இந்த எண்ணங்கள் நம் மனத்தில் எழுந்த வண்ணம் 'திருக்குளந்தை' என்ற திவ்விய தேசத்தை நோக்கிச் 'சிற்றுந்தில்' வந்து கொண்டிருக்கின்றோம். திருக் குளந்தை என்ற இத் திருத்தலம் சீவைகுண்டம் என்னும் புகைவண்டி நிலையத்திலிருந்து வடகிழக்கில் ஏழு கல் தொலைவிலுள்ளது. இது நவதிருப்பதிகளுள் எட்டாவ தாகும். தண்பொருநை ஆற்றின்வடகரையிலுள்ளது. ஊருக் கருகில் பெரிய குளம் (ஏரி) இருப்பதால் அப் பெயரால் இத் தலம் 'பெருங்குளம்' என்ற பெயரையும் பெற்றது போலும்! திருக்கோயில் ஊரின் மேற்குப் பக்கத்தில் உள்ளது. ஊரை வந்தடைந்ததும் நம் வாகனத்தைக் கோயிலின் மதிலருகில் நிறுத்திவிட்டு நேராகத் திருக்கோயிலில் நுழைகின்றோம். நின்ற திருக்கோலத்தில் கிழக்கே திருமுக மண்டலம் கொண்டு சேவை சாதிக்கும் மாயக்கூத்தனையும், குளந்தை வல்லி நாச்சியாரையும்வணங்குகின்றோம். நம்மாழ்வாரின்,

"கூடச்சென் றேன்இனி என்கொ டுக்கேன்?
　　கோல்வளை நெஞ்சத் தொடக்கம் எல்லாம்,
பாடற்(று) ஒழிய இழந்து வைகல்
　　பல்வளை யார்முன் பரிச ழிந்தேன்;

2. திருவாய் 4.3:10

மாடக் கொடிமதிள் தென்குளந்தை
வண்குட பால்நின்ற மாயக் கூத்தன்
ஆடல் பறவை உயர்த்த வெல்போர்
ஆழி வலவனை ஆதரித்தே.''[3]

[கோல்வளை-அழகிய வளை; பாடு அற்று-மீதியில்லாமல் நீங்கி; வைகல்-நெடுங்காலமாகவே; குடபால்-மேற்குப் பக்கம்; பறவை-கருடன்; ஆழிவலவன்-சக்கரத்தை வலக் கையில் உடையவன்.]

என்ற நம்மாழ்வாரின் திருவாய்மொழிப் பாசுரத்தை மிடற்றொலி கொண்டு ஓதுகின்றோம். இது 'மகள் பாசுரமாகச்' செல்லுகின்றது. நாமும் நாயகி நிலையை அடைய முயன்று ஓதி உளங்கரைகின்றோம்.

எம்பெருமானுடன் கலந்து பிரிகின்றாள் ஒருபிராட்டி. அவன் மறுபடியும் தன்னிடம் வரும் வரையில் அவளால் பொறுத்திருக்க முடியவில்லை. ஆகவே, தானே அவன் இருக்கும் இடத்தை நோக்கிப் புறப்படுகின்றாள். இது கண்ட தோழிமார் முதலானோர் படி கடந்து இங்ஙனம் அவள் புறப்படுவது அவள் நிலைக்கு ஆகாது என்று அறிவுரை பகன்று அவளை நிறுத்தப் பார்க்கின்றனர். அவளோ தனக்கு எம்பெருமான் விஷயமொன்று தவிர மற்று எதிலும் நசை இல்லாமையைச் சொல்லி அவர்கள் அறிவுரைக்குத் தன்னால் இணங்க முடியாமையைச் சொல்லுவதாகஅமைந்தது இப்பாசுரம். இதில் நம்மாழ்வார் நாயகி சமாதியில் நின்று பேசுகின்றார். இத் திருத்தலத்தை இவர் மட்டிலுமே இந்த ஒரே பாசுரத்தால் மங்களாசாசனம் செய்துள்ளார்.

'மாயக்கூத்தன்' என்ற எம்பெருமானின் திருநாமம் நம்மைப் பல்வேறு கோணங்களில் சிந்திக்க வைக்கின்றது. ஒரு நோக்கில் ஒரு குருவி பிணைத்த பிணை போலே மாயப்பிணையொன்று பிணைத்து அதிலே எல்லோரையும்

3. திருவாய் 8. 2 : 4

மயக்கி இப்படியொரு கூத்துக் காண்பவன் என்று பொருள் கண்டு மகிழ்கின்றோம். பிறிதொரு நோக்கில், சங்கல்பம் என்னும் மாயையினால் திருவவதாரங்கள் செய்து அவற்றில் குடக்கூத்து, மரக்கால் கூத்து, குரவைக்கூத்து என்னும் படியாகப் பலவகைக் கூத்துகளைச் செய்து தன் செய்கைகளால் நம்மை மனங்குழைந்து அவனோடு ஈடுபடச் செய்பவன் என்று பொருள் கண்டு உவக்கின்றோம். மற்றுமொரு நோக்கில்,

''சூட்டுநன் மாலைகள் தூயன
ஏந்தி, விண் ணோர்கள் நன்னீர்
ஆட்டிஅம் தூபம் தராநிற்க
வேயங்கு,ஓர் மாயையினால்
ஈட்டிய வெண்ணெய் தொடுவுண்ணப்
போந்(து)இமில் ஏற்றுவான்கூன்
கோட்டிடை ஆடினை கூத்து, அடல்
ஆயர்தம் கொம்பினுக்கே.''[4]

[நல்நீர் ஆட்டி-திருமஞ்சனம் செய்து; அம்தூபம்-அழகிய தூபம்; தொடு உண்ண-களவினால் உண்ண; அடல்-வலிமையுடைய; கொம்பினுக்குநப்-பின்னைக்கு; இமில்-முசுப்பு; வல்கூன் கோடு-வலிய வளைந்த கொம்பு ]

என்ற ஆழ்வார் பாசுரத்தையே நினைக்கின்றோம். ''பரமபதத்தில் நித்திய சூரிகள் திருமஞ்சனம் சமர்ப்பித்துத் திருமாலை சாத்தித் தூபம் காட்டும் அளவில் அப் புகையினால் திருமுக மண்டலம் மறையும் அந்தக் குறுகிய காலத்தில் வெண்ணெய் அமுதை நினைத்து அவசரமாகத் திருவாய்ப் பாடியில் எழுந்தருளி நம் பின்னைப் பிராட்டியின் பொருட்டு எருதுகளை அடர்த்து அவளை மணம் புணர்ந்தனை; உன்னுடைய ஆற்றலின் சிறப்பை என் சொல்ல வல்லோம்!'' என்று ஆழ்வார் ஈடுபட்டுப் பேசுவதில் மனங்குழைகின்றோம். நம்

4. திருவிருத்-21

நெஞ்சினாலும் நினைக்க வொண்ணாத இத் திருக்கூத்தில் உள்ளத்தைப் பறிகொடுக்கின்றோம்.

இன்னும் ஒரு நோக்கில் ஆழ்வார் பெருமக்கள் அவனது ஆச்சரியமான செயல்களில் பறிகொடுத்துப் பாசுரங்கள் இட்டருளியதை எண்ணி எண்ணிக் களிக்கின்றோம். 'வெணணெய் விழுங்கி வெறுங்கலத்தை வெற்பிடை இட்டு அதன் ஓசை கேட்டல்'[5] 'புண்ணில் புளிப் பெய்தாம் ஒக்கும் தீமைகளை மனைதோறும் செய்தல்,[6] 'உருகவைத்த குடத்தொடு வெண்ணெய் உறிஞ்சி உடைந்திட்டுப்போந்து அருகிருந்தார் தம்மை அநியாயம் செய்தல்'[7] 'இல்லம் புகுந்து ஒரு மகளைக் கூவிக் கையில் வளையைக் கழற்றிக் கொண்டு தொல்லையில் நின்றும் கொணர்ந்து விற்ற அங்கொருத்திக்கு அவ்வளை கொடுத்து நல்லன நாவற்பழம் கொண்டு நானல்லேன் என்று சிரித்தல்'[8] 'ஆற்றிலிருந்து விளையாடுவோர்களைச் சேற்றால் எறிந்து வளை துகில் கைக்கொண்டு காற்றிற் கடியனாய் ஓடி அகம் புகுதல்'[9] 'வண்டமர் பூங்குழலார் துகில் கைக்கொண்டு விண்தோய் மரத்தேறுதல்'[10] 'மச்சொடு மாளிகை ஏறி மாதர்கள் தம்மிடம் புக்குக் கச்சொடுபட்டைக் கிழித்துக் காம்பு துகில் அவை கீறி நிச்சலும் தீமைகள் செய்தல்'[11] 'சீமாலிகன் தன்னொடு தோழமை கொண்டு சாமாறு அவனை எண்ணிச் சக்கரத்தால் தலை கொள்ளல்'[12] 'தேனுகன் ஆவி செகுத்து வானவர்கோன்விட்ட மழைதடுத்து ஆநிரை காத்தல்'[13] 'தடம்படு தாமரைப் பொய்கை கலங்கி விடம்படு நாகத்தை

---

5. பெரியாழ். திரு. 2. 9 : 1
6. ஷை. 2. 9 : 1
7. ஷை. 2. 9 : 3
8. ஷை. 2. 9 : 10
9. ஷை. 2. 10 : 1
10. ஷை 2. 10 : 2
11. ஷை. 2. 7 : 3
12. ஷை. 2. 7 : 8
13. ஷை. 2. 10 : 4

வால்பற்றி ஈர்த்து படம்படு பைந்தலைமேல் எழுப் பாய்தல்'[14] 'கஞ்சனும் காளியனும் களிறும் மருதும் எருதும் வஞ்சனையின் மடிவளர்தல்'[15] 'மாதவத்தோன் புத்திரன் போய் மறிகடல்வாய் மாண்டானை ஓதுவித்த தக்கணையா உருவுருவே கொடுத்தல்'[16] 'மாயச் சகடம் உதைத்து மருது இறுத்து ஆயர்களோடு ஆநிரைகாத்தல்'[17] 'ஆயனாகி ஆயர் மங்கைவேய்தோள் விரும்புதல்'[11] 'தாய் முலைப் பாலில் அமுதிருக்கத் தவழ்ந்து தளர்நடையிட்டுச் சென்று பேய் முலை வாய் வைத்து நஞ்சை உண்டு பித்தன் என்றே பிறர் பேச நிற்றல்'[19] 'குன்றினால் குடைகவித்தல் கோலக்குரவை கோத்தல் குடமாடல் கன்றினால் விளைவு எறிதல் காலால் காளியன் தலைமிதித் தல்'[20] 'ஒளியா வெண்ணெய் உண்டான் என்று உரலோடு ஆய்ச்சி ஒண் கயிற்றால் விளியா ஆர்க்க ஆப்புண்டு விம்மி அழுதல்'[21] 'பெண் ஆகி இன்னமுதம் வஞ்சித்தல்'[22] 'மஞ்சு உயர் மாமணிக்குன்றம் ஏந்தி மாமழைகாத்து ஒரு மாய ஆனை அஞ்சி அதன் மருப்பினை வாங்குதல்'[23] 'இருங்கைமா கரி முனிந்து பரியைக் கீறி இனவிடைகள் ஏழடர்த்து மருதம் சாய்த்து வருசகடம் இறஉதைத்து மல்லைஅட்டு வஞ்சகம்செய் கஞ்சனுக்கு நஞ்சுஆதல்'[24] 'கள்ளக் குறள் ஆய் மாவலியை வஞ்சித்து உலகம் கைப்படுத்துதல்'[25] 'பூங்குருந்து ஒசித்து ஆனைகாய்ந்து அரிமாச்செகுத்து ஆங்கு வேழத்தின் கொம்பு கொண்டு வன்பேய் முலைவாங்கி உண்டல்'[26] 'வார்கடாஅருவியானை

14. ஷை. 2. 10 : 3
15 ஷை. 4. 3 : 2
16. ஷை. 5. 8: 8
17 ஷை. 3. 9 : 9
18. திருச்சந், 41
19. ஷை. 6 : 4
20. பெரி. திரு. 7:9
21. ஷை 6.7:4
22. ஷை 2.5:8
23. ஷை 2.8:4
24. பெரி. திரு. 2.10:7
25. ஷை திரு. 5. :2
26. ஷை திரு. 11.2:2
27. திருவாய் 8.4:1

மாமலையின் மருப்பினைக் குவடு இறுத்து உருட்டி ஊர்கொள் திண்பாகன் உயிர் செகுத்து அரங்கின் மல்லரைக் கொன்று போர் கொடா அரசர் புறக்கிட மாடமாமிசைக் கஞ்சனைத் தகர்த்தல்'[27] 'பற்றலர்வீயக் கோயில் கையில் கொண்டு மலைபுரைதோள் மன்னவரும் மாரதரும் மற்றும் பலர் குலைய நூற்றுவரும் பட்டழியப் பார்த்தன் சிலை வளையத் திண்தேர் மேல் முன்னிற்றல், பாழியால் மிக்க பார்த்தனுக்கருளிப் பகலவன் ஒளிகெடப் பகலே ஆழியால் அன்றங்கு ஆழியை மறைத்தல் போன்ற ஆழ்வார்கள் அநுசந்தித்த மாயக்கூத்துகள் பலவற்றையும் நாம் இப்பொழுது அநுசந்தித்து உடல் புளகாங்கிதம் அடைகின்றோம். அந்த மாயக்கூத்துகள் யாவும் ஒன்றன் பின் ஒன்றாக நம் மனத்திரையில் எழுகின்றன.

இந்நிலையில் ஆசாரிய ஹிருதயத்தின்,

**''சாதரரைப் பரிசளிக்கும் சேஷ்டிதாச்சரியம், குளத்தே கொடி விடும்',[28]**

(சாதரர்-அன்பினையுடையவர்கள்; சேஷ்டிதம்-செயல்; குளம்-திருக்குளந்தை; கொடிவிடும்-மிக்குத்தோன்றும்]

என்ற சூத்திரமும் நம் மனத்தில் குமிழியிடுகின்றது. பெண்களுக்குரிய நாணம் முதலியவற்றை அழிக்கும் மாயக்கூத்தன் என்கின்ற சேஷ்டிதாச்சரியம் இத்திருப்பதியில் விளங்கும் என்பது இதன் கருத்து. மேற்குறிப்பிட்ட எம்பெருமானின் சேஷ்டிதங்கள் யாவும் இத்திருத்தலத்தில் மிக்குத்தோன்றுவதாக நாமும் கருதுகின்றோம்.

திருத்தலங்களையெல்லாம் அடைவுபடுத்தி வைணவ சம்பிரதாயத்திற்கு ஒரு நிலையான வடிவம் தந்தருளிய திவ்விய கவியின் பாசுரத்தையும் சிந்திக்கின்றோம்.

---

28. ஆசா. ஹிரு. 172

"தனக்குடலம் வேறான
தன்மை உணரான்
மனக்கவலை தீர்ந்துய்ய
மாட்டான்-நினைக்கின்
திருக்குளந்தை யாருரைத்த
சீர்க்கீதை பாடும்
தருக்குளந்தை யாமல்இருந்
தால்."[29]

[தனக்கு-(ஆன்மாவாகிய) தன்னைக் காட்டிலும்; உடலம்-உடம்பு; உய்தல்-நற்கதி அடைதல்; நினைக்கின்-ஆராயுமிடத்து; திருக்குளத்தையார்- எம்பெருமான்; சீர் கீதை- சிறப்பான பகவத் கீதை; தருக்கு-மனக் களிப்பு; உளம்-ஒருவனது உள்ளத்தில்; தையாமல்-பதியாமல்]

என்பது பாசுரம். கண்ணன் அருளிய கீதையைப் படித்து அதன் பொருளை மனத்திற்கொண்டு ஆனந்தம் அடைபவரே 'ஆன்மாவேறு. உடல் வேறு' என்ற தத்துவ உணர்ச்சியால் மனக்கவலை தீர்ந்து வாழ்வர் என்ற உண்மையையும் சிந்திக்கின்றோம். அடுத்து **திருப்புளிங்குடி** என்ற திவ்விய தேசத்தை நோக்கிப் பயணமாகின்றோம்.

---

29. நூற், திருப். அந்-56

# 15. திருப்புளிங்குடிக் காய்சின வேந்தன்

ஆன்மாக்களுக்கு ஈசுவரன் ஒருவனே உண்மை இரட்சகன். ஒரு காரணத்தாலன்றி, இயல்பாகவே அமைந்த எல்லா உறவுமாய், எக்காலத்திலும் கை விடாமல் கண்ணும் கருத்துமாய் நோக்கிக்கொண்டு போகும் பகவானே உயிர்களை இரட்சிக்கும் வன்மை வாய்ந்தவன். இவனை 'நிருபாதிக பந்து' என்று சாத்திரங்கள் வழங்கும். இவனே ஆபத் பந்துவுமாவான். எம்பெருமானையொழிந்த பெற்றோர், சுற்றத்தினர் முதலியவரும், வேறு தேவர்களும் உண்மை இரட்சகர் ஆகார். இவர்கள் பூர்வகன்மம் முதலிய சில காரணங்களினால் உறவினராயும், நமக்கு ஆபத்து வந்த காலத்தில் அஞ்சி ஒதுங்கி நிற்பவராயும் இருக்கும் பெற்றோரும், மற்றத் தேவர்களும் உயிர்களைக் காக்கும் வன்மை வாய்ந்தவர்கள் ஆகார். இவர்களைச் சாத்திரங்கள் 'ஔபாதிக பந்துக்கள்' என்று பேசும்,

இந்த ஔபாதிக பந்துக்களின் குணங்களைப் பற்றி நம்மாழ்வார் மிகத் தெளிவாக விளக்கியுள்ளார்.

''துணையும் சார்வும் ஆகு
வார்போல் சுற்றத் தவர்பிறரும்
அணைய வந்து ஆக்க
முண்டேல் அட்டைகள் போல்சுவைப்பர்''[1]

1. திருவாய் 9.1:2

துணையும் சார்வுமாகக் கூறிய சுற்றத்தவர் உண்மையில் ஒருவர்கூட இல்லை. அப்படி இருப்பதாகக் காட்டிக் கொள்பவர்கள் இருப்பதை 'ஆகுவார்போல்' என்பதால் குறிப்பிடுகின்றார் ஆழ்வார். இவர்கள் அணுகாமலும் இரார். 'இவர்கள் இரட்சகர்கள்' என்று கண்டோர் பிரமிக்கும்படி மிகவும் நெருங்கியும் இருப்பர். இப்படி இவர்கள் நெருங்கி இருப்பதற்குக் காரணம் என்ன? கைக்கு எட்டும்படியான செல்வம் இருக்குமேயானால் அதனைப் பசையற இரத்தத்தைக் கவர்ந்து குடிக்கும் அட்டைகள்போல் கவர்ந்து கொள்வதற்காக.

'பைத்தியக்காரனைச் சுற்றிப் பத்துப்பேர்; பணக் காரனைச் சுற்றிப் பத்துப் பேர்' என்பது உலகியலைப் பளிங்குபோல் காட்டும் ஒரு பழமொழி. இதனை விளக்குவதுபோல் ஆழ்வார்,

> ''பொருள்கை யுண்டாய்ச் செல்லக்
> காணில் போற்றியென் றேற்றெழுவர்
> இருள்கொள் துன்பத் தின்மை
> காணில் என்னேஎன் பாருமில்லை''[2]

> [போற்றி-புகழ்ந்து; எழுவர்-அகல்வர்; இருள்-அஞ் ஞானம்; இன்மை-வறுமை-]

என்று பாசுரம் அமைக்கின்றார். இதனை யெல்லாம் நன்கு உணர்ந்த ஆழ்வார் எம்பெருமானே உண்மையான பந்து என்று அறுதியிட்டு அவனையே சார நினைக்கின்றார். தான் ஆன்மாக்களின் பந்து என்பதை நிலை நாட்டும் பொருட்டே எம்பெருமான் திவ்விய தேசங்களில் எழுந்தருளியிருக்கின்றான். இதனை எண்ணியே ஆழ்வார் திருப்புளிங்குடி எம்பெருமானைச்சென்று கிட்டுகின்றார்.

இந்த எண்ணங்கள் நம் சிந்தையில் முகிழ்த்த வண்ணம் திருக்குளந்தையிலிருந்து திருப்புளிங்குடியை நோக்கி வந்து கொண்டிருக்கின்றோம். இது நவதிருப்பதி களுள்நான்காவது தலம்.சீவைகுண்டம்என்னும் இருப்பூர்தி

2. திருவாய் 9, 1 : 2

நிலையத்திலிருந்து இரண்டு கல் தொலைவிலுள்ளது இத் திவ்விய தேசம். நம்மாழ்வார் எவ்வளவு ஆர்வத்துடன் அங்குச் சென்றாரோ அந்த ஆர்வத்தில் நாமும் செல்வ தாகப் பாவித்துக்கொண்டு செல்லுகின்றோம். நம் வாகனத்தைச் சாலை யோரத்தில் நிறுத்திவிட்டுத் திருக் கோயிலை நோக்கி நடக்கின்றோம், 'தேவரீரும் பிராட்டிமாரும்கூட எழுந்தருளியிருக்கும் இருப்பை அடியேனுக்குக் காட்டியருளவேணும்; அடியேனைக் கண்டவுடன் அடியேன் முன்னே நாலடி உலாவியருள வேணும்; புன்முறுவல் காட்டி அருளவேணும்; ஒரு வார்த்தை அருளிச் செய்யவேணும்' என்று ஆழ்வார் தம்முடைய மனோரதங்களையெல்லாம் விண்ணப்பம் செய்கின்றார். அவற்றையெல்லாம் எண்ணிய வண்ணம் திருக்கோயி லுக்குள் நுழைகின்றோம். கிடந்த திருக்கோலத்தில் கிழக்கு நோக்கிய திருமுக மண்டலத்துடன் சேவை சாதிக்கும் காய்சின வேந்தனை வணங்குகின்றோம். 'என்றைக்கு இங்கு திருக்கண் வளர்ந்தருளப் புகுந்தானோ அன்று முதல் இன்று வரை ஆடாமல் அசையாமல் சயனித் திருக்கின்றானே! இஃது என்ன சிரமமோ?' என்று ஆழ்வார் நினைந்து இட்ட,

"கொடியார் மாடக் கோளூர்
அகத்தும் புளிங்குடியும்
மடியா தின்னே நீதுயில்
மேவி மகிழ்ந்துதான்
அடியார் அல்லல் தவிர்த்த
அசைவோ? அன்றேல், இப்
படிதான் நீண்டு தாவிய
அசைவோ பணியாயே:"[3]

[மடியாது-இடம் வலம் கொள்ளாமல்; இன்னே-இன்று காண்பதுபோலவே; மேவி-விரும்பி; அல்லல்-துன்பம்; அசைவு-அயர்ச்சி; பணியாய்-கூறியருள வேண்டும்.]

3. திருவாய் 8. 3 : 5

என்ற பாசுரத்தை மிடற்றொலி கொண்டு ஓதுகின்றோம். ''எம்பெருமான் இப்படித் திருக்கண் வளர்வது நம் போன்ற நிலவுலகத்தவர்கட்காக அன்றோ? அதனை அறிந்து அவர்கள் பரிந்து ஈடுபடவேண்டும். அங்ஙனம் ஈடுபடக் காணாமையால் எம்பெருமான் இக்கிடையைவிட்டு எழுந்து போக வேண்டியதே அவன் மேற் கொள்ள வேண்டிய செய்கை. அப்படி எழுந்து போகாமல் இருப்பது என்றேனும் ஒருநாள் யாரேனும் ஒருவர் பரியக்கூடும் என்றே கிடக்கின்றான்'' என்று ஆழ்வார் கருதுகினற படியே நாமும் எண்ணுகின்றோம். இங்ஙனம் கூறியது கிடந்த திருக்கோலத்தில் பிற தலங்களில் சேவை சாதிக்கும் எல்லா எம்பெருமான்களுக்கும் ஒக்கும்; உபலட்சணம். இவ்விடத்தில் திருக்குடந்தை ஆராவமுதனை வினவும் திருமழிசையாழ்வாரின் பாசுரத்தையும் அநுசந்திக்கின்றோம்.

**''நடந்தகால்கள் நொந்தவோ?**
**நடுங்கஞால மேனமாய்,**
**இடந்தமெய் குலுங்கவோ?**
**விலங்குமால் வரைச்சுரம்,**
**கடந்தகால் பரந்தகாவி**
**ரிக்கரைக் குடந்தையுள்**
**கிடந்தவா றெழுந்திருந்து**
**பேசுவாழி கேசனே!''[4]**

[நொந்தல்-வலித்தல்; ஞாலம்-பூமிப்பிராட்டி; ஏனம்-வராகம்; இடந்த-நோண்டித்தூக்கின; மெய்-திருமேனி] என்பது பாசுரம்.

அடுத்து, இத்தலத்து எம்பெருமான்மீது ஆழ்வார் அருளிய திருவாய்மொழிப் பாசுரங்கள் ஒன்றன்பின் ஒன்றாய் நம் மனத்தில் எழுகின்றன.

4. திருச்சந் 61

"பண்டைநா ளாலே நின்திரு வருளும்
பங்கயத் தாள்திரு வருளும்
கொண்டுநின் கோயில் சீய்த்துப்பல் படிகால்
குடிகுடி வழிவந்தாட் செய்யும்,
தொண்டரோர்க் கருளிச் சோதிவாய் திறந்துன்
தாமரைக் கண்களால் நோக்காய்,
தெண்டிரைப் பொருநல் தண்பனை சூழ்ந்த
திருப்புளிங் குடிக்கிடந் தானே."[5]

[*பங்கயத்தாள் - பெரியபிராட்டியார்; சீய்த்து - திருவலகிடுதல், மெழுகுதல், கோலமிடுதல் போன்ற செயல்களைச் செய்து; பல்படிகால் - அநாதிகாலமாக; ஆள்செய்யும் - அடிமை செய்யும்.*]

*என்பது முதற் பாசுரம். வேறு புகலற்ற தன்னைக் குறித்து ஒருசொல் அருளிச் செய்து விடாய் தீரக் குளிர நோக்கி யருளுமாறு வேண்டுகின்றார் ஆழ்வார். வழி வழியாகக் கைங்கரியம் செய்யும் குடிவழி வந்தவராகத் தன்னைக் கருதுகின்றார்.*

*உன் தாமரைக் கண்களால் நோக்காய் : சொல்லில் தோற்றாத பற்றும் நோக்கிலே தெரியும்படிக் குளிர நோக்கி யருளவேண்டும் என்பது இதன் பொருள். இத் தொடர்பற்றிய ஓர் இதிகாசத்தை ஈண்டுச் சிந்திக்கின்றோம். திருவரங்கத்தில் பிள்ளை தேவப் பெருமாளரையர் என்பார் இப் பாசுரத்தைச் சேவிக்கையில் 'உன் தாமரைக் கண்களால் நோக்காய்' என்று ஒரு தடவை சொல்லி நிறுத்தாமல் 'நோக்காய் நோக்காய்.........' என்று பலகாலம் சொல்லிக்கொண்டேயிருந்து மேலடியில் போகமாட்டாது நின்றாராம். அப்போது கேட்போர் கூட்டத்தில் வீற்றிருந்த அவருடைய திருத்தகப்பனார் ஆழ்வார் திருவரங்கப் பெருமாளரையர் எழுந்திருந்து, 'பிள்ளாய், நீ எம்பெருமான் திருவுள்ளம்*

5. *திருவாய் 9. 2 : 1*

புண்படும்படி இங்ஙனம் பலகாலும் சொல்லி வலியுறுத்தலாமோ? அழகிய மிடற்றைத் தந்து, நல்ல பாட்டைத் தந்து, ஐசுவரிய சந்தானங்களையும் அவர் தந்தருளியிருக்க, ஒன்றும் செய்யாதவராக நினைத்து இன்னமும் நோக்காய், நோக்காய்...... என்றால் இஃது என்னே! மேலே பாடுக' என்றாராம்.

அடுத்த பாசுரத்தில் ஆழ்வார் தம்முடைய சேஷத்துவப் பெருமையை எடுத்துக் காட்டுகின்றார். குடிக் கிடத்தல், ஆக்கஞ் செய்தல், தீர்த்த வடிமைக் குற்றேவல் செய்தல், பொன்னடிக் கடவாதே வழி வருதல் ஆகிய நான்கு சிறப்புகளைத் தமக்கு உள்ளனவாகக் குறிப்பிடுகின்றார் ஆழ்வார். குடிக் கிடத்தல் என்பது குலமரியாதை தப்பாதபடி இருத்தல். ஆக்கஞ்செய்தலாவது, குடியில் பண்டு இல்லாத நன்மைகளை உண்டாக்கிக் கொள்ளல். தீர்த்த அடிமைக் குற்றேவல் செய்தல் என்பது, அடிமைக் குற்றேவல் என்றும், தீர்த்த அடிமைக் குற்றேவல் என்றும் இரண்டு வகையுண்டு. எம்பெருமான் திறத்துக் கைங்கரியம் பண்ணுவது அடிமைக் குற்றேவல். அப்போது உலக இன்பங்களிலும் மனம் ஈடுபட்டிருக்கும். அப்படியில்லாமல், தனது அடிமையாலே மற்றைப் பேறுகளில் நசையை அறவே அறுத்த அடிமைக் குற்றேவலே தீர்த்த அடிமைக்கு குற்றேவல் எனப்படும். பொன்னடிக் கடவாதே வழி வருதல் என்பது, அத்யந்த பராதந்திரியத்திற்குச் சேர்ந்ததொரு வழிபாடு. இவற்றை எடுத்துக் காட்டிய ஆழ்வார்,

"நீ ஒருநாள்
படிக்கள வாக நிமிர்ந்தநின் பாத
பங்கய மேதலைக் கணிவாய்"[6]

[படி - பூமி; அளவாக - தகுதியாக; பாதபங்கயம் - திருவடித் தாமரை.]

6. திருவாய் 2. 2:2

என்று திருப்புளிங்குடியானை வேண்டுகிறார். எம் பெருமான் திருவடிகளைத் தன் தலைமேல் வைக்க வேண்டும் என்பது இவரது வேண்டுகோள்.

அடுத்து எம்பெருமானை நோக்கி ஆழ்வார் இவ்வாறு பேசுகின்றார் : "யாரோ ஓர் அன்பர் நின் கிடையழகு காணவேண்டுமென்று ஆசைப்பட்டதற் கிணங்க நீ கண் வளர்ந்தருளினாய். இனியொருவர் வந்து 'கிடந்தவாறெழுந்திருந்து பேசு' என்று ஆசைப் பட்டு வேண்டினால் அதற்குப் பிறகும் கிடந்தருள லாமோ? எழுந்திருக்கவேண்டியதன்றோ உன் கடமை? இடம் வலம் கொள்ளாமல் ஒரே பக்கமாக நெடுங்காலம் சயனித்திருந்தால் சாலவும் சிரமமாக இராதோ? அழகு மிக்க திருமேனிக்கு இது தகுமோ?" என்று கேட்டார். இவர் வேண்டுகோள் :"நீ எழுந்து உன் தாமரை மங்கையும் நீயும், இடங்கொள் மூவுலகுந் தொழஇருந்தருளாய்"[7] என் பது. அதாவது, 'நீ தடங்கொள்தாமரைக்கண் விழிக்க வேணும்; எழுந்திருக்க வேணும்;கைங்கரியம் பெறுவதற்குத் தாமரை மங்கையோடு இருக்கவேணும்; என்னுடைய கோரிக்கையை நிறைவேற்றியருளும்காரணமாக மூவுலகும் தொழ வீற்றிருக்கவேணும்' என்ற ஆழ்வாரின் பாரிப்பை இத்தொடரில் காண்கின்றோம்.

இந்த மூன்று பாசுரங்களையும் கூர்ந்து நோக்கி ஆராயின் இத் திருவாய்மொழியில் சிறப்புமிக்க கைங் கரியாநுரூபமான ஒரு பிறவி சொல்லப்படுவதை அறியலாம். முதல் பாசுரத்தில் 'பல்படிகால் குடி குடி வழிவந்தாட் செய்யும் தொண்டர்' என்றார்; இரண்டாம் பாசுரத்தில் 'உன் பொன்னடி கடவாதே வழி வருகின்ற அடியர்' என்றார்; மூன்றாம் பாசுரமான இதில் 'தொல்லடிமை வழி வருந்தொண்டர்' என்கிறார். இப்படிப்பட்ட மிகச் சிறந்ததான தொண்டக் குலப் பிறவியை வெளியிடும் பதிகமாக இஃது அமைகின்றது. பெரியாழ்வார் 'திருப்

7. திருவாய் 9.2:3

பல்லாண்டு'ப் பதிகத்தில் குறிப்பிடும் 'தொண்டக் குலத்தை யும்'[8] நம்மை இங்கு நினைக்கச் செய்கின்றது.

இதற்கு அடுத்த பாசுரம் புளிங்குடி, வரகுணமங்கை, சீவைகுந்தம் என்ற மூன்று தல எம்பெருமான்களையும் மங்களாசாசனம் செய்வது.[9] அடுத்து, கசேந்திரனுக்குக் காட்சியளிப்பதுபோல் தனக்கும் பெரியதிருவடியின்மீது வந்து காட்சி தருமாறு வேண்டுகின்றார்.

**"கவளமா களிற்றின் இடர்கெடத் தடத்துக்**
**காய்சினப் பறவையூர்த் தானே."[10]**

[இடர்-துன்பம், காய்சினம்-வெவ்விய கோபம்; தடம் — பொய்கைக் கரை,]

என்ற விளியினால் இது விளங்கும். முன் பாசுரத்தில் பவளம்போல் கனிவாய் சிவப்பக் காண வரவேண்டும்' என்று வேண்டினார். இங்கு மேலும் சில மனோரதங் களைத் தெரிவிக்கின்றார். "பவளம்போல் கனிவாய் சிவப்பக் காணவந்து, அதற்குமேல் பன்னிலாமுத்தம் தவழ்கதிர் முறுவல் செய்யவேணும்; அதற்கு மேலே திருக்கண்தாமரை தயங்க நின்றருளவேணும்" என் கின்றார். பல்லாகின்ற நிலாமுத்து நிரையானது கதிர் உள்ளடங்காமலே புறம்பே தவழும்படி புன்முறுவல் செய்யவேண்டும் என்பது ஆழ்வாரின் ஆசை. அதற்கு மேலும் முந்துற நாலடிவந்து, பின்னும் அதுவும் மாட்டாது அசைவற்றவனாய் நிற்கும் நிலை காண வேண்டி "நின் திருக்கண் தாமரை தயங்க நின்றருளாய்'' என்று தம் பாரிப்பைத் தெரிவிக்கின்றார்.

அடுத்த பாசுரம் இத்திருத்தல எம்பெருமான் பெயர் கொண்டு இலங்குவது.

---

8 திருப்பல்—5

9. இதன் விளக்கத்தை 'வரகுணமங்கை' பற்றிய 13-வது கட்டுரையில் காண்க.

10. திருவாய் 9. 2 : 5

"காய்சினப் பறவையூர்ந்து பொன் மலையின்
மீமிசைக் கார் முகில் போல,
மாசின மாலி மாலிமான் என்றங்
கவர்படக் கனன்றுமுன் நின்ற
காய்ச்சின வேந்தே! கதிர்முடி யானே!
கலிவயல் திருப்புளிங் குடியாய்,
காய்சின ஆழி சங்குவாள் வில்தண்
டேந்திஎம் இடர்கடி வானே!"[11]

[காய்சினம்-வெவ்வியகோபம்; மாசினம்-பெரியகோபம்; மான்மாலி-சுமாலி; கனன்று-சீறி; கதிர்முடி-கிரீடம்; கலி வயல்-செழித்த வயல்; இடர்-துன்பம்]

என்பது பாசுரம். இதில் எம்பெருமானைக் '**காய்சின வேந்தே!**' என்று விளித்துப் பஞ்சாயுத ஆழ்வார்களுடன் கூடியிருக்கும் சேர்த்தியழகுடன் தம்முன் தோன்றித் தம் இடர் களையுமாறு வேண்டுகின்றார். திருப்புளிங்குடி எம்பெருமானின் திருநாமம் 'காய்சினவேந்தன்' என்றே ஈட்டாசிரியர் குறிப்பிடுகின்றார், 'காய்சின வேந்து' எப் படியோ 'காசினிவேந்து' என்றாகி அத்துடன் நில்லாமல் காசினி என்று பூமிக்குப் பெயராதலால் 'காசினி வேந்து' என்ற தொடர் 'பூமிக்கு அரசன் என்று பெயர் களைப் பெற்று, இத்தலத்து எம்பெருமானைப் 'பூமி பாலன்' என்ற வட சொல்லால் வழங்கி வருகின்றனர். இது சென்னையிலுள்ள 'ஹாமில்டன் வாராவதி' என்பது சாதாரண மக்கள் பேச்சு வழக்கில் 'அம்பட்டன் வாராவதி' என்றாகி, இதுவே நாளடைவில் Barber's Bridge என்ற பெயராகி நாளடைவில் இப்பெயரே மாநகரப்பதிவேடுகளிலும் ஏறிவிட்ட கதை போலாயிற்று.[12] திவ்வியப் பிரபந்தத்திலும் அதன் வியாக்கியானங்களிலும்

11. திருவாய் 9. 2:6
12. இப்போது இந்திய அரசியல் அமைப்பை வரைந்த டாக்டர் அம்பேத்காரின் திருநாமம் சூட்டப் பெற்றுள்ளது.

சிறிதும் பயிற்சியில்லாதவர்களின்பணி இது! சீவில்லிபுத்தூர் அருகிலுள்ள 'திருத்தண்கால்' என்னும்திருப்பதியை 'திருத் தங்கால்' என்று வழங்கி வடமொழியில் 'தங்கால க்ஷேத்திரமாக்கித்' தல புராணமும் உண்டாக்கி யிருப்பதுபோல இருக்கும் 'பூமிபால க்ஷேத்திர மகான் மியம்' என்று ஒரு தல புராணமும் தோன்றியிருந்தாலும் அது வியப்பன்று.

அடுத்து, அடியார்களின் கோலாகலங்கங்ளைக் கண்டு மகிழவும், அறிவிலிகளான இவ்வுலகத்தவரும் காணத் திருப்புளிங்குடியில் நின்றும் எழுந்து வந்து ஒருநாள் திருப்புளியடியில், சயனத்திருக்கோலத்தைவிட்டு வீற்றி ருந்த திருக்கோலத்தைக் காட்ட வேண்டும் என்று வேண்டுகின்றார்[13] ஆழ்வார். அடுத்த பாசுரத்தில் அதற்கு மேலும் தமக்கிருக்கும் ஆர்வத்தை வெளியிடு கின்றார்.

**''எங்கள்கண் முகப்பே உலகர்கள் எல்லாம்**
**இணையடி தொழுதெழுந் திறைஞ்சி**
**தங்களன் பாரத் தமதுசொல் வலத்தால்**
**தலைத்தலைச் சிறந்துபூ சிப்ப''[14]**

[கண்முகப்பு - கண்முன்; அன்புஆர - பக்தி வளர; தலைத்-தலைசிறந்து- ஒருவர்க்கொருவர் மேல் விழுந்து]

என்ற அடிகளில் இதனைக் காணலாம். எம்பெருமான் ஆழ்வார் கண்முகப்பே இருக்கும்போது இவ்வுலகத் தாரெல்லாரும் அவனுடைய திருவடியின் சேர்த்தியழகு கண்டு திருவடிகளிலே விழுவதும் எழுவதுமாகி தோத்தி ரங்கள் செய்து வழிபடும் காட்சியையும் தான் கண்டு களிக்க வேண்டும் என்று ஆசைப்படுகின்றார் ஆழ்வார்.

தங்கள் அன்பு ஆரத் தமது சொல்வலத்தால் பூசிப்பதாவது: 'நூறு பிராயம் புகுவீர், பொன்னாலே

13. திருவாய் 9. 2:7.
14. திருவாய் 9. 2:8.

பூணு நூலிடுவீர், பழம் உண்பீர், பால் பருகீர்' என்றாற் போல் சொல்லித் துதித்தல். இந்த இடத்தில் ஈட்டில் வாங்கிபுரத்து நம்பி விஜயஸ்ய என்ன, ஆண்டான் சொன்ன வார்த்தையை நினைப்பது' என்றுள்ள ஐதிகத்தையும் சிந்திக்கின்றோம் : வங்கிபுரத்து நம்பி பெருமாளைச் சேவிக்க எழுந்தருளினபோது ஒரு பக்கம் ஸ்ரீவைணவர்களும் மற்றொரு பக்கம் ஆய்ச்சிகளும் நின்று கொண்டு பெருமாளைச் சேவித்திருந்தார்களாம். வங்கிபுரத்து நம்பி வைணவர்கள் பக்கம் நிற்காமல் ஆய்ச்சிகள் பக்கம் நின்றாராம். அதை முதலியாண்டான் கண்டு 'இதென்ன? வைணவர்கள் திரளில் சேராமல் ஆய்ச்சிகள் பக்கமாக நிற்கிறதேன்?' என்று கேட்டாராம். அதற்கு நம்பி, 'எப்படியும் நாம் பலவகை அபிமானம் கொண்டு அகங்கார மமகார யுக்தர்களாக இருப்போம். ஆகவே, எம்பெருமானின் கடாட்சம் பாய்வது மேட்டுமடையாக இருக்கும். 'அறிவொன்று மில்லாத ஆய்ச்சியர்களோ' உண்மையில் தாழ்ச்சியுடையவர்களாகவும் தாழ்ச்சி தோற்றப் பேசுபவர்களாகவும் இருப்பவர்களாகையாலே அவர்கள் மேல் பகவத் கடாட்ச வெள்ளம் பாய்வது பள்ளமடையாக இருக்கும். ஆகவே அவர்கள் பக்கம் நின்றேன்' என்று மறுமொழி கூறினாராம். ஆனாலும், எம்பெருமானை நோக்கி ஆய்ச்சியர்கள் போற்றும் படியையும் நம்பி போற்றும் படியையும் ஆண்டான் கண்டவராகையாலே இந்த வேறுபாட்டைக் காட்ட வேண்டுமென்று திருவுள்ளம் பற்றி நம்பியை நோக்கி, "ஆய்ச்சிகள் சொன்னதென்ன?" என்று கேட்டாராம். அதற்கு நம்பி 'பழம் உண்பீர், பால் பருகுவீர்; பொன்னாலே பூணூல் இடுவீர்; நூறு பிராயம் புகுவீர்; அழுத்த இரட்டை உடுப்பீர்' என்று அவர்கள் கூறினதாகவும், தான் 'விஜயஸ்வ, விஜயீபவ, இத்யாதிகளைச்' சொன்னதாகவும் மறுமொழி கூறினாராம். அதற்கு ஆண்டான், "அங்குப் போயும் முரட்டு சமஸ்கிருதம் விட்டீர் இல்லையே; எங்கேயிருந்

தாலும் நாம் நாம் காணும்; இங்கே எழுந்தருளீர்'' என்று அருளிச் செய்தாராம்.

அடுத்த பாசுரத்தில் 'வீற்றிடங்கொண்டு வியன் கொள் மாஞாலத்து இதனுளும் இருந்திடாய்' என்று வேண்டுவர். எம்பெருமானுடைய பரம சுகுமாரமான திருமேனிக்கு இந்த முரட்டு நிலம் சிறிதும் தகாது; ஆயினும் அடியார்கள் சேவிப்பதற்காகவே இங்கு அவன் எழுந்தருள வேண்டிய நிலை ஏற்படுகின்றது என்ற தத்துவத்தை வெளியிட்டுக் கொண்டு வேண்டுகின்றார் ஆழ்வார். இருந்திடாய்: கிடந்த திருக்கோலத்தின் அழகு கண்டோம்; இருந்த திருக்கோலத்தின் எழிலைக் காண வேண்டாவோ? அதையும் காட்டியருளாய் என்பது பொருள். இங்கே பட்டர் அருளிச் செய்தது: ''இவையெல்லாம் நமக்குக் கோயிலிலே காணலாமிறே; சாய்ந்தருளின் அழகு பெரிய பெருமாள் பக்கலிலே; நின்றருளின அழகு நம் பெருமாள் பக்கலிலே; இருப்பில் அழகு பெரிய பிராட்டியார் பக்கலிலே'' என்று.

அடுத்து, ஆழ்வாரின் வேண்டுகோள் தான் எம்பெருமானின் திருவடியை வருட வேண்டும் என்பது.

> ''வடிவிணை யில்லா மலர்மகள் மற்றை
> நிலமகள் பிடிக்கும்மெல் அடியை
> கொடுவினை யேனும் பிடிக்கநீ ஒருநாள்
> கூவுதல் வருதல்செய் யாயே.''

[வடிவு-வடிவழகு; இணை-ஒப்பு; மலர்மகள்-பெரிய பிராட்டியார்; கூவுதல்-அழைத்துக் கொள்ளல்; வருதல்-தானே வருதல்.]

என்ற பாசுரப் பகுதியில் ஆழ்வாரின் விடாயைக் காணலாம். ''வடிவழகுக்கு ஒப்பில்லாத பிராட்டிமார் தங்களுடைய பரம சுகுமாரமான திருக்கைகளாலே பிடிக்கும் போதும் 'கன்றிவிடுமோ' ஒன்று கூசிப் பிடிக்கும்படி

14. திருவாய் 9. 2: 10.

யான அவ்வளவு மிருதுவான திருவடிகளைப் பாவியேனும் பிடிக்குமாறு என்னை அங்கே அழைத்துக் கொள்ளுதல், அன்றி எம்பெருமான் இங்கே வந்தருளுதல் ஒரு நாள் செய்ய வேண்டும்'' என்கின்றார் ஆழ்வார். கூவுதல் வருதல் செய்யாயே : இரண்டு செயல்களை விகற்பித்துச் சொல்லும் இடங்களில் பெரியதை முன்னே சொல்லுவதும் சிறியதைப் பின்னே சொல்லுவதும் இயல்பு. எம்பெருமான் வருதல் பெரிய செயல்; ஆழ்வாரைக் கூவிக்கொள்ளல் சிறிய செயல். ஆகவே 'வருதல் கூவுதல் செய்யாயே' என்று சொல்லுவதே முறை. அப்படியிருக்க 'கூவுதல் வருதல் செய்யாயே' என்று சொல்லியிருப்பதன் கருத்தை நம் பிள்ளை விளக்கும் நயம்: ''முற்பட 'வருதல்' என்றிலராயிற்று அச்சமுதாயத்தைக்குலைக்க வொண்ணாதென்றும் அத்தாலே'' என்பது. அதாவது, 'வடிவிணையிலா மலர் மகள் மற்றை நில மகள் பிடிக்கும் சந்நிவேசத்தைத் தாமும் கண்டுகளிக்க ஆழ்வார் ஆசைப்பட்டவராகையாலே அந்தச் சேர்த்தி யழகைக் குலைக்க மனமில்லாமை பற்றி வருதலை முன்னே சொல்லிற்றிலர், என்பதை உய்த்துணர்தல் வேண்டும் என்பது.

இங்ஙனம் திருப்புளி ஆழ்வார் அடியிலிருந்து கொண்டே திருப்புளிங்குடியானிடம் முறையிட்டு அநுபவித்த ஆழ்வாரின் பாரிப்பை நாமும் பெற்றதாகப் பாவனை செய்து கொண்டு திருப்புளிங்குடி எம்பெருமானிடம் நேரில் முறையிடுகின்றோம். இந் நிலையில் திவ்விய கவியின் பாசுரமும் நினைவிற்கு வருகின்றது.

> ''தெளியும் பசும்பொன் சிறைக்காற்று வீச
> விளியும் துயர்போய் விடுமே-எளியேற்கு
> கருளப் புளிங்குடிவாழ் அச்சுதனைக் கொண்டு
> கருளப்புள் இங்குவந்தக் கால்.''[16]

---

16. நூற்.திருப்.அந்-54

[தெளியும்-தெளிந்த; சிறை-இறகுகள்; விளியும்-மரண முண்டாகுவது போன்ற; எளியேற்கு-ஏழையேனுக்கு; அருள-திருவருள் புரியுமாறு; கருளம்புள்-பெரிய திருவடி]

என்பது பாசுரம். தலைமகனைக் களவொழுக்கத்தாற் கூடிப் பிரிந்த தலைமகள் அப்பிரிவுத்துயரை ஆற்றி அடக்கும் வல்லமையற்றவளாய்த் தன் நிலையைத் தோழியர்க்கு வெளிப்படையாக உரைத்து அறத்தோடு நிற்கும் செயலைக் கூறுவது இப்பாசுரம். "இப்பொழுதே எனது தலைவனாகிய எம்பெருமான் பெரிய திருவடியின் மீது ஏறி ஓடோடி வந்து என்னைச் சார்ந்தால் மாத்திரமே எனது உயிர் நிற்கும்; இல்லாவிடின் இறந்துபடும்" என்று தலைவி தன் நிலையைத் தெரிவிக்கின்றாள். அவன் இங்கு எழுந்தருளினால் அவனது முக விலாசத்தைக் கண்டு பிழைக்கலாம் என்பதும், அவன் கண்ணோட்டத்தைப் பெற்று உய்யலாமென்பதும் அவளது உட்கிடக்கை. இப்பாசுரத்தைச் சேவிக்கும்பொழுதே தூதுவிடும் ஆழ்வார் நாயகின் பாசுரம் நினைவிற்கு வருகின்றது.

"அருளாத நீர்அருளி அவர்ஆவி துவராமுன்
அருள்ஆழிப் புள்கடவீர் அவர்வீதி ஒருநாள் என்று
அருள்ஆழி அம்மானைக் கண்டக்கால் இது சொல்லி,
அருள், ஆழி வரிவண்டே!"[17]

[அருளாத-கிருபை பண்ணாத; அவர் ஆவி-ஆழ்வாரின் உயிர்; துவராமுன்-நீர்மை கெடுவதற்கு முன்பு; அருள் ஆழிபுள்-கருணைக் கடலான பெரிய திருவடி; கடவீர்-செலுத்துவீர்; இது-இந்த வார்த்தை; ஆழி வரிவண்டு-வட்டமான இரேகைகளையுடைய வண்டு.]

என்பது பாசுரம். இதனையும் சேவித்து மகிழ்கின்றோம். இங்ஙனம் இறையநுபவம் பெற்ற நிலையில் முழு மன நிறைவுடன் திருக்கோயிலை விட்டு வெளி வருகின்றோம்.

---

17. திருவாய் 1. 4 : 6

அடுத்து, ஆழ்வார் நாயகி சமாதியில் இருந்து பேசின 'தொலைவிலி மங்கலம்' என்னும் இரட்டைத் திருப்பதிக்குப் போகச் சித்தமாகின்றோம். நாயகி பாவனையில் இரண்டு பாசுரங்களையும் சேவித்த நமக்கு அதே நிலையிலிருந்து கொண்டு தொலைவிலி மங்கலத்து எம்பெருமானைச் சேவிக்கும் பேறு கிட்டினதே என்று அச்சமாதி கலையாது சிற்றுந்து ஏறி அத்திருத்தலத்தை நோக்கி விரைகின்றோம்.

# 16. தொலைவில்லி மங்கலத் தாமரைக் கண்ணன்

வைணவ சமயத்தில் வீடு பேற்றிற்குச் சிறந்த நெறியாகக் கொள்வது பிரபத்தி மார்க்கமாகும். இதனைச் சரணாகதித் தத்துவம் எனவும் வழங்குவர்.

> "பிரபத்திக்குத் தேசநியமும் காலநிய
> மமும் பிரகார நியமும் அதிகாரி நிய
> மமும் பல நியமும் இல்லை."[1]
>
> [நியமம்-வரையறை]

என்பது ஸ்ரீ வசன பூஷண சூத்திரம். 'அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே'[2] என்று நம்மாழ்வார் எம்பெருமானை உபாயமாகப் பற்றியதுபோல் பற்றுவதே பிரபத்தியாகும்.

தேச நியமமாவது, தூயவிடங்களிலே செய்ய வேண்டும்; மற்றைய விடங்களிலே செய்யலாகாது என்பது. கால நியமமாவது, வேனிற்காலம் முதலான காலங்களிலே செய்யவேண்டும்; மற்றைய காலங்களில் செய்யலாகாது என்பது. பிரகார நியமமாவது, நீராடல் கால் கழுவுதல் என்பன முதலானவற்றை முன்னாகக் கொண்டு செய்யவேண்டும்; வேறு வகைகளாலே செய்யவெண்ணாது என்பது. அதிகாரி நியமமாவது,

1. ஸ்ரீ வச.பூஷ்-24 (புருடோத்தம நாயுடு பதிப்பு.)
2. திருவாய் 6. 10 : 10

முதன் மூன்று வருணத்தவர்கள் அல்லாதவர்களாக இருக்கலாகாது என்பது. பல நியமமாவது, இம்மை மறுமைப் பலன்களில் இன்ன பலத்திற்கு இது சாதனம்; மற்றைய பலன்களுக்கு இது சாதனம் அன்று என்பது. இக்கருத்தினைப் பரத்துவாச சம்ஹிதையும் சனத்குமார சம்ஹிதையும் அரண் செய்கின்றன. பிரபத்திக்கு விஷய நியமமே இன்றியமையாதது.[3] அதற்கு ஏற்ற இடம் குணபூர்த்தியுள்ள அர்ச்சாவதாரமே என்பதையும் ஆழ்வார்கள் பலவிடங்களிலும் பிரபத்தி பண்ணியது அர்ச்சாவதாரத்திலேயே என்பதையும் சிந்திக்கின்றோம்.

மனத் தூய்மையுடையவனான வீடணன் வந்ததுவே தேசமும், அவன் வந்ததுவே காலமும் என்று சரணாகதி தருமத்தை அறிந்தவனான சிறிய திருவடி (அநுமன்) அறுதியிட்டபடி இராமபிரான் அவனை ஏற்றுக் கொண்டதால் தேசகாலநியமம் இல்லை என்பதை அறிகின்றோம். திரெளபதி பூப்பு எய்தியவளாயிருந்தும் சரணாகதி செய்தாள்; கண்ணனும் அதனை ஏற்றுகொண்டான். பார்த்தன் 'நெடுந்தகையை நினையாதார் நீசர்தாமே'[4] என்றபடி நீசர் நடுவில்தான் இந்நெறியைக் கேட்டான். இவற்றால் பிரகார நியதி தேவை இல்லை என்பதனை அறிகின்றோம். எனவே, பிரபத்தி செய்வதற்குச் சுத்தி அசுத்திகள் ஆகிய இரண்டும் தேட வேண்டா என்பது அறியத்தக்கது. அதாவது, பிரபத்தியைச் செய்யத் தொடங்குங்கால் தூய்மையில்லாதவனிடத்தில் தூய்மையையும், தூய்மையுடையவனிடத்துத் தூய்மையின்மையையும் தேடவேண்டியதில்லை. வேல் வெட்டிப் பிள்ளை என்ற நம்பிள்ளையின் மாணாக்கரொருவர் பிரபத்திக்கு நியமம் வேண்டாவோ என்று கேட்டதற்கு நம்பிள்ளை அதற்குத்தந்த விளக்கத்தால் இதனை அறியலாம். இராமன் கடலைச் சரணம் அடைந்தபொழுது

3. ஸ்ரீ வச. பூஷ.-25
4. பெரி. திரு. 11. 6 : 3

நியம நிட்டைகளுடன் சரணம்புக்கான். வீடணன் நின்ற நிலையிலேயே சரணம் புக்கான். ஆகவே, தகுதியில்லாதவனுக்குத்தகுதியையும், தகுதியுள்ளவனுக்குத் தகுதியின்மையையும் தேடவேண்டாம் என்றும், அவரவர் நின்ற நிலைகளிலேயேசரணம் புகலாம் என்று விளக்கினார் நம்பிள்ளை.

பாண்டவர்களும், திரௌபதியும், காகமும், காளியனும், கஜேந்திராழ்வானும், வீடணனும், பெருமாளும், இளைய பெருமாளும் சரணம் புகுகையில் அதிகாரி நியமும் இல்லை என்பதனையும் சிந்திக்கின்றோம். இந்த இடத்தில் சுவாமி தேசிகனின் வாக்கும் நம் நினைவிற்கு வருகின்றது.

''எல்லார்க்கும் எளிதான ஏற்றத் தாலும்
இனியுரைக்க மிகையான இரக்கத் தாலும்
சொல்லார்க்கும் அளவாலும் அமைத லாலும்
துணிவரிதாய்த் துணைதுறக்கும் சுகரத் தாலும்
கல்லார்க்கும் கற்றோர்சொல் கவர்த லாலும்
கண்ணனுரை முடிசூடி முடித்த லாலும்
நல்லார்க்கும் தீயார்க்கும் இதுவே நன்றாம்
நாரணற்கே அடைக்கலமாய் நணுகுவீரே.''[5]

[ஏற்றம்-பெருமை; மிகை-அதிகம்; இரக்கம்-கருணை; சொல்-பிரபத்தி வாக்கியம்; துணிவு-பிரபத்தியின் அங்கம்; சுகரம்-சௌகர்யம்; கவர்தல்-பலனைக் கொண்டிருத்தல்; கண்ணன் உரை-கீதை; முடித்தல்-தலைக்கட்டுதல்] என்பது அந்தச் சுவாமிகளின் திருவாக்கு. இதனையும் நன்கு சிந்திக்கின்றோம்.

இந்த எண்ணங்கள் நம் சிந்தையில் குமிழியிட்ட வண்ணம் தொலைவிலி மங்கலத்தை நோக்கி வந்து கொண்டிருக்கின்றோம். தொலைவிலி மங்கலத்தை **இரட்டைத் திருப்பதி** என்றும் வழங்குவர். அடுத்தடுத்து இரண்டு கோயில்கள் இருப்பதால் இஃது இங்ஙனம்

5. தே. பி. 200

கூறப் பெறுகின்றது. ஆழ்வார் திருநகரி இருப்பூர்தி நிலையத்திலிருந்து இரண்டு கல் தொலைவிலுள்ள இது தண் பொருநையாற்றின் வடகரையிலுள்ளது. இத்தலங்கள் நவ திருப்பதியில் இரண்டாவது மூன்றாவதுமாகும்

பெரும்பாலும் எம்பெருமாளின் திவ்வியதேசங்கள் யாவும் நீர் வளமும் நிலவளமும் மிக்க இயற்கைச் சூழ்நிலைகளில்தான் அமைந்திருக்கும். நம் வாகனம் இத்திருத்தலத்தை நோக்கி வருங்கால் இச் சூழ்நிலை நம் கண்ணுக்குத் தட்டுப்படுகின்றது. தண் பொருநைக் கரையிலிருப்பதால் பரந்த சோலைகளையும் குளிர்ந்த வளமுள்ள பண்ணைகளையும் கொண்டிலங்குகின்றது இத் திருத்தலம். "கரைகொள் பைம் பொழில் தண்பணைத் தொலைவில்லி மங்கலம்"[6] என்று பேசுகின்றார் ஆழ்வார். மேலும், "நோக்கும் பக்கமெல்லாம் கரும்பொடு செந்நெல் ஓங்கும் செந்தாமரை வாய்க்கும் தண்பொருநல் வடகரை வண்தொலைவிலி மங்கலம்"[7] என்கின்றார். இதில் இத்தலம் தண்பொருநையின் வடகரையிலிருப்பதையும் நினைவாக எடுத்துக் காட்டுகின்றார். கம்பு, செந்நெல், தாமரை முதலிய மருதநிலக் கருப்பொருள்கள் நீர் வளத்தையும் நில வளத்தையும் காட்டி நிற்கின்றன.

நீர்வளம் நிலவளங்களைக் கூறிய ஆழ்வார் இத் திருத்தலத்தின் தோற்றத்தையும் காட்டுகின்றார். "துவளில் மணி மாடம் ஓங்கும் தொலைவில்லி மங்கலம்"[8] என்ற ஆழ்வார் வாக்கினால் அந்தத் திவ்விய தேசம் குற்ற மற்ற சிறந்த இரத்தினங்கள் பதிக்கப் பெற்ற மாட மாளிகைகளைக் கொண்டது என்பதையும் அறிகின்றோம். நமக்கு இது பொய்யுரையாகவே தோன்றும். "பொய்யில் பாடலாயிரத்தில்"[9] இங்ஙனம் பொய்யுரை புகலலாமா? என்றும் சிலர் ஐயுறக் கூடும். இலக்கண நூல்

6. திருவாய் 6. 5 : 3
7. ஷை 6. 5 : 6
8. திருவாய் 6.5:1
9. திருவாய் 4.3:2

களில் அலங்கார நூல் என்ற ஒருவகை உண்டு. அதில் 'உயர்வு நவிற்சியணி' என்ற ஓர் அணி கூறப்பெற்றுள்ளது. இதனை வடமொழியில் 'அதிசயோக்தி' என்று கூறுவர். சாதாரண கவிஞர்கள் இதனை இவ்வுலக இயல்புகளையும் பிறவற்றையும் கூறுங்கால் கையாளுவர். ஆழ்வார் போன்ற வர்கள் பகவத் விஷயங்களிலும் இதர பிராப்ய விஷயங்களில் மட்டிலுமே பயன்படுத்துவர். இரத்தினங்கள் பதித்த மாடங்கள், மதி மண்டலத்தை எட்டும் உப்பரிக்கைகள், விண்ணை எட்டும் கோபுரங்கள் என்றெல்லாம் அவர்கள் தங்கள் விருப்பத்தினால் அங்ஙனம் சொல்லுகின்றனரேயன்றி இருக்கும் நிலையைக் கூறுகின்றனரல்லர் என்றே கொள்ளல் வேண்டும். 'ஆசைபற்றி அறையலுற்றேன்' என்று கம்பநாடன் கூறுவதுபோல் அவர்கள் அத் திருத்தலத்தின்மீது கொண்டுள்ள ஆராக் காதலால் அவர்கள் திருக்கண்களுக்கு அங்ஙனம் அது காட்சி தருகின்றதாகவும் கொள்ளலாம்.

அக்காலத்தில் நான்மறைகளையும் பழுதற ஓதிப் பயன்பெற்ற பார்ப்பனப் பெருமக்கள் இத்தலத்தில் வாழ்ந்து வந்தனர். அதனால்தான் ஆழ்வாரும் "நிற்கும் நான்மறை வாணர்வாழ் தொலைவில்லி மங்கலம்"[10] என்று குறிப்பிட்டனர் போலும். ஆனால், இன்று அத்தகைய அந்தணோத்தமர்கள் அவ்வூரின் வாழ்வதாகத் தெரியவில்லை. "வேதவொலியும் விழா வொலியும்" அவ்வூரில் மிகுந்து காணப்பெறும் என்பதைக் "குமிறும் ஓசை விழவொலித் தொலைவில்லி மங்கலம்"[11] என்ற தொடர் காட்டுகின்றது. விழாக்கோலம் பூண்டிருக்கும் பொழுது அவ்வூருக்குச் சென்றால் மறையவர் ஓதும் வேதஒலி, பல்வேறு வாத்தியங்களின் ஒலி, காலட்சேபம் செய்வோரின் ஒலி, புராண இதிகாசச் சொற்பெருக்குச் செய்வோரின் ஒலி, அக்கம் பக்கத்து ஊர் மக்கள் திரண்டிருப்பதால் அவர்கள் பேசும் பேரிரைச்சல் இவையெல்லாம்

10. திருவாய் 6.5:4 11. திருவாய் 6.5:5

கலந்து செவியமுதமாகக் கேட்கப் பெற்று அங்கு நின்றும் கால் பேரவொண்ணாதபடி இருக்கும்.

நாம் நம் 'சிற்றுந்தை' நல்லதோர் இடத்தில் நிறுத்தி விட்டுத் திருக்கோயிலை நோக்கி நடக்கின்றோம். இத் திருத்தலத்து எம்பெருமானைப் பற்றி நாயகி நிலையி லிருந்து கொண்டு பேசிய ஆழ்வாரின் பாசுரங்கள் ஒன் றன்பின் ஒன்றாக நம் சிந்தையில் எழுகின்றன. பகவத் விஷயத்திலுண்டான தமது ஈடுபாட்டைத் தாமே பேசிக் கொள்வது தற்புகழ்ச்சி யாகும் என்று கருதியும் அதனை மேலும் சுவையுடைத்தாக இருக்க வேண்டும் என்று கருதியும் பாசுரங்களைத் தோழிப் பாசுரங்களாக அமைத் துள்ளார். ஆழ்வார் பகவத் விஷயத்தில் ஈடுபட்டிருக்கும் பெருமையை வேறு சில பாகவதர்கள் எடுத்துரைப்பதாக இருப்பது இதன் உள்ளுறைப் பொருளாகும்.

ஆழ்வார் ஏறிட்டுக்கொண்ட நாயகி சமாதி நம்மை யும் பற்றுகின்றது. பராங்குச நாயகி காலத்திற்கு நம் பாவனையும் செல்லுகின்றது. பராங்குச நாயகி பிறந்த பொழுது இவரது திருத்தாயர் முதலானோர் சோதிடர் களை அழைத்து இக்குழந்தையின் பேற்றுச் சிறப்புகளைப் பற்றி உசாவுகின்றனர். "இவரது வாழ்வு மிகவும் சிறப்பாகவே அமைந்திருக்கின்றது. இவள் உயர்வற உயர் நலமுடையவனான அயர்வறும் அமரர்கள் அதிபதி யால் மயர்வற மதிநலம் அருளப் பெறுவள்: உலகம் நிறைந்த புகழ் பெறுவள்; தொண்டர்க்கு அமுதுண்ணச் சொல்மாலைகள் சொல்லுவள்" என்றெல்லாம் சொல்லு கின்றனர். அதன் பிறகு, "ஆனால் இவளுக்கு ஓர் அவக்கேடு உண்டு. அது என்னெனில், இவளைத் தொலைவில்லி மங்கலத்திற்குக் கொண்டு சென்றீர்களாயின் இவளை இழக்க நேரிடும். இவளை அங்குக்கொண்டு போகாமலிருந்தீர்களாகில் இவளுடன் சேர்ந்து நீங்கள் நெடுங்காலம் வாழலாம். இந்த ஒரு கண்டத்திற்கு இவள் தப்பிப் பிழைப்பது அரிது" என்றும் சொல்லியிருந்தனர்.

ஆனால், இவள் பிறந்த குடி தொலைவில்லி மங்கலத்திற்குக் கொண்டு போகாதிருக்கும்படியான குடி அன்று; பரம வைணவ நெறியைச் சார்ந்த குடி; "இவளைப் பெறுவோமாயினும் சரி, இழப்போமாயினும் சரி; அங்கு இவளை அழைத்துச் சென்று அத்தலத்து எம்பெருமானைச் சேவை பண்ணி வைத்தே தீர்வது" என்றிருக்கும்படியான குடி. அப்படியே அவர்கள் செய்யும்படியும் நேர்ந்தது. அதனால் விளைந்த 'விபரீதத்தையே' தோழி எடுத்துரைக்கின்றாள்.

பராங்குச நாயகி தொலைவில்லி மங்கலத்து எம்பெருமானைச் சேவித்த நாள் தொட்டு அவனுடைய பேரழகில் ஈடுபட்டு அவன் திருமேனி அழகினையே வாய்வெருவுகின்றாள். இந்த நிலையைத்தான் தோழி தாய்மாருக்கு எடுத்துரைக்கின்றாள்.

> "தவள வொண்சங்கு சக்க ரமென்றும்
> தாம ரைத்தடங் கணென்றும்,
> குவளை யொண்மலர்க் கண்கள் நீர்மல்க
> நின்று நின்று குமிறுமே."[12]

[தவளம்-வெண்ணிறமான; தடம்-விசாலமான; மல்க-பெருக]

நீலத்திருமேனிக்குப் பாங்காக வெள்ளிய சங்கு விளங்கும் அழகைப் பேசுகின்றாள். 'உண்பது சொல்லில் உலகளந்தான் வாயமுதம்; கண்படை கொள்ளில் கடல் வண்ணன் கைத்தலத்தே,[13] என்று ஆண்டாள் பேசுகிறபடியே பேசுகின்றாள். இடையீடின்றியோ பகவதநுபவம் பெற்றிருக்கும் சங்கிற்கே உடம்பு வெளுக்கும் நிலை ஏற்பட்டால் பகவத்தநுபவம் சிறிதும் இல்லாத தன்நிலை என்னவாகுமோ என்று ஏங்குகின்றாள் போலும். 'பெருங்கேழலார் தம் பெருங்கண் மலர்ப்புண்டரீகம் நம்மேல் ஒருங்கே பிறழவைத்தார்"[14] என்று எம்பெருமான் தன்னைக் குளிர

12 திருவாய் 6. 5 : 1 14. திருவிரு-45. பிறழ-மிக.
13. நாச். திரு. 7 : 8

நோக்கினமையைப் பேசுகின்றாள். 'கரியவாகிப் புடை பரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்ட அப்பெரியவாய கண்கள் என்னைப் பேதமை செய்தனவே,[15] என்று பாண் பெருமாள் அநுபவித்தவாறு இவளும் அநுபவித்து அத்திருக்கண்களின் நீர்மையை நினைத்தவாறே இவளுடைய கண்கள் நீர்மல்க நிற்கும் நிலையை எடுத்துக் காட்டுகின்றாள். நின்று நின்று குமிறும் நெஞ்சின் நினைவை வாய்விட்டுச் சொல்ல மாட்டாத இன்னாப்பாலே உள்ளே குமிறா நின்றாள். 'குமிறும்' என்று பதம் பிரிக்காமல் (நின்று நின்று உகும் இறும்) என்று பிரித்து 'உகும்-நீர்ப் பண்டமாக நின்றாள்; இறும்-தளர்ந்து விழுகின்றாள்' என்று சிலர் பொருள் கூறினார்களாம். அது சுவையற்றதென்று மறுக்கப்பட்டதை ஈட்டாசிரியர் குறிப்பிடுகின்றார். ஈடு: ''ராஜ கோஷ்டியிலே 'உகும் இறும்' என்று பொருள் சொல்ல, விக்கிரமசிங்கன் என்பான் ஒருவன் 'அங்ஙனல்ல; கன்றைக் கடக்க வைத்தால் முலைக் கண் கடுத்துப் பசு அலமந்து படுமாப்போலே உள்ளோடுகின்ற கிலேசம் வாய்விட மாட்டாதே நோவுபடுகிற இவளுக்கு இது வார்த்தையோ? என்றான். பெருவெள்ளத்தில் சுழிக்குமாப் போலே அகவாயிலுள்ளது வெளியிட மாட்டாதே உள்ளே நின்று சுழிக்கிறபடி.''

அடுத்து, பராங்குச நாயகி திமிர்கொண்டாற்போல் 'தேவபிரான் தேவபிரான்' என்று நெளிந்த வாயோடு கூடி கண்கள் நீர்மல்கப்பெற்று கட்டுக் குலைந்து தளர்ந்திருக்கும் நிலையையும் நினைவு கூர்கிறோம்.

> ''திமிர்கொண்டாலொத்து நிற்கும் மற்றிவள்
> தேவ தேவபி ரானென்றே
> நிமியும் வாயொடு கண்கள் நீர்மல்க
> நெக்கொ சிந்து கரையுமே,''[16]

15. அமலனாதி-8
16, திருவாய் 6. 5 : 2

[நிமியும்—நெளியும்; நெக்குஒசிந்து—கட்டுக்குலைந்து. கரையும்—உருகும்.]

என்பது தோழி காட்டும் ஆழ்வார் நாயகியின் நிலையாகும்; ஆர்த்தர்களின் கூக்குரலைக் கேட்பதற்காகத் திருப்பாற் கடலில் அவதாரம் செய்யும் பொருட்டுச் சாய்ந்து கிடக்கும் கோலத்தைச் சிறப்பாகப் பேசுகின்ற நிலையையும் நினைவு கூர்கின்றோம். மாவலியிடத்து மாணுருவாய்ச் சென்று அடியை மூன்று இரந்து அங்கே நின்று ஆழ்கடலும் மண்ணும் விண்ணும் முடிய ஈரடியால் முடித்துக்கொண்ட படியை அற்புதமாகத் தலைவி பேசுவதைத் தோழி எடுத்துக்காட்டுவதையும் சிந்திக்கின்றோம். இந்தச் செயல் களால் தனது பரத்துவத்தை நிலை நாட்டும் எம்பெருமான் இடையனாய்ப் பிறந்து பசுக்களையும் கன்றுகளையும் மேய்த்துத் திரிந்த செளலப்பிய செளசீல்ய குணங்களை வாய்வெருவுகின்றதைக் குறிப்பிடுகின்றாள். அத்துடன் நில்லாமல் கண்களில் குளமாகத் தேக்கிய நீரைத் தாரைத் தாரையாகச் சொரிந்து நிற்கும் நிலையையும் நினைவுடன் காட்டுகின்றாள்.

**"திரைகொள் பெளவத்துச் சேர்ந்த தும்திசை**
**ஞாலம் தாவி யளந்ததும்,**
**நிரைகள் மேய்த்ததும் மேபி தற்றி**
**நெருங்கண் ணீர்மல்க நிற்குமே."[17]**

[திரை—அலை; பெளவம்—கடல்; நிரைகள்—பசுக் கூட்டங்கள்.]

என்பது தோழி காட்டும் பராங்குச நாயகியின் நிலை யாகும்.

அடுத்து, தோழி தலைவியின் நாண் அழிவினை "அற்கம் என்றும் அறவுறாள்" என்று எடுத்துக் காட்டு கின்றாள். "என் சிறகின் கீழ் அடங்காப் பெண்ணைப் பெற்றேன்"[18] என்று திருமங்கை மன்னன் தாய் சொல் லாலே வெளிவருகின்றதை நினைவு கூர்கின்றோம்.

17. திருவாய் 6. 5 : 3 18. திருநெடுந். 12

"கற்கும் கல்வியெல் லாம்க ருங்கடல்
வண்ணன் கண்ணபி ரானென்றே
ஒற்கம் ஒன்றுமி லள்உ கந்துகந்
துள்ம கிழ்ந்து குழையுமே"[19]

[ஒற்கம்—ஒடுக்கம்; உகந்து—ஆனந்தப்பட்டு.]

என்று தோழி காட்டும் ஆழ்வார் நாயகியின் நிலையையும் சிந்திக்கின்றோம். இச்சமயத்தில்,

"கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழா ரெனின்."[20]

என்ற வள்ளுவர் வாக்கும் நம் சிந்தையில் பளிச்சிடுகின்றது. மழை பெய்தாலொக்கும் கண்ணநீரோடு அவன் அழகினை நெஞ்சில் நிறுத்தியவளாய் அவன் உகந்து எழுந்தருளியிருக்கும் திருப்பதியைத் திசை நோக்கித் தொழுதவண்ணம் இருக்கும்[21] ஆழ்வார் நாயகியை மானசீகமாகக் காண்கின்றோம்.

"நோக்கு மேல்அத் திசையல் லால்மறு
நோக்கி லள்வைகல் நாடொறும்
வாய்க்கொள் வாசக மும்ம ணிவண்ணன்
நாமமேயிவள் அன்னைமீர்."[22]

[அத் திசை-தொலைவிலிமங்கலம் இருக்கும் திசை;
மறு-வேறு; நாமம்-பெயர்.]

என்பது தோழிகாட்டும் தலைவியின் நிலை. ஒரு தடவை அத் திருப்பதியைப் பார்த்தாளாகில், அந்த இடத்தைத் தவிர வேறு திசையில் தன் பார்வையைச் செலுத்துவதே இல்லை என்கிறாள் தோழி. இவள் வாயினின்று வெளிவரும் சொற்களும் எம்பெருமானின் திருநாமங்களேயாகும் என்பதையும் குறிப்பிடுகின்றாள் அவள்.

மேலும், தோழி கூறுகின்றாள்:

19. திருவாய் 6. 5 : 4
20. குறள் -2
21. திருவாய் 6.5 :5
22. ஷை 6. 5 : 6

"நம்மைக் கைவலிந்து.
என்ன வார்த்தையும் கேட்கு றாள்தொலை
வில்லி மங்கலம் என்றல்லால்
முன்னம் நோற்ற விதிகொ லோ?முகில்
வண்ணன் மாயங்கொ லோ அவன்
சின்ன மும் திருநாம முமிவள்
வாய னகள்தி ருந்தவே "[23]

[கைவலிந்து-கைவிட்டு; மாயம்-சங்கல்பம்; சின்னம்—அழகு; வாயன-வாயில் உள்ளன.]

என்பது பாசுரம். எம்பெருமானின் எழிலும் திருநாமங்களும் ஆழ்வார் நாயகியின் வாயினின்று புறப்படுகையால் அழகு பெறலாயின என்கின்றாள். பல்வேறு பிறவிகளில் செய்த நல்வினையாலோ அன்றி எம்பெருமானின் சங்கல்பத்தினாலோ இது நடந்திருக்க வேண்டும் என்றும் குறிப்பிடுகின்றாள். தம்மையெல்லாம் கைவிட்டு 'தொலைவில்லி மங்கலம்' என்ற திருநாமத்தைத் தவிர வேறு ஒன்றையும் செவிமடுப்பதில்லை என்பதையும் கூறுகின்றாள். அன்று தலைவி அத் திருப்பதியைக் கைகூப்பித் தொழுத நாள்தொட்டு "அரவிந்த லோசன!" என்று அப்பெருமானைப் பலகாலும் வாய் வெருவி நைகின்றாள்[24] என்பதையும் குறிப்பிடுகின்றாள் தோழி. இங்கே ஈடு: "ஒருகால் அரவிந்த லோசன என்னும்போது நடுவே பதின்கால் பட்டைப் பொதி சோறு அவிழ்க்க வேணும்" என்பது. இக்குறிப்பினையும் நினைக்கின்றோம்.

பின்னும் தோழி கூறுகின்றாள்:

"'இரங்கி நாடொறும் வாய்வெ ரீஇயவள்
கண்ண நீர்கள் அலமர,
மரங்க ளும்இரங் கும்வ கைமணி
வண்ண வோ!' என்று கூவுமால்,

23. திருவாய் 6. 5 : 7 24. ஷை 6. 5 :6

துரங்கம் வாய்பிளந் தானு றைதொலை
வில்லி மங்கல மென்று, தன்
கரங்கள் கூப்பித் தொழுமவ் வூர்த்திரு
நாமங் கற்றதற் பின்னையே.''[25]

[இரங்கி-நெஞ்சழிந்து; வாய்வெரீஇ-வால்வெருவி; அல மர-வியாகூலப்பட்டு நிற்க; துரங்கம்-குதிரை.]

என்பது பாசுரம். "நீங்கள் இவளைத் தொலைவில்லி மங்கலம் கொண்டு சென்று அவ்வூர்த் திருநாமத்தைக் கற்பித்தீர்கள். அதன் பலனாக இவள் நாடோறும் அஃறிணைப் பொருள்கள் கூடக் கரையும்படி மிகப் பெரிய ஆர்த்தியுடன் 'மணிவண்ணா!' என்று ஓலமிட் டழைத்துத் தொலைவில்லி மங்கலம் என்று அவ்வூர்ப் பெயரையும் சொல்லி தன் கைகளைக் கூப்பித் தொழு கின்றாள்'' என்கிறாள் தோழி.

மரங்களும் இரங்கக்கூடுமோ என்று சிலர் எம்பா ரைக்[26] கேட்டார்களாம். அதற்கு அவர் அருளிச் செய்தது: "இத் திருவாய்மொழி அவதரித்த அன்று தொடங்கி பாவசுத்தி இல்லாத எத்தனை பேர்களுடைய வாயிலே இது புகுந்தது என்று தெரியாது; இங்ஙனே யிருக்கச் செய்தேயும் நியமாதி கிரமத்தாலே பதஞ் செய்யப் பார்த்தாலும் சுக்கான் பருக்கை போலே நெகிழாதேயிருக்கிற நெஞ்சுகளும் இன்று அழிகிறபடி கண்டால் சமகாலத்தில் மரங்கள் இரங்கச் சொல்ல வேணுமோ?'' என்றாராம். இதுவும் நம் சிந்தையில் எழுகின்றது. கண்ணபிரான் புல்லாங்குழல் ஊதும்பொழுது "மரங்கள் நின்று மது தாரைகள் பாயும்; மலர்கள் வீழும்;

25. திருவாய் 6. 5 : 9

26. எம்பார்- இராமாநுசரின் தம்பி. கோவிந்தபட்டர் என்ற பெயருடன் காளத்தியில் சிவவழிபாடு செய்திருந் திருந்தவர். பின்னர் இராமாநுசரால் ஆட்கொள்ளப்பட்டு வைணவ சமயத்தைத் தழுவியவர்.

வளர் கொம்புகள் தாமும்''[27] என்று பெரியாழ்வார் சொன்னதெல்லாம் ஆழ்வாரின் ஆர்த்த ஒலியிலும் ஆயிற்று என்பதைச் சொல்ல வேண்டுமா?

இறுதியாகத் தோழி வாயால் வெளிப்படும் பாசுரம் :

''பின்னை கொல்நில மாம கள்கொல்?
திரும கள்கொல்? பிறந்திட்டாள்
என்ன மாயங்கொ லோ?இவள்நெடு
மாலென்றே நின்று கூவுமால்
முன்னி வந்தவன் நின்றி ருத்துறை
யும்தொ லைவில்லி மங்கலம்
சென்னி யால்வணங் கும்அவ் வூர்த்திரு
நாமம் கேட்பது சிந்தையே.''[28]

[சென்னி-தலை; சிந்தை-சிந்தனை.]

பராங்குச நாயகியின் காதல் மிகுதியை நோக்கினால் தோற்றும் நிலைமையைக் கூறுகின்றாள். ஆழ்வார் நாயகி கிருஷ்ணாவதாரத்தில் ஈடுபட்டிருக்கும் தன்மையை நோக்குங்கால் 'சாட்சாத் பின்னைப் பிராட்டிதானோ இவள்?' என்று சொல்லவேண்டும். இவள் வராகப் பெருமான் திறத்தில் ஈடுபட்டிருக்கும் தன்மையை நோக்குமளவில் இவள் சாட்சாத் பூமிப் பிராட்டிதானோ?' என்ற ஐயம் தோன்றும். இவளுடைய இராமாவதார ஈடுபாட்டை நோக்கினால் 'சாட்சாத் சீதாப் பிராட்டி தானோ இவள்?' என்ற சங்கைதோனறும் என்கின்றாள்.

இப்பாசுரத்தில் 'பிறந்திட்டாள்' என்பதைப் பின்னை பிறந்திட்டாள் கொல்? நிலமாமகள் பிறந்திட்டாள் கொல்? திருமகள் பிறந்திட்டாள் கொல்? என்று பொருள் காண்ப தோடன்றி வேறு விதமாகவும் யோசிக்கலாம். அஃதாவது இவள் பின்னை கொல்? இவள் நிலமாமகள் கொல்? இவள் திருமகள் கொல் (அன்றியே) பிறந்திட்டாள் கொல்? என்பதாக. இங்கே ஈட்டு சூக்தி காண்மின்: ''அவர்களுக்கு

27. பெரியாழ் திரு. 3. 6 : 10 28. திருவாய் 6. 5:10

இவள் படி இல்லாமையாலே அவர்கள் ஒப்பன்று; லோகமெல்லாம் வாழுகைக்கு இவள் ஒருத்தி பிறந்தாளோ! என்றுமாம்.''

இவள் நெடுமாலென்றே நின்று கூவுமால்: ''என்பக்கலிலே எம்பிரானுக்கு என்ன வியாமோகம்! என்ன வியாமோகம்!' என்று அவனுடைய வியாமோகத்தின் நெடுமையைச் சொல்லிக் கூப்பிடுகின்றாள். ''கொண்டவென்காதல் உரைக்கில் தோழி, மண்டிணி ஞாலமும் ஏழ்கடலும் நீள்விசும்பும் கழியப் பெரிதால்''[29] என்று தானே பேசும்படியான அபரிமிதமான தன் வியாமோகத்தை மறந்து எம்பெருமானின் வியாமோகத்தைக் கனக்கப் பேசுவதையும் காண்கின்றோம். தன்னுடைய வியாமோகத்திற்கும் கிருஷி பண்ணுகைக்காக முற்பட்டு வந்து என்ற குறிப்பு 'முன்னிவந்து' என்ற சொற்றொடரில் தொனிப்பதையும் எண்ணுகின்றோம்.

இங்ஙனம் எண்ணிய வண்ணம் திருக்கோயில்களில் நுழைந்து **தேவபிரான், அரவிந்தலோசனன் (தாமரைக் கண்ணன்), கருந்தடங்கண்ணி** நாச்சியார் இவர்களைச் சேவிக்கின்றோம். தேவபிரான் நின்ற திருக்கோலத்திலும் அரவிந்தலோசனன் வீற்றிருந்த திருக்கோலத்திலும் காட்சி நல்குகின்றனர். இரு எம்பெருமான்களும் கிழக்கு நோக்கிய திருமுக மண்டலத்துடன் திகழ்கின்றனர்.

நம் உறவினர்களாக நினைத்திருக்கும் அனைவரும் போலி உறவினர்களே எனவும், எம்பெருமான் ஒருவனே உண்மையான உறவினன் எனவும் கூறப்பெறும் மெய்ப் பொருள் உண்மையை நினைவு கூர்கின்றோம். ஆழ்வாரும் திருக்கடைக் காப்புப் பாசுரத்தில் இதனையே குறிப்பிடுவதையும் சிந்திக்கின்றோம்,

> ''சிந்தை யாலுமசொல் லாலும் செங்கையி
> னாலும தேவபி ரானையே

29. திருவாய் 7. 3 : 8

தந்தை தாயென் றடைந்த வண்குரு
கூரவர்சட கோபன்சொல்
முந்தை யரயிரத்துள்.''[30]

என்பது ஆழ்வார் திருவாக்கு. ஆகையால் இத்திவ்விய தேசத்தில் இறைவனுடைய 'பாந்தவ குணம்' விளங்குகின்றது என்பது அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரின் கருத்தாகும் 'முந்தையாயிரம்' என்பது அநாதியான ஆயிரம். ஆழ்வார் திருவாக்கினின்றும் அவதரித்ததான இத் திவ்வியப் பிரபந்தம் அநாதியானதென்று எங்ஙனம் சொல்ல கூடுமென்று சிலர் ஐயுறலாம் இதனை ஆசாரிய ஹிருதயமே விரிவாகச் சமாதானம் கூறுகின்றது. அநாதியான வேதத்தை எங்ஙனம் நான்முகன் அருளினான் என்று சொல்லப்பெறுகின்றதோ அங்ஙனமே அநாதியான திருவாய்மொழியும் ஆழ்வார் அருளினார் என்று சொல்லப் பெறுவதற்குத் தட்டில்லை'[31]. இங்ஙனம் எண்ணிய வண்ணம் திருக்கோயிலை விட்டு வெளிவருங்கால் ஆசாரிய ஹிருதயத்தின் சூத்திரம் நம் நினைவிற்கு வருகின்றது.

''கடித கடக விகடநா பாந்த
வம், அவ்வூரிலே துவிகுணம்.''[32]

[கடிதர்-சேர்க்கப்பெறுபவர்கள்; கடகர்-சேர்ப்பவர்கள்; விகடநாபாந்தவம்-பொருந்தாமையைச் செய்கின்ற உறவு முறை; விகடநை-பொருந்தாமை; அவ்வூர்-தொலைவில்லி மங்கலம்; துவி-இரண்டு ]

என்பது சூத்திரம். இங்குக் 'கடிதர்' என்றது, ஆழ்வாரை. 'கடகர் என்றது' தோழிமாரை. இவர்களுக்குள் பரஸ்பரம் பொருந்தாமையை விளைத்திட்டது அப்பகவானது உறவு. பட்டர் 'அழகிய மணவாளப் பெருமாள்' என்றும், சோமாசியாண்டான் 'எம்பெருமானார்' என்றும்,

30. திருவாய் 6. 5 : 11
31. ஆசா ஹிரு சூ-46 32. ஆசா ஹிரு-168

அனந்தாழ்வான் 'திருவேங்கடமுடையான்' என்றும் ஆழ்வார் நாயகி 'தொலைவில்லி மங்கலம்' என்றும் சொல்லும்போது உண்டாகும் இனிமை தோழி சொல்லும் போது உண்டாகாமையாலே அவள் 'அவ்வூர்'[33] என்கின்றாள். சூத்திரம் குறிப்பிடுவதும் இக்கருத்தேயாகும்.

இந்நிலையில் திவ்விய கவியின் பாசுரம் நினைவிற்கு வர, அதனையும் மிடற்றொலியால் சேவிக்கின்றோம்.

**"வாயு மனைவியர்பூ**
**மங்கையர்கள் எம்பிராற்(கு)**
**ஆயுதங்கள் ஆழி முதல்**
**ஐம்படைகள்—தூய**
**தொலைவில்லி மங்கலமூர்**
**தோள்புருவ மேனி**
**மலைவில்லி மங்கலந்த**
**வான்"[34]**

[வாயு-பொருந்திய; பூ மங்கையர்கள்-சீதேவியும் பூதேவியும்; ஆழி-சக்கரம்; ஊர்-திவ்விய தலம்; இமம்கலந்த -குளிர்ச்சி பொருந்திய ]

என்பது பாசுரம். இதில் எம்பெருமானின் தேவியர் இன்னார் என்பதும், அவருடைய ஆயுதங்கள் இன்னவை, அவருடைய திருத்தோள், திருப்புருவம், திருமேனி இவற்றிற்கு முறையே மலை வில் குளிர்ச்சி பொருந்திய ஆகாயம் உவமையாகும் என்பதும் காட்டப் பெற்றன.

திருக்கோயிலின் வெளியில் ஓர் அமைதியான இடத்தில் அமர்ந்து இத்திருவாய்மொழி முழுவதையும் ஓதி உளங் கரைகின்றோம். இந்தப் பத்துப் பாசுரங்களையும் ஓதிய பிறகு ஓதியதன் பலனையும் சிந்திக்கின்றோம் "செந்தமிழ் பத்தும் வல்லார் அடிமை செய்வார் திருமாலுக்கே" என்ற அடியைச் சிந்தித்தவண்ணம் நெல்லையில் நாம் தங்கியிருக்கும் விடுதிக்குத் திரும்புகின்றோம்.

33. திருவாய் 6. 5 : 9, 10
34. நூற். திருப். அந்-50 35. திருவாய் 6. 5 : 11

# 17. வானமாமலைத் தோத்தாத்திரிநாதன்

பாரதப் போரில் போர்க்களத்தில் அர்ச்சுனன் தன் உறவினர்களும் ஆசிரியர்களும் தனக்குப் பகையாய் எதிர்ப் பக்கத்தில் நிற்பதைக் காண்கின்றான். அவர்களுடன் போரிட்டால் அவர்கள் இறப்பது உறுதியென்பதையும் சிந்திக்கின்றான். அதனால் வரும் பாபத்திற்கு அஞ்சி நிலை குலைகின்றான். 'படையெடேன்' என்று வாக்குத் தந்தே 'மாயப் போர்த் தேர்ப்பாகனாரிடம்' சரணம் புகுந்து தனக்குச் சரியான வழியைக் காட்டுமாறு வேண்டுகின்றான். பார்த்தசாரதியும் அவன்மீது கருணை கொண்டு கீதையின் வாயிலாக ஆன்மாவின் இயல்பினையும் கர்மயோக ஞான யோகங்களையும் வீடு பெற நேரக்காரண மான பக்தியோகத்தையும் அவ்வவற்றின் அங்கங்களுடன் (விரிவுகளுடன்) உபதேசிக்கின்றான். அவற்றைச் செவி மடுத்த பார்த்தன் பக்தி யோகம் அநுட்டிப்பதற்குக் கடின மாயும் பலன் தருவதற்கு நீண்டகாலமாவதையும் இருப் பதைக் கண்டு மனம் கலங்குகின்றான். இதைக் கண்ட கண்ணனும் அநுட்டிப்பதற்கு எளிதாகவும் விரைவில் பலன் தரக் கூடியதுமான பிரபத்தி[1] நெறியை உபதேசித்துக் கீதையையும் தலைக் கட்டுகின்றான். பிரபத்தி வழியைக்

1. பிரபத்தி-பிர-சிறப்பு; பது-செல்லல், அடைதல்; பிரபத்தி-சிறப்பாக அடைதல்; சிறப்பாவது-மனத்தால் அடைதல்; இது சரணடைதல் எனப் பொருள்படும்.

கூறும் ஸ்ரீ ஸூக்தியே 'சரம சுலோகம்' எனப் பெயர் பெற்று விளங்குகின்றது. வைணவ மறைகளாக விளங்கும் திருமந்திரம், துவையம், சரமசுலோகம் என்பவற்றில் மூன்றாவதாகத் திகழ்கின்றது.

இந்தப் பிரபத்தி நெறியை வெறும் உபாயமாகக் கொண்டால் நேரும் குற்றத்தையும் வைணவ ஆசாரியர்கள் குறிப்பிட்டுள்ளனர். சாத்தியோபாயமான[2] பிரபத்தியை சித்தோபாயமான[3] ஈசுவரோடு ஒரு கோவையாகச் சேர்த்து எண்ணக் கூடாது என்பது அவர்கள் கருத்து. பிரபத்தி நெறியும் பக்தி நெறியைப் போல் ஓர் உபாயமாக விதிக்கப் பெற்றிருப்பது உண்மையேயாயினும், இயற்கையாகக் கருணை சுரந்து நிற்கும் எம்பெருமானுக்குச் சேதநன்[4] மீதுள்ள அதிருப்தியைப் போக்குவதுடன் பக்தி பிரபத்தி நெறிகளின் சக்தி ஓய்ந்து விடுகின்றது. பலனுக்கு நேரான காரணம் இயற்கைச் சக்தியும் அளவற்ற கருணையும் நிறைந்து நிற்பவனான சர்வேசுவரனுடைய சங்கல்பமே. வேறு உபாயத்தை அநுட்டிக்கச் சக்தியற்றுப் பிரபத்தியை அநுட்டித்த சேதநனுக்கு அவனது பொறுப்பை சர்வேசுவரன் தானே ஏற்றுக் கொண்டு பக்தியோகம் முதலிய கடினமான உபாயங்களின் இடத்தில் தானே நிற்கின்றான். வகுத்த அங்கங்களை மாத்திரம் உடைய பிரபத்தியை ஒரு வியாஜமாகக் கொண்டு (Pretext) பலனை அளிக்கின்றான். இப்பிரபத்தியும் அவன் செய்விக்கச் செய்கின்றதே. இங்ஙனம் வியாஜமாத்திரமாக நிற்கும் பிரபத்தியைச் சர்வேசுவரனுடன் ஒரு கோவையாகச் சேர்த்து உபாயமாக நினைத்தல் உசிதமன்று என்பது ஆசாரியார்களின் திருவுள்ளமாகும்.

---

2, சாத்தியோபாயம்-பக்தி; மக்களால் சாதித்துக் கொள்ளுகிற உபாயம்.

3. சித்தோபாயம் - இறைவன்; முன்பே உள்ள உபாயம்.

4. சேதநன்-அறிவுடைய ஆன்மா.

பிரபத்தியை உபாயமாகக் கருதுவதன் குற்றத்தைப் பிள்ளை உலக ஆசிரியர்,

"இதுதன்னைப் பார்த்தால் பிதாவுக்குப்
புத்திரன் எழுத்து வாங்குமாப் போலே
இருப்பது ஒன்று"[5]

என்ற சூத்திரத்தால் இனிது விளக்குகின்றார். இச்சூத்திரத்தின் பொருளைத் தெளிவாக்குவோம். புத்திரனைத் தோற்றுவித்தவன் தந்தை ஆகையால் அவன் புத்திரனின் நலத்தை நாடுபவன்; புத்திரன் அறியாத நிலையிலும் அவனைப் பாதுகாத்து நிற்பவன். எழுத்து வாங்குதல் என்பது, சம்பந்தம் இல்லாமல் காப்பாற்றுபவன் பெயரை, சம்பந்தம் இல்லாமல் காப்பாற்றப்படுபவன் தன் மார்பில் எழுதிக் கொள்ளுதலாகும். சம்பந்தமுடைய தந்தையின் பெயரைச் சம்பந்தமுடைய புத்திரன் 'நீ என்னைக் காக்க வேண்டும்' என்று தன் மார்பில் எழுதிக் கொண்டால் பிதாவிற்கும் புத்திரனுக்குமுள்ள சம்பந்தத்திற்குக் குற்றம் தோன்றும் என்பது தெளிவு. அங்ஙனமே பிரபத்தியைச் சாதனமாகக் கொண்டால் மக்களாகிய நாம் தோன்றுவதற்குக் காரணனாகவும், நம் எல்லா நிலைகளிலும் பாதுகாப்பவனாகவும் உள்ள அகாரத்தின்[6] பொருளானவனுக்கும் மகாரத்தின் பொருளான நமக்கும் (மக்களுக்கும்) உண்டான சம்பந்தத்திற்குக்[7] குற்றத்தை விளைவிக்கும். ஆகவே, இந்தப் பிரபத்திக்கு உபாயமாயிருக்கும் தன்மை பொருந்தாதாகின்றது.

---

5. ஸ்ரீவச பூச-57 (புருடோத்தம நாயுடு பதிப்பு.)

6. அகாரம், மகாரம் என்பன 'ஓம்' என்ற பிரணவத்தில் உள்ள எழுத்துகள். அகாரம் காப்பவனாகிய இறைவனையும், மகாரம் காக்கப்படும் பொருளான ஆன்மாக்களையும் குறிக்கின்றன.

7. இரட்சக - இரட்சிய சம்பந்தம்; பிதா - புத்திர சம்பந்தம்.

இந்த எண்ணங்கள் நம் மனத்தில் குமிழியிட்ட வண்ணம் அதிகாலையில் நீராடி, தூய ஆடை அணிந்த வண்ணம் நெல்லையில் நாம் தங்குமிடத்திலிருந்து பேருந்து மூலம் 'சிரீ வரமங்கை' என்றும், 'வானமாமலை' என்றும் பாராட்டப்பெறும் நான்குநேரி என்ற தலத்தை நோக்கிப் புறப்படுகின்றோம். இத் திருத்தலம் திருநெல்வேலிக்கு நேர் தெற்கில் பத்தொன்பது கல் தொலைவில் உள்ளது. திருநெல்வேலி—நாகர்கோவில் பெருஞ்சாலை வழியாகப் பேருந்தில் செல்லுகின்றோம். அந்த ஊரில் நான்கு ஏரிகள் இருந்ததால் ஊர் நான்குநேரி என்ற பெயரால் வழங்கியது. ஆனால், இன்று ஒரே ஒரு ஏரி தான் உள்ளது. அது திருக்கோயிலை அடுத்துள்ளது. ஆதியில் கோயிலின் கருவறையே குளத்திற்குள்தான் இருந்திருக்க வேண்டும் என்று சொல்லுகிறார்கள். இன்றும் குளத்தில் நீர் நிறைந்திருக்கும்பொழுது கோயிலின் கருவறையைச் சுற்றி ஒன்றிரண்டு அடிநீர் நிற்பதைக் காணலாம். இந்தத் திருத்தலத்தில் திருக்கோயில், குளம், ஏரிக்கரையிலுள்ள மரங்கள் எல்லாம் பரமபத நாதனை நினைவு படுத்திக்கொண்டே இருக்கும்.

இந்தத் திவ்விய தேசத்து எம்பெருமானை நம்மாழ்வார் மட்டிலும் மங்களாசாசனம் செய்துள்ளார்.[8] நாம் வந்துகொண்டிருக்கும் பேருந்து ஊரை நெருங்கியதும் ஊரின் நீர்வளம், நிலவளம் நம் கண்ணில் படுகின்றன 'சேற்றுத் தாமரை செந்நெலூடுமலர் சிரீவர மங்கல நகர்'[9] 'தேனமாம் பொழில் தன் சிரீவர மங்கலம்'[10] 'சேறு கொள் கரும்பும் பெருஞ்செந்நெலும் மலி தண் சிரீவர மங்கை'[11] என்ற ஆழ்வார் வாக்குகளில் ஆழங்கால் படுகின்றோம்!

நாம் இவர்ந்து வரும் பேருந்தும் ஊருக்குள் வந்து சேர்கின்றது. ஊர் மிகச் சிறிய ஊரும் அல்ல; பெரிய

8. திருவாய். 5.7 9. திருவாய் 5.7:1
10. ஷை 5.7:6 11. ஷை 5.7:10

ஊரும் அல்ல. இது நெல்லை மாவட்டத்தைச் சேர்ந்த. நான்குநேரி வட்டத்தின் தலைநகராக விளங்குகின்றது நம்மாழுவார் காலத்தில் நான்மறைகளைக் கற்றுத் தெளிந்தவர்கள் பலர் இந்த ஊரில் வாழ்ந்திருக்க வேண்டும்' 'தெள்ளியார் திருநான்மறைகள் வல்லார் மலிதண் சிரீவர மங்கை'[12] என்ற பாசுர அடி இதனைத் தெளிவாக்குகின்றது. அந்தத் திருத்தலத்தில் வேள்விகள் ஓயாமல் நடைபெற்றுக் கொண்டிருக்கும் என்பதைச் 'செந் தொழிலாவர் வேத வேள்வியறாச் சிரீவர மங்கல நகர்''[13] என்ற பாசுர அடியினால் அறிகின்றோம். இதனைத் 'தேறு ஞானத்தர் வேத வேள்வி அறாச் சிரீவர மங்கல நகர்'[14] என்ற அடி மேலும் அரண்செய்கின்றது.

பேருந்து நிலையத்தினில் இறங்கிக் கோயில் வாயிலை அடைகின்றோம். முதலில் நாம் காண்பது பந்தல் மண்டபம். அதையொட்டிய உயர்ந்த மண்டபங்களில் தங்க ரதம், தங்க சப்பரம் முதலியவை பாதுகாப்பாக வைக்கப்பெற்றுள்ளன. பங்குனி உத்தரத் திருவிழாவில் இவை இறைவனை ஏற்றிக்கொண்டு தெருவில் உலா வருதலைக் கண்டு மகிழலாம். கோயில் ஆட்சியாளர் தயவு இருந்தால் கதவுகளைத் திறந்து இவைகளைக் காட்டும்படி ஏற்பாடு செய்யலாம். பந்தல் மண்டபத்தின் வடபகுதியில் வானமாமலை சீயர் மடம் உள்ளது. அந்த மகான் பிரசித்திப் பெற்றவர்; அவரைக் கண்டு சேவித்துத் திரும்பலாம்.

இராச கோபுரம் வாயிலைக் கடந்ததும் கோயில் உள்ளேயே நுழையலாம். கோயில் வாயிலைக் கடந்து செவந்தி மண்டபம் என வழங்கபபெறும் ஒரு மண்டபத்தை அடைகின்றோம். இது செவந்தி நாயக்கர் என்பவரால் கட்டப் பெற்றது. இவர் பக்தியுடன் செய்த

12. ஷை 5.7:9 13. ஷை 5.7:7
14. ஷை 5.7:4

திருப்பணிகளின் விளைவு இந்த மண்டபம். உற்சவ காலத்தில் இம் மண்டபத்தில் உற்சவரை எழுந்தருளச் செய்து அலங்காரம் பண்ணி உலா வரச் செய்வார்கள். இந்த மண்டபத்தைச் சுற்றி ஒரு பிராகாரம் உள்ளது. மண்டபத்தின் வடபுறம் உள்ள அறைகளில் எம் பெருமானின் வாகனங்கள் பாதுகாப்புடன் வைக்கப் பெற்றுள்ளன. இடப்புறம் உள்ள வீரப்பநாயக்கர் மண்டபத் தின் தூண்களில் நல்ல சிற்பவடிவங்களைக் கண்டு மகிழலாம். இந்த மண்டபத்தை அடுத்து இலக்குமி நாராயணன், இலக்குமிவராகர், வேணுகோபாலன், தசாவதாரம் ஆகிய சந்நிதிகள் உள்ளன.

செவந்தி மண்டபத்திற்குப் பின்புறம் உள்ள கொடி மரத்தைக் கடந்து உட்கோயிலை அடைகின்றோம். உட் கோயிலின் முன்புறம் உள்ளது குலசேகரன் மண்டபம். இங்கு வடக்கு நாச்சியார், தெற்கு நாச்சியார் சந்நிதி களும், மணவாள மாமுனிகள், உடையவர் (இராமாநுசர்) பிள்ளை உலக ஆசிரியர் சந்நிதிகளும் இருக்கின்றன. ஆழ்வார்களுக்கெனத் தனிச் சந்நிதியும் இங்கே உண்டு. இதில் நம்மாழ்வார் திருமேனியைத் தவிர ஏனைய ஆழ்வார்களின் திருமேனிகள் உள்ளன. காரணம் ஏன் என்று அர்ச்சகரைக் கேட்டால் அவர் உற்சவரின் முன்புள்ள சடகோபத்தில் பொறிக்கப் பெற்றுச் சிறப்புடன் திகழ்கின்றார் என்று கூறுவர். இச்சந்நிதிகளே யன்றி இத்திருத்தலத்தில் இராமர் சந்நிதி கண்ணன் சந்நிதி சக்கரத் தாழ்வார் சந்நிதி களும் உள்ளன.

இவர்களையெல்லாம் சேவித்துக்கொண்டு அர்த்த மண்டபத்தை அடைகின்றோம். இந்த அர்த்த மண்டபத் திற்கு வெளியில் சந்நிதியை நோக்கிக் கூப்பிய கையராய் நிற்கும் பெரிய திருவடியைக் காண்கின்றோம். கருவறையை அடைந்ததும் கிழக்கே நோக்கிய திருமுக மண்டலம் கொண்டு வீற்றிருக்கும் திருக்கோலத்தில் சேவை சாதிக்கும் தோத்தாத்திரிப் பெருமாளைப் பட்டாபிஷேகக் காட்சியில்

காண்கின்றோம். இவருக்கு இரு மருங்கும் பெரிய பிராட்டியாரும் பூமிப்பிராட்டியாரும் இருக்க ஊர்வசியும் திலோத்தமையும் சாமரம் வீசிக்கொண்டு நிற்பதையும் பார்க்கின்றோம். தங்கமயமான ஆதிசேடன் எம் பெருமானுக்குக் குடைபிடிக்கும் நிலையில் இருப்பதையும் கண்ணுறலாம். இந்தக் காட்சி பரமபதநாதன் வைகுந்தத்தில் இருக்கும் இருப்பை நினைவுறுத்துகின்றது. பிருகு முனிவர் மார்க்கண்டேய முனிவர், சந்திர சூரியர், விஷ்வக்சேனர் முதலிய பதினொரு பேர் ஏகாசனத்தில் இருக்கும் காட்சி கண்களுக்கும் உணர்ச்சிக்கும் பெருவிருந்தாக அமைந்திருப்பதை அநுபவித்து மகிழலாம். இன்றும் இம் மூல மூர்த்தியைச் சுற்றி ஒரு பிராகாரம் உள்ளது. அங்குத்தான் உரோமமுனி,வைகாசனமுனி முதலியமுப்பத்திரண்டு முனிவர்கள் உள்ளனர். தும்பிக்கை ஆழ்வாரும் அவர்களின் நடுவே உள்ளார். இத்திருக் கோயிலில் உள்ள மூலவர்கள் அனைவரும் அன்று ஏரியின் நடுவிலிருந்த பெரும் பாறையிலேயே வடிக்கப் பெற்றவர்கள் என்ற செய்தியையும் நாம் அறிகின்றோம்.

நம்மை அறியாமல் பரவசப் படுகிறோம். ஆழ்வார் பாசுரங்கள் நம் மனத்தில் எழ அவற்றில் ஆழங்கால் படுகின்றோம். எம்பெருமான் தனக்கு முகம் காட்டாமையால் ஆழ்வார் படுகின்ற ஆர்த்தியெல்லாம் நம் நினைவிற்கு வருகின்றது.

"நோற்ற நோன்பிலேன் நுண்ணறி விலேன்
ஆகிலும் இனி யுன்னைவிட்டு, ஒன்றும்
ஆற்றகிற் கின்றிலேன் அரவினணை அம்மானே"[15]

[நோற்ற-அநுட்டித்த; நோன்பு-கருமயோகம்; நுண் அறிவு-ஞான யோகம்]

என்பது அவர் திருவாக்கு. "மூன்று யோகங்களையும் செய்யவில்லை. இங்ஙனமே கைம்முதலற்றவனே யாகிலும்,

15. திருவாய் 5. 7 : 1

உன்னை விட்டு என்னால் தரித்திருக்கமுடியவில்லை'' என்கின்றார். 'சென்றால் குடையாம் இருந்தால் சிங்காதனமாம்' என்று எல்லா அடிமைத் தொழில்களையும் செய்யும் திருவனந்தாழ்வானைப் போல் என்னையும் அடிமை கொண்டருள வேண்டாவோ? என்ற குறிப்பு ''அரவின் அணை அம்மானே'' என்ற சொற்றொடரில் தொனிப்பதைச் சிந்திக்கின்றோம்.

> ''சீரீவர மங்கலநகர்
> வீற்றிருந்த எந்தாய் உனக்கு மிகையல்லன் அங்கே'[16]

என்ற அடியில் பொதிந்துள்ள ஏக்கத்தை நினைந்து பார்க்கின்றோம். ''நீ பரமபத்திலிருந்தாயாகிலும் நான் ஒருவாறு தரித்திருக்கலாம். எனக்காக வந்துள்ள இடத்தில் நான் எப்படி இழப்பது? உன்னாலே காக்கப் பெற வேண்டிய சேதநவர்க்கங்களில் நான் புறம்பு பட்டவன் அல்லேன்'' என்று ஏங்குவதைக் காண்கின்றோம். ஆழ்வாரை அடிமை கொள்வதால் எம்பெருமானுக்குக் கிடைக்கும் பேற்றை ஈட்டாசிரியர் அருமையான ஓர் உவமையால் விளக்குகின்றார். ''பால் குடிக்கும் குழந்தையை, பால் குடித்து வயிறு நிறையக் கண்டு உகக்கும் அன்னையைப் போல, அடிமையாக இருப்பவன் ஸ்வரூபம் பெற்று அடிமை செய்கை சேஷிக்குப் பேறேயன்றோ?'' என்பது எண்ணி எண்ணி மகிழத் தக்கது.

அடுத்து, ஆழ்வாரின் அநுபவம் இராமாவதாரத்தில் செல்லுகின்றது. ''இலங்கை சென்ற அம்மானே?'' என்று இறைவனை விளிக்கின்றார். ''ஒரு பிராட்டிக்காக இலங்கையைக் கிழங்கெடுத்த உனக்கு என் வரையில் இந்த சம்சாரத்தைக் கிழங்கெடுத்தல் அரிதோ? அசோகவனத்தில் பிராட்டிக் கருகில் ஒரு திரிசடை இருந்தாள். இங்கு நான் தனியாக அன்றோ இருக்கின்றேன்?'' என்ற

16. திருவாய் 5.7:1

தொனிப் பொருள் இதில் அடங்கியிருப்பதை எண்ணி மகிழ்கின்றோம். மேலும்,

"அங்குற்றேன் அல்லேன் இங்குற்றேன் அல்லேன்
உன்னைக காணும் அவாவில் வீழ்ந்து, நான்
எங்குற் றேனுமல் லேன்"[17]

என்று அங்கலாய்க்கின்றார். "நான் நித்திய சேவை புரியும் நித்திய சூரிகளிலும் சேர்ந்தவன் அல்லேன்; உன்னைக் கனவிலும் அறியாத சம்சாரிகளிலும் சேர்ந்தவன் அல்லேன். உன்னைக் காணவேண்டுமென்ற அவாவினால் ஒருவருடனும் சேராதவனாக வாழ்கின்றேன். துணையற்ற எனக்கு நீ உறுதுணையாக இருந்து அருள வேண்டும்" என்கின்றார்.

அடுத்து, எம்பெருமானின் அளவற்ற கருணையை எண்ணி,

"பொருளல் லாதஎன்னைப்
பொருளாக்கி அடிமை கொண்டாய்"[18]

என்கின்றார். "ஒன்றுக்கும் பற்றாத என்னையும் ஸ்வரூபம் பெற்றவனாம்படி அங்கீகரித்துத் திருவாய்மொழி பாடும் கைங்கரியத்தை என் பக்கலில் திருவுள்ளம் பற்றினாய். அங்ஙனமே இப்போதும் அருள் செய்வாயாக" என்று வேண்டுகின்றார்.

ஆழ்வாரின் அநுபவம் அடுத்துக் கிருஷ்ணாவதாரத்தில் செல்லுகின்றது.

"மாறு சேர்படை நூற்றுவர் மங்க
ஓரைவர்க் காயன்று மாயப்போர் பண்ணி
நீறு செய்த எந்தாய்!"[19]

[மங்க-அழியும்படி; ஐவர்-பாண்டவர்; மாயப்போர்-ஆச்சரிமான யுத்தம்; நீறு—சாம்பல்]

17. திருவாய் 5. 7 , 2
18. திருவாய் 5. 7 : 3 19. ஷ 5. 7 : 4

என்ற ஆழ்வாரின் அநுபவத்தைக் காண்க. "பாண்டவர்க்கட்குப் பட்சபாதியாக இருந்து மாயப்போர் செய்து நூற்றுவரை ஒழித்தாயன்றோ? இஃது அடியார்களைக் காக்கும் தொழிலன்றோ?" என்கின்றார். 'மாயப்போர்' என்பதற்கு ஈடு: ஆச்சரியமான யுத்தமென்னுதல், வஞ்சகமான யுத்தமென்னுதல், அதாவது இரவைப் பகலாக்கியும் 'ஆயுதம் எடேன்' என்று ஆயுதம் எடுத்தும், சத்துருக்கர் உயிர் நிலையைக் காட்டிக் கொடுத்தும் செய்தவை. "நிலங்கண்ட அம்மானே!" என்று ஆதிவராக அவதாரச் செயலிலும் ஈடுபடுகின்றார் ஆழ்வார். "பிரளயத்தில் ஆழ்ந்த பூமியை அண்டபித்தியினின்றும் விடுவித்த செயல் எக்காரணம் பற்றி? நம்முடைய சரக்கை நாம் நோக்க வேண்டும் என்று செய்ததன்றோ அது? அதுபோல நானும் உன் சரக்கன்றோ?" என்கின்றார்.

இங்ஙனம் வேண்டும் ஆழ்வார்,
"'வான மாமலை யே' அடி
யேன் தொழ வந்தருளே."[20]

என்கின்றார். "நான் ஆசைப்பட்டபடியே அடிமை செய்யலாம்படி வந்தருளவேண்டுங்" என்பது ஆழ்வாரின் வேண்டுகோள். 'வானமாமலை' என்பது ஆழ்வார் எம்பெருமானுக்குச் சூட்டும் திருநாமம். விண்ணளவும் சென்று கிட்டும்படி ஓங்கின மலைபோல் இரா நின்ற எம்பெருமானை மலையாகவே கூறுதல் பொருத்தமன்றோ? எம்பெருமானின் திருநாமமே ஊரின் திருநாமமாக மாறி விட்டது. நான்கு நேரி என்ற திவ்விய தேசத்தை வைணவப் பெருமக்கள் 'வானமாமலை' என்றே வழங்கி வருகின்றனர்.

இந்தச் சந்நிதியில் எம்பெருமானின் பாலனாய் ஏழுலகுண்ட செயலிலும்,[21] கொக்கின் வடிவாய் வந்த பகாசுரனை அவன் வாயைப் பிளந்து அவனை முடித்த

20. திருவாய் 5. 7 : 6 21. ஷை 5. 7 . 7

செயலும்,[22] இரட்டை மருத மரத்தை வீழ்த்திய செயலும்[23] அசுர ஆவேசம் கொண்ட ஏழு எருதுகளை அடர்த்து நப்பின்னையை மணந்த செயலிலும்.[24] வாமனமாணியாய் வந்து மூன்று உலகங்களையும் மாபலியினிடமிருந்து கவர்ந்த கள்ள மாயத்திலும்[25] ஆழ்வார் ஆழங்கால் பட்டு அநுபவிக்கின்றார். அந்த அநுபவத்தை நாமும் பெறு கின்றோம். பாசுரங்களில் ஆழ்வார் "தமியேனுக்கு அருளாயே"[26] "அடியேன் தொழ வந்தருளே," 'அடியேனை அகற்றேலே"[27] "அருளாய் உய்யுமாறு எனக்கே."[28] என்றெல்லாம் வேண்டி நிற்பது போலவே, நாமும் எம்பெருமானிடம் விண்ணப்பிக்கின்றோம். அர்ச்சகரிடம் தீர்த்தம் திருத்துளாய் பெற்று, சடகோபம் சாதிக்கப்பெற்று அர்த்தமண்டபத்திலிருக்கும் உற்சவரைச் சேவிக்க வருகின்றோம்.

உற்சவரின் திருநாமம் தெய்வ நாயகன் என்பது. அவர் உபயநாச்சியார், சிரீவர மங்கைத்தாயார்; ஆண்டாள் முதலியோர் அருகில் இருக்க, பட்டாடை அணிந்து மகர கண்டிகை முதலிய அணிகளுடன் பெரியதொரு பீடத்தில் எழுந்தருளியிருக்கின்றார். அவரை,

"ஆறெ னக்குநின் பாதமே சரணாகத்
தந்தொழிந் தாய்உனக் கோர்கைம்
மாறு நானொன் றிலேனென தாவியு முனதே
சேறு கொள்கரும் பும்பெருஞ் செந்நெலும்
மலிதண் சிரீவரமங்கை
நாறு பூந்தண் துழாயமுடியாய்! தெய்வ நாயகனே"[30]

---

22. திருவாய் 5.7:9 23. திருவாய் 5 7:9
24. ஷை 5 7.9 25. ஷை 5.7:9
26. ஷை 5.7:2 27. ஷை 5.7:6
28. ஷை 5.7:7 29. ஷை 5.7:9
30. ஷை 5.7:10

[ஆறு-வழி; சரண்-உபாயம்; கைம்மாறு - பதிலுப காரம்; ஆவி-ஆன்மா; நாறு-மணம் வீசும்.]

என்ற பாசுரத்தை ஓதிச் சேவிக்கின்றோம். ஏற்கெனவே தமக்குக் கிடைத்திருக்கும் பேற்றிற்கு எம்பெருமானுக்கு நன்றி செலுத்துகின்றார் ஆழ்வார் இப் பாசுரத்தில். 'உன் திருவடிகளே சரணம்' என்றிருக்கும்படி என்னைச் செய்தருளின பேருதவிக்குப் பதிலுதவி ஒன்றும் இல்லை'' என்கின்றார்.

இங்ஙனம் மூலவரையும் உற்சவரையும் சேவித்து இறையநுபவம் பெற்ற நிலையில், திவ்வியகவி பிள்ளைப் பெருமாள் அய்யங்காரின் திருப்பாசுரமும் நம் நினைவிற்கு வருகின்றது.

> ''வானோர் முதலா மரம் அளவாஎப்பிறப்பும்
> ஆனேற்கு அவதியிடல் ஆகாதோ தேனேயும்
> பூவர மங்கை புவிமங்கை நாயகனே
> சீவர மங்கை அரசே''[31]

[வானோர்-தேவப்பிறவி; மரம்-தாவரப் பிறவி; அவதி-முடிவு; தேன்ஏயும்-மது நிரம்பிய; பூ-தாமரை]

''நால்வகை யோனிகளிலும் பிறந்து பிறந்து வருந்தி உன்னை அடைக்கலம் புகுந்து இளைத்த பாவியாகிய எனக்கு இப்போது உன்னைச் சரணமாக அமர்ந்து புகுந்து நிற்கின்ற நல்லறிவை நீ அருளியிருத்தலால், இனியாவது அப்பிறவித் துயரம் நேராது என்னைக் கடைக்கணித்துப் பாதுகாத்தருள்க'' என்ற அய்யங்கார் அவர்களின் விண்ணப்பத்தையே நம் விண்ணப்பமாகக் கொண்டருள வேண்டும் என்று வானமாமலையை வேண்டி நிற்கின்றோம்.

இந்நிலையில் ஆசாரிய ஹிருதயத்தின் சூத்திரத்தினையும் சிந்திக்கின்றோம்.

31. நூற். திருப். அந்-51

**"ருசி விவசர்க்குப் பாதமே சரண்**
**ஆக்கும் ஔதார்யம் வானமா மலை**
**யிலே கொழுந்து விடும்"**[32]

[ருசிவிவசர்-திருமேனி அழகின் ருசியில் பரவசப்பட்ட வர்கள்; ஔதார்யம்-வள்ளல் தன்மை; கொழுந்து விடும்-வளரும்]

இத்திருத்தலத்து எம்பெருமானிடம் வள்ளல் தன்மை என்ற திருக்குணம் முதன்மை பெற்றுப் பிரகாசிக்கும் என்பது கருத்து. 'கருளப்புள்கொடி சக்கரப்படை வான நாட! எம் **கார் முகில் வண்ண!'** (5; 7: 3) என்ற திருப்பாசுரப் பகுதியைத் திருவுள்ளம்பற்றி 'ஔதார்யம்' என்கின்றார் என்பதையும், 'என் நெஞ்சிடம் கொண்ட வானவர் **கொழுந்தே!** (5.7:7) என்ற திருப்பாசுரப் பகுதியைத் திருவுள்ளம் பற்றிக் 'கொழுந்து விடும்' என்கின்றார் என்பதையும் நாம் சிந்திக்கின்றோம்.

நாடோறும் நடைபெற்றுவரும் எண்ணெய்க் காப்புத் திருமஞ்சனமே இத்திருத்தலத்தின் சிறப்பாகும். ஆறுபடி நல்லெண்ணெயுடன் சிறிதளவு சந்தன எண்ணெயைச் சேர்த்துக் காப்பு நடைபெறுகின்றது. இங்ஙனம் மூலவர் தோத்தாத்திரி நாதருக்குத் திருமஞ்சனம் செய்யப்பெற்ற எண்ணெயை ஓரிடத்தில் சேகரம் செய்து அதனைப் பின்னர் வீரப்ப நாயக்கர் மண்டபத்திற்குப் பின்புறம் உள்ள எண்ணெய்க் கிணற்றில் விட்டுவிடுகின்றனர். நாம் கால்படி நல்லெண்ணெய் கொணர்ந்தால் அதனை இக் கிணற்றில் ஊற்றிவிட்டு அக்கிணற்றிலிருந்து கால்படி எண்ணெய் எடுத்துக்கொள்ளலாம். கோயில் ஆட்சியாளர் களிடம் சொன்னால் எடுத்துத் தருவார்கள். இந்த எண்ணெய் தீராத சரும நோய், குட்டம் (தொழு நோய்) முதலியவைகளையெல்லாம் தீர்க்கின்றது என்று மக்கள் நம்புகின்றனர் வடநாட்டு பக்தர்கள் இந்த எண்ணெயை அதிகமாக வாங்கிச் செல்லுகின்றனர். இந்த எண்ணெயின்

32. ஆசா. ஹ்ரு-163

பெருமையை குறுமுனியாகிய அகத்தியரே அவருடைய மருத்துவ முறையில் குறிப்பிட்டுள்ளார்.

சில வரலாற்றுச் செய்திகளையும் இங்கு அறிகின்றோம். பாண்டிய மன்னன் ஒருவன் வானவன் மாதேவி என்ற சேரகுலமங்கையை மணந்து வானவன் என்ற பட்டத்தைப் பெற்றான் என்றும், அந்த மன்னன் இத்திருக்கோயிலை எடுப்பித்ததால் இத்தலம் 'வானமாமலை' என்று பெயர் பெற்றதாகவும் கூறுவர். வரமங்கை நாச்சியார் கோயில் கொண்டிருப்பதன் காரணமாக வரமங்கல நாயகர் என்ற பெயர் பெற்றுள்ளது. அந்தப் பெயரையே ஆழ்வாரும் தம் பாசுரங்களில் குறிப்பிட்டுள்ளார். பாண்டியர்களால் நிறுவப் பெற்ற இத்திருக்கோயில் நாயக்கர் மன்னர்களால் விரிவடைந்திருக்கின்றது. இன்றும் சுற்றுத் தூண்கள் தாங்கும் நீண்ட பிராகாரங்கள் இத் திருக்கோயிலின் பெரும் பகுதி நாயக்க மன்னர்களின் திருப்பணியே என்பதற்குச் சான்று பகர்கின்றன. புஷ்பாஞ்சலி சந்நியாசி என்ற மகான் ஒருவரும் பல திருப்பணிகளைச் செய்வித்தார் என்பதும் செவிவழிச் செய்தி.

இங்ஙனம் பல செய்திகளை அறிந்தவண்ணம் மன நிறைவுடன் 'திருக்குறுங்குடி' என்ற திவ்விய தேசத்திற்குப் புறப்படச் சித்தமாகின்றோம். மீண்டும் ஒரு முறை இத் திருத்தலம்பற்றிய திருவாய்மொழியை ஓதி உளங்கரை கின்றோம். இத் திருவாய்மொழியை நாடோறும் ஓதவல்லார் வானோர்க்குத் தெவிட்டாத அமுதத்தைப் போன்றவராவர் என்ற பலனையும் சிந்தித்த வண்ணம் பேருந்து நிலையத்திற்கு வருகின்றோம்.

# 18. குறுங்குடிக் குழக நம்பி*

வைணவ சமயத்தில் அடிப்படையாக அனைவரும் அறிந்து கொள்ள வேண்டிய சில மரபுகள் உள்ளன. அவற்றுள் ஒன்று 'அர்த்தபஞ்சக ஞானம்' ஆகும். இறைவன் இயல்பு, உயிரின் இயல்பு, உயிர் இறைவனை அடையாவாறு உள்ள தடையின் இயல்பு, அத்தடையினை நீக்கி உயிர் இறைவனை அடைவதற்குரிய உபாயத்தின் இயல்பு, உயிர் இறைவனை அடைந்து பெறும்பயன் ஆகிய பொருள்களையும் ஒவ்வொருவரும் ஒருதலையாக உணர்தல் வேண்டும் என விதித்துள்ளனர் வைண ஆசாரியர்கள்.

உலகப் பற்றற்றுத் தன்னலம் சிறிமிமல்லாத சமயச் சான்றோர்கள் தாம் புரியும் ஒவ்வொரு செயலையும் இறைவனே செய்விக்கின்றான் என்று கருதுகின்றனர். அன்றியும், அவர்கள் தமக்குத் துன்பம் ஏதேனும் நிகழ்ந் தால் அதற்குக் காரணம் தம்பாவம், தம் அறியாமை என்றும், நன்மை நிகழ்ந்தால் அதற்குக் காரணம் இறைவன் அருள் என்றும் கருதுதலும் அவர்களிடம் இயல்பாகக் காண்கின்றோம். ஆழ்வார்களின் தலைவரான

* நம்பி : 'நம்பு' என்பது விருப்பம் என்றும் பொருள் தரும் ஓர் உரிச் சொல். அது பகுதியாக வந்தது நம்பி என்பது. எல்லோராலும் விரும்பப் படுபவன் என்பது பொருள். 'நம்பி' என்பதற்குப் பெருமை, செல்வம், குணம் முதலிய எல்லாம் நிறையப் பெற்றவன் எனப் பொருள் கூறுவர் வியாக்கியான ஆசிரியர்.

நம்மாழ்வார் தாம் பாடும் பாசுரங்கள் அனைத்தையும் இறைவனே தன்னுள்ளிருந்து கொண்டு பாடுவிக்கின்றான் என்னும் கருத்தைப் பன்னிப் பன்னி உரைக்கின்றார். எடுத்துக்காட்டாக,

> ''என் சொல்லால் யான்சொன்ன
> இன்கவி என்பித்துத்
> தன்சொல்லால் தான்தன்னைக்
> கீர்த்தித்த மாயன்''[1]

என்ற ஆழ்வார் திருவாக்கினாலேயே இதனை அறியலாம். இதனால்தான் ஆழ்வாரின் அருளிச் செயல்கள் 'தமிழ் மறை' என்று போற்றுப் பெறுகின்றன.

'சாமவேதசாரம்' எனக் கருதப்பெறும் 'திருவாய் மொழி' எம்பெருமானின் குணம் செயல்களைப் பாராட்டிப் பாடிய பாக்கள் எனப் பெரியோர்களால் கருதப் பெற்றாலும் அதன்கண் மேற்குறிப்பிட்ட ஐந்து பேருண்மைகளும் ஆங்காங்கு அமைந்துள்ளன. அங்ஙனமிருப்பினும் ஒவ்வொரு பொருள் ஒவ்வோரிடத்துத் தெளிவாகவும் சிறப்பாகவும் அமைந்திருத்தலை உணர்ந்து, ஒவ்வொரு பொருளை இவ்விரண்டு பத்துகள் (இரண்டு பத்து-20 பதிகங்கள்[2]) விளக்குகின்றன. எனத் திருவாய்மொழி முழுவதற்கும் ஓர் அமைதி கூறியுள்ளனர் வியாக்கியாதரர் கள். திருவாய்மொழியின் முதலிரண்டு பத்துகள் இறைவன் இயல்பையும், மூன்று நான்காம் பத்துகள் உயிரின் இயல்பையும், ஐந்து ஆறாம் பத்துகள் உபாயத்தின் இயல்பையும் ஏழு எட்டாம் பத்துகள் தடையின் இயல்பை யும், ஒன்பது பத்தாம் பத்துகள் பயனையும் விளக்குவன வாகும் என்று அவர்கள் வகுத்துக் காட்டியுள்ளனர்.

1. திருவாய் 7. 9 : 2
2. வைணவ மரபில் 'பதிகங்கள்' என்று வழங்குதல் இல்லை. நம்மாழ்வாரின் பதிகங்கள் 'திருவாய்மொழி' என்றும், ஏனைய ஆழ்வாரின் பதிகங்கள் 'திருமொழி' என்றும் வழங்கப்பெறுகின்றன.

இறைவனை அடைவதற்குக் கருமம், ஞானம், பக்தி முதலிய உபாயங்கள் உள்ளன. ஆயின், இவையெல்லாம் ஒரு தலையாகப் பயனை அடைவிப்பன அல்ல. அன்றியும், இவற்றை மேற்கொள்வார் சிறந்தஅறிவும், மிக்க ஆற்றலும். உடையவராய் இவற்றைக் கொண்டு செலுத்துதல் வேண்டும் ஆதலால், இறைவன் திருவடிகளையே தஞ்சமாக அடைந்து அவன் அருளையே உபாயமாகக் கொண்டு, அதற் கேற்றவாறு ஒழுகுதல் சிறந்த முறையாகும் என்று ஆன்றோர் துணிந்துள்ளனர். இதுவே நம்மாழ்வாரின் கருத்துமாகும். அங்ஙனம் இறைவன் திருவடிகளையே தஞ்சமாக அடைந்து அவனருளையே உபாயமாகக் கொண்டொழுகுமிடத்து, வேறோருபாயத்தைக் கொண்டொழுகுதலும் வேறொரு தெய்வத்தைத் தன்னைக் காக்குமாறு வணங்குதலும் கூடா. இதனால்தான் இந்நெறியைக் கடைபிடித்து ஒழுகுபவர்கள் 'மறந்தும் புறந் தொழா மாந்தர்' என்று போற்றப் பெறுகின்றனர்.

இறைவன் திருவருளையே உபாயமாகக் கொள்வதால் மற்றைய கருமம், ஞானம், பக்தி முதலியவற்றைக் கைவிட்டு விடுதல் என்பது கருத்தன்று. அவற்றை இறைவனை அடைதற்குரிய உபாயம் என்று கருதாமல் மேற்கொள்ளல் வேண்டும் என்பதுவே கருத்தாகும். எனவே கருமம், ஞானம், பக்தி முதலியவற்றை உபாயம் என்று கருதாமல் மேற்கொண்டு, இறைவன் திருவருளே உபாயம் எனக் கொண்டு ஒழுகுதல் வேண்டுமென்பதே முடிந்த முடிபாகும். 'அவன் அருளாலே அவன் தாள் வணங்கி'[3] என்ற மரபும் இதனை யொட்டியதேயாகும் என்பது ஈண்டு அறியத் தக்கது.

இந்த எண்ணங்கள் நம் மனத்தில் குமிழியிட்ட வண்ணம் நான்கு நேரியிலிருந்து திருக்குறுங்குடி நோக்கிப் போகச் சித்தமாகின்றோம். நான்கு நேரியிலிருந்து மேற்கு நோக்கிச் செல்லும் பாதையில் திரும்பினால் சிறிது தூரம் சென்றதும் இரண்டு பாதைகள் பிரிவதைக் காணலாம்.

3. திருவா. சிவபுரா. அடி-18

அவற்றுள் தென்மேற்கு நோக்கிச் செல்லும் சாலையே குறுங்குடியை அடைவது. சாலை சுமார் தான். திருநெல்வேலி சந்திப்பிலிருந்து பணகுடி செல்லும் பேருந்து ஒன்றினை குறுங்குடி வழியே திருப்பியுள்ளனர். ஆகவே, நெல்லையிலிருந்தும் நேராகக் குறுங்குடிக்குச் செல்ல வசதி உண்டு. நாம் பேருந்தில் புறப்பட்டு வருகின்றோம்.

குறுங்குடி ஒரு சிறிய ஊர் தான். மலையையொட்டிய பகுதியாதலின் இவ்வூர் நல்ல குளிர் சோலைகள் நிரம்பி யிருக்கின்றன. "தென் நன் சோலைத் திருக் குறுங்குடி"[4], "தேன் கொள் சோலைத் திருக் குறுங்குடி"[5], "சோலை சூழ் தண் திருக்குறுங்குடி"[6] என்ற நம்மாழ்வார் வாக்கு களாலும், "கொல்லை வளர் இள முல்லை புல்கும் குறுங்குடி"[7], "கொங்கு அலர் தண்பனை சூழ்புறவின் குறுங்குடி"[8] என்ற திருமங்கை மன்னன் வாக்குகளாலும் இந்த ஊர்ச் சுற்றுப்புறச் சூழ்நிலையினை அறியலாம். மேலும் இந்த ஆழ்வாரின்,

"இரவும் பகலும் ஈன்தேன்
முரல வண்டெல்லாம்
குரவின் பூவே தான்மண
நாறும் குறுங்குடி"[9]
[தேன்-வண்டுகள்; ஈன்-இனிமையான]

"என்றும் இரவும் பகலும்
வரிவண் டிசைபாட
குன்றின் முல்லை மன்றிடை
நாறும் குறுங்குடி"[10]
[குன்று-மலை; மன்று-நிலம்]

4. திருவாய் 5. 1 : 2
5. ஷை 5. 5 : 4
6. ஷை 5. 5 :6
7. பெரி. திரு. 9. 5 : 6
8. ஷை 9. 5 : 7
9. பெரி. திரு. 9. 6: 4
10. ஷை 9. 6: 3

என்ற பாசுரப் பகுதிகள் இவ்வூர் மலைச் சாரலை ஒட்டிய தென உணர்த்துகின்றன. குறுங்குடியின் குளிர்ந்த நீர்த் தடாகங்களில் செங்கால் அன்னம் மனம் மிக்க தாமரைப் பூவில் தன் பேடையுடன் சேர்ந்து வாழும் என்றும், மென்மையான சிவந்த கால்களையுடைய நாரைச் சேவலுக்கு உணவு தேடிக் கொண்டு கூழைப் பார்வையை யுடைய அதன் பேடை வயல்களில் மேயும்[12] என்றும் இந்த ஆழ்வார் பேசுவதனையும் அறிகின்றோம், இன்னும் குறுங்குடியின் சூழ்நிலையைக் காட்டும்,

"கொல்லை முல்லை மெல்லரும்
பீனும் குறுங்குடியே"[13]

[குறியவன் குடி,-குறுங்குடி; குறியவன்-வாமனன்] என்ற இந்த ஆழ்வாரின் திருவாக்கு குற்றாலத்தின் சூழ்நிலையைக் காட்டும்,

"கொல்லை முல்லை மெல்லரும்
பீனும் குற்றாலம்."[14]

என்ற ஞானசம்பந்தரின் திருவாக்கினை நினைக்கச் செய்கின்றது.

நமது பேருந்து கீழ மாடவீதியில் நிற்கின்றது. அங்கு இறங்கி ஊரைச் சுற்றுமுற்றும் பார்க்கின்றோம். பெரிய கட்டடங்கள் ஒன்றும் இல்லை. ஆழ்வார் காலத்தில் ஒருகால் பெரிய ஊராகவும் பெரிய கட்டடங்களைக் கொண்டதாகவும் இருந்திருக்கலாம். நம்மாழ்வார் "குன்ற மாடத் திருக்குறுங்குடி"[15] என்றும், "தக்க கீர்த்தித் திருக்குறுங்குடி"[16] என்றும், "சிறந்த கீர்த்தித் திருக்குறுங்குடி"[17] என்றும், "மைகொள் மாடத் திருக்குறுங்குடி"[18] என்றும், "மன்னுமாடத் திருக்குறுங்

12. பெரி. திரு. 9. 6: 3 13. ஷை 9. 6: 7
11. ஷை 9. 6: 2 14. தேவாரம் 1. 99: 3
15. ஷை 5. 5: 3 16. ஷை 5.5:5
17. ஷை 5. 5: 7 18- ஷை 5. 5: 8

குடி"[19] என்றும் சிறப்பித்துப் பேசுகின்றார். திருமங்கை யாழ்வாரும் இந்த ஊரில் சந்திரனை தொடும் அளவுக்கு உயர்ந்த மாளிகைகள் இருந்தன என்றும்[20] இவ்வூரை உயர்த்திக் கூறுகின்றார்.

மாடவீதியிலிருந்து திருக்கோயிலுக்குள் நுழைகின்றோம்- மட்டையடி மண்டபம், இரதி மண்டபம் ஆகியவற்றையெல்லாம் கடந்து கொடிமரம் (துவஜ ஸ்தம்பம்) இருக்கும் மண்டபத்திற்கு வருகின்றோம். இந்த மண்டபத்தின் வடபுறத்தில் உள்ள மணவாள மாமுனிகள் சந்நிதியையும் அதற்கு முன்பதாக உள்ள அழகான மண்டபத்தையும் காண்கின்றோம். இந்த மண்டபத்தின் தூண்களில் அழகான சிற்ப வடிவங்கள் செதுக்கப் பெற்றுள்ளன. ஆயினும் இந்த மண்டபத்தில் வெளவால் களும் துரிஞ்சில்களும் ஆக்கிரமித்துக் கொண்டு அசுத்தம் செய்துள்ள நிலையையும் காண்கின்றோம்:

இந்தத் திருக் கோயிலின் கொடிமரம் சந்நிதிக்கு நேராக இல்லை.அது சற்று வடபுறமாக விலகி இருப்பதைப் பார்க்கின்றோம். அதன் காரணத்தை வினவ, கோயில் அலுவலர் ஒருவர் நம்பாடுவான் என்னும் பக்தனுக்காகத் தான் அது விலகியிருப்பதாகக் கூறுகின்றார். நம்பாடுவான் யார் என்பது பற்றியும் அவரே விவரங்கள் தருகின்றார். திருக்குறுங்குடியை அடுத்துள்ள மகேந்திரகிரியில் யாழ் வாசிப்பதில் வல்ல பாணர்களுள் ஒருவன் திருக்குறுங்குடி நம்பியைச் சேவிக்க வருகின்றான். அவன் வந்த நாள் கார்த்திகை மாத சுக்கில பட்ச ஏகாதசி. அவன் வரும் வழியிலே பசியுடன் இருந்த பிரம்ம ராட்சசன் ஒருவன் இவனைப் பற்றிப் பசி தீர்த்துக் கொள்ள எண்ணுகின்றான். நம்பியைச் சேவித்த பிறகு தான் வந்து இராக்கதனுக்கு இரையாவதாகப் பாணன் உறுதி கூற , இராக்கதனும் அவன் சொற்களை நம்பி அவனை விடுவிக்கின்றான்.

19. பெரி. திரு.5 : 5 9 20. ஷை. 9. 6: 6

பாணன் நம்பியைச் சேவிக்கின்றபோது கோயிலின் கொடி மரம் சந்நிதியை மறைக்கின்றது. பாணன் அதனைப் பொருட்படுத்தாமல் உள்ளம் உருக உடல் புளகிக்கப் பாடுகின்றான். நம்பியின் அருளால் கொடிமரம் நகர் கின்றது. இதனைக் கண்ட பாணன் மயிர்சிலிர்க்கப் பெற்று ஆழ்வார் பாசுரங்களை கைசிகப் பண்ணில் அமைத்துப் பாடி அநுபவிக்கின்றாள். பாசுரங்களைக் கேட்டு மகிழ்ந்த நம்பியும் அவனுக்கு 'நம்பாடுவான்' என்ற திருநாமமும் வழங்குகின்றார். பாடல்களை விரைவாகப் பாடுவதைக் கேட்ட நம்பி காரணத்தை வினவுகின்றார். பாணன் தான் அரக்கனுக்குக் கொடுத்து வந்த வாக்கைக் கூறுகின்றான். நம்பியின் அருளால் அரக்கனின் பசி நீங்குகின்றது. அவன் தன்னிடம் வந்த நம்பாடுவானைப் புசிக்க மறுக்க, இடை வந்த நம்பி சமாதானம் செய்து ஒரு பாடலின் இசைப் பலனைத் தாரைவார்த்து அரக்கனுக்குத் தருமாறு நம்பாடுவானிடம் சொல்ல, அவனும் அவ்வாறே செய் கின்றான். இதனால்தான் இத்திவ்விய தேசத்தில் கௌசிக ஏகாதசி மிகச் சிறப்பாக நடைபெற்று வருகின்றது என்பதனையும் அறிகின்றோம்.

குலசேகரன் மண்டபத்திற்கு முந்திய பத்தியில் தொங்கும் ஒரு மணியில் பொறிக்கப் பெற்ற பாடலால் திருவிதாங்கோட்டு மன்னன் ஒருவன் நம்பியின் பக்தனாக இருந்து இந்த மணியை அளித்துள்ளான் என்பதை அறிந்து கொள்ளுகின்றோம்

குறுங்குடி நம்பியைச் சேவிக்கச் சித்தமாகின்றோம். இந்த நம்பியைப் பெரியாழ்வார், திருமழிசையாழ்வார், திருமங்கையாழ்வார், நம்மாழ்வார் ஆகிய நால்வரும் மங்களாசாசனம் செய்துள்ளனர். 'குறுங்குடியில் குழகா''[21] என்று திருமங்கையாழ்வார் குறிப்பிடுகின்றார். 'குழகன்' என்றதற்கு மகானாக இருக்கும் தனது மேன்மையைப் பாராமல் சிறியாரோடும் கலந்து பழகுபவன் என்ற பொருள்

21. பெரி. திரு. 6.3:9

உண்டு. பரமபதத்திலிருந்து எம் பெருமான் நம்போன்றவர் உய்யும் பொருட்டுச் சேவை சாதிப்பதற்மாகவே திருக்குறுங் குடியில் எழுந்தருளியுள்ளான்.'நம்பி' என்பது இத்திருப்பதி எம்பெருமானுக்கு நம்மாழ்வாரால் சாத்தப்பெற்ற திருநாமம்.[22] 'நம்பி' என்பது 'எல்லாக் குணங்களும் நிரம்பப் பெற்றவன்'' 'பரிபூரணன்' என்ற பொருளை யுடையது. பரமபதத்திலும் எம்பெருமான் எல்லாக்குணங் களும் நிரம்பப் பெற்றவனாக இருப்பினும் அங்கு எம் பெருமானைக் காட்டிலும் குறைந்தாரின்மையால் வாத்ஸல்யம், சௌசீல்யம் முதலிய எண்ணில் பல்குணங் கள் பகல் விளக்குப்போலப் பயன்படாமல் கிடக்கின்றன. அத்திருக்குணங்கள் யாவும் அர்ச்சாவதாரங்களில் இருட்டறையில் விளக்குப்போலே பிரகாசிப்பனவாதலால் 'பரிபூரணன்' என்ற பொருளையுடைய நம்பி என்ற சொல் அர்ச்சாவதாரத்தில் அமைந்து கிடப்பதைச் சிந்திக் கின்றோம். 'குறுங்குடிக் குழக நம்பி' என்ற அழகான பெயரில் பரவசப்பட்டு நிற்கின்றோம்.

குலசேகரன் மண்டபத்திலிருந்து கொண்டே கிழக்கே திருமுக மண்டலம் கொண்டு நின்ற திருக்கோலத்தில் சேவை சாதிக்கும் அழகிய திருக்குறுங்குடி நம்பியைச் சேவிக்கின்றோம். நல்ல அழகான வடிவம். அவரது திருமேனி அகத்தே சிலையும், புறத்தே சுதையுமாக இருக்கின்ற திருக்கோலம். அதனால் இவருக்குத் திருமுழுக்கு இல்லை. இவருடன் உபய நாச்சியார், மார்க்கண்டேயர், பிருகுமுனிவர் ஆகியோர் எழுந்தருளி யுள்ளனர். இவர்களைச் சேவிக்கும்பொழுது நம்மாழ் வாரையும் திருமங்கையாழ்வாரையும்பற்றிய நாயகி பாவனை நம்மையும் பற்றத்தொடங்குகின்றது. முறையே அவர்களது திருவாய்மொழியையும்[23] திருமொழியையும்[24] ஓதி உளங்கரைகின்றோம்.

---

22. திருவாய் 1.10:9 24. பெரி.திரு. 9.5:9
23. ஷை 5.5

பராங்குச நாயகி உருவெளித் தோற்றமாக திருக்குறுங்குடி எம்பெருமானைச் சேவித்ததை எண்ணுகின்றோம். அங்ஙனம் சேவித்தவள் அப்பெருமானைப் பற்றிப் பேசுதல் புலம்புதல் முதலியன செய்கின்றாள். அது கண்ட அன்னையரும் தோழியரும் தலைவன் திறத்தில் எவ்வளவு காதல் பெருகினும் அவன் வரும்வரை ஆற்றியிருத்தலே மகளிர் கடமையாகும் என்றும், அவளது செயல்கள் தம் குடிக்குத் தகாதவை என்றும் கூறி விலக்குகின்றனர். அவர்கட்கு விடை கூறும் முறையில் இப்பதிகம் 'மகள் பாசுரமாக' நடைபெறுகின்றது.

"திருக்குறுங்குடி நம்பியை நான் கண்ட அக்கணமே சங்கும் சக்கரமும் செந்தாமரைக் கண்களும் செங்கனி வாயும் என் முன்னே தோன்றுகின்றன.[25] மேகத்தில் மின்னல் தோன்றினாற்போலே யிருக்கும் அவனது பூணூலும், பரந்த மின்னல் ஓரிடத்திலே சுழித்தாற் போன்ற மகர குண்டலமும், திருமறுவும் திருவாபரணங்களும், திருத்தோள்களும் என்னைச் சுற்றிவளைத்துக் கொள்ளுகின்றன.[26] அவனது வென்றிவில், கதை, வாள், திருவாழி, திருச்சங்கு ஆகிய பஞ்சாயுதங்களும் என்னைச் சூழ்ந்து கிடக்கின்றன.[27] அவனது செவ்வித் திருத்துழாய்த் தனி மாலையும், உபய விபூதிக்கும் தான் நாதன் என்பதனை நிலைநாட்டும் திருவபிடேகமும், அந்த மாலைக்கும் திருமுடிக்கும் பாங்கான திருமேனியும் திருவரை பூத்தாற் போன்று தோற்றுகின்ற திருப்பீதாம்பரமும் அதன் மேலாபரணமான விடு நாணும் இடைவிடாது என்னருகே நின்று ஒளிருகின்றன.[28] அழகெல்லாம் திரண்டு ஒரு வடிவு கொண்டாற் போன்றதான திருப்பவளமும், அழகியவாய் நீண்டு விளக்குகின்ற திருப் புருவங்களும் அவற்றிற்குத் தகுதியாகத் திகழ்கின்ற திருக்கண்களும் என் உயிர் நிலையிலே

25. திருவாய் 5.5:1 26. ஷை 5-5:2
27. ஷை 5-5:3 28. திருவாய் 5. 5 : 4

நின்று என்னை நலிகின்றன.[29] கற்பகக் கொடிபோன்ற அவனது திருமுக்கும் கொவ்வைச் செவ்வாயும், நீலமேகம் போன்ற திருமேனியும், நான்கு திருத் தோள்களும் என் நெஞ்சை இடமடைத்துக் கொண்டு கிடக்கின்றனவே.[30] சோதி வெள்ளம் அலையெறியும் திருமேனியுடன் என் உள்ளத்தில் வேர் கொண்டு விட்டான்.[31]

''செய்யதாமரைக் கண்ணும் அல்குலும்
சிற்றிடையும் வடிவம்
மொய்யநீழ்குழல் தாழ்ந்த தோள்களும்
பாவியேன் முன்னிற்குமே''[32]

[அல்குல்-இடைக்குக் கீழுள்ள பின் புறப்பகுதி; மொய்ய-செறிந்து நீண்ட; குழல் கேசம்.]

திருமுடி முதல் தோன்றும் திருவபிடேக முதலான எண்ணற்ற சேர்த்தியழகு பொருந்திய திருவாபரணங் களையுடைய அப்பெருமான் கன்னலும் பாலும் அமுதமும் போன்று என் நெஞ்சை விட்டு நீங்காது நிற்கின்றான்[33]. அவனது சோதி வெள்ளத்தில் எழுகின்ற ஒரு திவ்விய உருவம் என் உள்ளத்தில் பிரகாசித்த வண்ணம் நிலை பெற்று நிற்கின்றதே[34]''. இங்ஙனம் ஆழ்வார் நாயகி பெற்றநுபவித்த நிலையை நாமும் பெறுவது போன்ற உணர்ச்சியில் உந்தப் பெறுகின்றோம்.

பரகால நாயகியின் நிலையையும் நாம் சிந்திக் கின்றோம். வெண்ணிறமுள்ள பிறைமதியும், அலைவெறி கின்ற கடலும், தண்மலர்த் தென்றலும், அன்றிற் பறவை களின் ஒலியும் என்னை நோவு படுத்துகின்றன[35]. காலை மாலை என்ற வேறுபாடின்றி எப்பொழுதும் துன்புறு கின்றேன். இரவு நேரம் ஊழியைவிட நீளுகின்றது.

29. திருவாய் 5. 5 : 5 30. ஷை 5. 5 : 6
31. ஷை 5. 5 : 7 32. ஷை 5. 5 : 8
33. ஷை 5. 5 : 9 34. ஷை 5. 5 : 1
35. பெரி. திரு. 9. 5 : 5

வாடையின் தன்மை எரிகின்ற நெருப்பின் தன்மையை ஒத்துள்ளது. அப்பெருமானின் மாயச் செயல்கள் இன்னும் எத்தனையோ?[36] காளையின் கழுத்தில் தொங்கும் மணியின் ஓசை என் நெஞ்சைச் சோர்வுபடச் செய்து இரவு முழுவதும் என்னை உறங்காதிருக்கச் செய்துவிடுகின்றது[37]. திண்திமிலேற்றின் மணியொலியும், ஆயன் தீங்குழலோசையும், தென்றலோடு கூடிய மாலையும், கோல இளம்பிறையும் என் ஆவியைப் படுத்தும்பாடு சொல்லிமுடியாது[38]. பொழுது போக்கற்று அண்டைப் பெண்கள் வம்புகள் பேசி இழித்துக் கூறினும் நீல மணிவண்ணரை மறக்கவே மாட்டேன்.[39] அவன் என் தோல் நலத்தையெல்லாம் கொள்ளை கொண்டு எனக்குப் பொன்மேனியைத் தந்து போயினன்.[40] ஆகவே, என்னைக் கொண்டு திருக்குறுங்குடியில் சேர்த்து விடுங்கள் என்று தாயரையும், தோழியரையும் வேண்டு கின்றாள். இது கண்ணனை அடைய வேண்டும் ஆர்த்தியைப் பொறுக்கமாட்டாத ஆண்டாள் தன்னைக் கண்ணன் எழுந்தருளியிருக்கும் இடத்தில் கொண்டுபோய்ச் சேர்க்குமாறு வேண்டுவதையும்[41] நினைக்கச் செய்கின்றது.

இந்த நம்பியின் கருவறைக்கு அடுத்த கட்டில் வைணவ நம்பி என்ற உற்சவர் எழுந்தருளியுள்ளார். இவரும் உபய நாச்சியார், நீளாதேவி, குறுங்குடிவல்லி நாச்சியார் ஆகியோர் சூழ இருக்கின்றார். அவரையும் சென்று சேவிக்கின்றோம். இவருக்கு 'வைணவ நம்பி' என்ற பெயர் ஏற்பட்டதற்குரிய காரணத்தையும் உசாவி அறிகின்றோம். ஒரு சமயம் பாஷ்யக்காரர் (இராமாநுசர்) இந்தத் திவ்விய தேசத்திற்கு எழுந்தருளினபோது இந்த நம்பி ஒரு சீடன் போல் அவர் முன் வந்து அவரால் பஞ்ச சம்ஸ்காரம்

36. பெரி. திரு.9.5:3
37. ஷை 9. 5 : 4 38. ஷை 9. 5 : 5
39. ஷை 9. 5 : 6
40. ஷை திரு 9. 5 : 9
41. நாச். திரு. 12

செய்யப்பெற்று, திருமண் சாத்திக் கொண்டு வேதாந்தார்த்தமும் கேட்டார் என்பது வரலாறு.[42] ஆனது பற்றியே இத்திருத்தலம் 'வைணவ வாமன க்ஷேத்திரம்' என்று வழங்கப் பெறும் மரபையும் அறிந்து கொள்ளு கின்றோம்.

இந்த இரண்டு நம்பியரையும் சேவித்த பிறகு வெளி வந்து பிராகாரத்தில் வலம் வருகின்றோம். தெற்குப் பிரகாரத்தில் தனித்தனியே கோயில் கொண்டிருக்கும் இலக்குமி நரசிம்மனையும், ஞானப்பிரான் இலக்குமிவரா கனையும் சேவிக்கின்றோம் தனிக் கோயில் கொண்டு சேவை சாதிக்கும் குறுங்குடி வல்லித் தாயாரையும் அடைந்து அந்த அன்னையின் திருவருளையும் பெறு கின்றோம். மேற்குப் பிராகாரத்தில் வருங்கால் தசாவதாரப் பெருமாள், சீநிவாசன், ஆண்டாள் அன்னையார் இவர்கள் நமக்குச் சேவை சாதிக்கின்றனர். இவர்கள் இன்னருளைப் பெற்றுக் கொண்டு வடக்குப் பிராகாரத்தில் நடந்தவண்ணம் தெற்கே திரும்பினால் அங்கு ஒரு சிறு கோயில் தென்படுகின்றது. அத்திருக் கோயிலில் சிவபெருமான் இலிங்க வடிவில் காட்சி வழங்கு கின்றார். இவரை 'மகேந்திரகிரி நாதர்' என்றும் 'பக்கம் நின்ற பிரான்' என்றும் வழங்கி வருகின்றனர். இந்தப் பக்கத்தில் வந்து கொண்டிருக்குங்கால் தனித்தனியே கோயில் கொண்டு சேவை சாதிக்கும் நின்ற நம்பி, வீற்றிருந்த நம்பி, கிடந்த நம்பி ஆகியோரையும் கண்டு வணங்குகின்றோம். இவர்கள் அருகில் பூமியில் அழுந்தப் பெற்ற நிலையில் தலையைச் சிறிது பூமிக்கு வெளியில் நீட்டிய வண்ணம் மகாபலியும் நமக்குக்காட்சிதருகின்றான். அந்த வள்ளலையும் கண்டு மகிழ்கின்றோம்.

இந்தத் திருக்கோயிலில் ஐந்து நம்பியரைச் சேவித்த நம் மனம் கம்பீரமான நம்பி ஒருவனையும் பார்க்க விழைகின்றது. அவன் கோயிலில் இருக்க விரும்பாது மலையின்மீது ஏறி நிற்கின்றான். இவனை மலைமேல் நம்பி என்று வழங்குவர் இவன் கோயில் கொண்டிருக்கும் இடம் கோயிலிலிருந்து ஐந்து கல் தொலைவிலுள்ள ஒரு மலை- மூன்று மைல் வரை அந்த இடத்திற்கு வண்டிகள்

42. குருபரம்பரையில் எம்பெருமானார் வைபவத்தில் இந்த வரலாறு காணப் பெறுகிறது.

செல்லும். அதன் பிறகு 'நடராஜா சர்வீஸ்'தான். மலையில் இந்த நம்பி சுமார் ஏழு அல்லது எட்டு அடி உயரத்தில் சிலை உருவில் கம்பீரமான கோலத்துடன் காட்சி நல்குகின்றான். வாகன வசதியும் கால் வலிவும் உள்ளவர்கள் இவனையும் சேவித்துத் திரும்பலாம்.

இத் திருத்தலத்திற்கே 'குறியவன் குடி' (குறுங்குடி) எனப் பெயரளித்த வாமனனையும் பார்க்க விழைகின்றோம். அவனுக்குக் கோயிலில் ஏனோ இடந்தரவில்லை, திருக்கோயிலுக்குத் தென் திசையில் நான்கு ஃபர்லாங்கு தொலைவில் உள்ள சத்திரம் ஒன்றில் இடம் தந்திருக்கின்றனர். அந்தச் சத்திரத்திற்குச் சென்று அவனையும் வணங்குகின்றோம். மீண்டும் திருக்கோயிலுக்கு வந்து நம்பியாரிடம் பிரியா விடை பெற நினைக்கின்றோம். இந்தக் குறுங்குடி நம்பியின் திருவருளினால்தான் நம்மாழ்வார் திருவதரித்தார் என்பது வரலாறு. திருவிருத்தத்தில்.

> "கொடுங்காற் சிலையர் நிறைகோள்
> உழவர் கொலையில்வெய்ய
> கடுங்கால் இளைஞர் துடிபடும்
> கௌவைத் தருவினையேன்
> நெடுங்கா லமும்கண்ணன் நீள்மலர்ப்
> பாதம் பரவிப்பெற்ற
> தொடுங்கால் ஒசியும் இடைஇள
> மான்சென்ற சூழ்கடமே."[43]

[சிலையர்-வில்லையுடையவர்; நிரை-பசுக்கூட்டம்; கடுகால்-நடைவிரைந்தகால்; துடி-பறை; தொடுங்கால்-தொட்டால்; ஒசியும்-ஒடியும்; கடம்-பாலைநிலம்]

என்பது இரங்கல் துறையிலமைந்த பாசுரம். நம்மாழ்வார் ஒரு தலைவியின் மனநிலையை அடைந்து, அதே நிலையில் தலைவி தலைவனுடன் சென்றமைக்குத் தாய் வருந்துவதாக அருளிய பாசுரமாகும் இது. தாய் தன் மகளைத் தான் பெற்ற அருமைப பாட்டைக் கூறும் முகத்தால் நம்மாழ்வாருடைய அவதாரச் சிறப்பு குறிப்பாக இப் பாசுரத்தில் வெளியிடப் பெற்றிருப்பது கண்டு மகிழத்தக்கது.

உடைய நங்கையார் என்ற நம்மாழ்வாரின் திருத்தாயார் திருமால் திருவடிகளை வணங்கி அவர் அருளால்

43. திருவிருத்-37

நம்மாழ்வாரைப் பெற்றார் என்ற குறிப்பு இந்தப் பாசுரத்தால் அறியக் கிடக்கின்றது. நம்மாழ்வாராகிய தலைவி, 'நல்கூர்ந்தார் செல்வமகள்' என்றாற்போல் அரிதாகப் பெற்றுச் செல்வமாக வளர்க்கப் பெற்றவள். மிக்க மென்மைத் தன்மையுடையவள்; மிக்க இளமைப் பருவமுடையவள் என்ற இத் தன்மையெல்லாம் நம்மாழ்வாருடைய சிறப்பியல்புகளைக் குறிப்பாலுணர்த்துவனவாகும். இப்பாசுரத்தைச் சிந்தித்து இக் குறிப்புகளையெல்லாம் உணர்கின்றோம். திருவாலித் திருநகரியில் திருவவதரித்து அடியார்க்கு எளியனாய் இறைவன் எழுந்தருளியிருக்கும் பல திவ்விய தேசங்கள் எல்லாம் சென்று அந்த எம்பெருமான்களைச் சேவித்து மங்களா சாசனம் செய்து பரவிய திருமங்கை மன்னன் இங்கு வந்து தம் இறுதி நாட்களைக் கழித்துத் திருநாட்டுக்கு எழுந்தருளிய செய்தியையும் அறிகின்றோம். அவரது கோயில் ஊருக்கு வடகிழக்கில் அரை மைல் தொலைவில் உள்ளது.

திருக் குறுங்குடி நம்பியின் சந்நிதியிலுள்ள புஷ்கரிணி கரண்டமாடும் பொய்கை' என்ற திருநாமத்தால் வழங்கி வருகின்றது. இத்திருப் பெயரைக் கேட்டதும்,

''கரண்டமாடு பொய்கையுள்
கரும்பணைப் பெரும்பழம்
புரண்டுவீழ வாளைபாய்
குறுங்குடி நெடுந்தகாய்''[44]

[கரண்டம்-நீர்க் காக்கை; வாளை-மீன் வகைகள்]

என்ற திருமழிசையாரின் பாசுரத்தை நினைக்கின்றோம். நீர்க் காக்கைகள் சஞ்சரிக்கும் பொய்கையில் பெரியகரிய பனம் பழங்கள் விழுந்து புரள்கின்றன அவற்றை நீர்க் காக்கைகள் என்று மயங்கி வாளை மீன்கள் அஞ்சிப் பாய்கின்றனவாம். ஆழ்வாரின் திருவாக்கு பொய்யாகா வண்ணம் அப்புஷ்கரிணியின் கரையில் ஒரு திருப்பனை மரம் நம்பியின் திருவருளையே தாரகமாகக் கொண்டு இன்றும் வளர்ந்திருப்பதைக் கண்டு பெருவியப்பு அடைகின்றோம்.

இந்த நிலையில் ஆசாரிய ஹிருதயத்தின்,

44. திருச்சந்த விரு—62

"வைஷ்ணவ வாமனத்தில் நிறைந்த
நீலமேனியின் ருசி ஜநகவிபவ
லாவண்யம் பூர்ணம்"[45]

[வைஷ்ணவ வாமனம்-திருக்குறுங்குடி; ருசிஜநக-ருசியை உண்டாக்கின்ற; விபவ லாவண்யம்—இராமகிருஷ்ணாதி அவதாரங்களின் அழகு.]

என்ற சூத்திரத்தையும் சிந்திக்கின்றோம். அவதாரத்தில் பிரகாசிப்பதாகச் சொன்ன சமுதாயச் சோபையான அழகு இத் திருத்தலத்தில் நிறைந்திருக்கும் என்பதை அறிகின்றோம்.

திவ்விய கவியின் திருவாக்கும் நம் நினைவிற்கு வருகின்றது.

"தாலத் திழிகுலத்துச்
சண்டாளம் ஆனாலும்
மேலத் தவரதனின்
மேன்மைத்தே - கோலக்
குறுங்குடிவாழ் மாயன்
குரைகழற் காளாகப்
பெருகுடியாய் வாழ்வார்
பிறப்பு."[45]

[தாலத்து - நிலவுலகில்; சண்டாளம்-சண்டாளப் பிறப்பு; மேலத்தவர்-முனிவர்; கோலம்-அழகு; குரைகழல்-ஒலிக்கின்ற வீரக்கழல்; ஆள்-அடிமை; குடி-பரம்பரை.]

என்ற பாசுரம் மிடற்றொலியாய் வெளிப்படுகின்றது. அந்தப் பாடலிலும் ஆழங்கால் படுகின்றோம். இங்ஙனம் நம் பாடுவான் பாடிய நம்பியையும் ஏனைய நம்பியரையும் சேவித்துப் பரிபூர்ண பிரம்மாநுபவம் பெற்ற மன நிலையில் நெல்லை திரும்புகின்றோம்.

---

45. ஆசா. ஹிரு 162

# பின்னிணைப்பு—1

## ஆழ்வார்கள் மங்களாசாசனம் பெற்ற பாண்டி நாட்டுத் திருப்பதிகள்

| | திருப்பதி | பதிகம்; பாசுரம் | பக்கம் |
|---|---|---|---|
| 1. | திருக்கோட்டியூர் | | 1 |
| | | இரண். திரு. 46,87<br>மூன். திரு. 62<br>நான். திரு. 34<br>பெரியாழ். திரு. 1.2; 2 . 6: 2; 4. 4<br>பெரி. திரு. 7. 1:3; 9. 10; 10. 1 : 9.<br>பெரி. திருமடல்—63 | |
| 2. | திருமெய்யம். | பெரி. திரு. 2.5;8; 3.6;9<br>5.5:2; 6.8:7<br>8.2:3; 10.1:5; 11.7:5<br>திருநெடு. 19. பெரி.<br>திருமடல்-63 | 20 |
| 3. | திருப்புல்லாணி | பெரி. திரு. 9.3; 9.4;<br>பெரி. திருமடல் 67 | 36 |
| 4. | திருக்கூடல் (மதுரை) | | 53 |
| | | நான். திரு. 39<br>பெரி திரு. 9.2;5<br>நாச். திரு 4 | |
| 5. | திருமோகூர் | திருவாய் 10.1<br>சிறி. திருமடல் 39 | 70 |
| 6. | திருமாலிருஞ்சோலை. | இரண். திரு 46, 48, 54<br>மூன். திரு. 61<br>திருவாய் 2.10; 10.7;<br>10.8: 1; 6<br>பெரியாழ். திரு. 1.6:8;<br>3.4:5; 4.2<br>4.3; 5.3;<br>நாச். திரு. 4:1, 9.<br>பெரி. திரு. 1.8:5; 2.7;7;<br>4.9:2; 7.3:6; 7.9:7<br>9.2:3,8; 9.8; 9.9<br>10.1:8; 11 2:8;<br>11.7:9. திருநெடு 3,<br>சிறி. மடல். 39; பெரிமடல் 62 | 91 |

# பின்னிணைப்பு—2

## 7. வைணவத் திருப்பதிகள் —108

ஈரிருபதாம் சோழம்;ஈரொன்பதாம் பாண்டி;
ஓர்பதின்மூன் றாம்மலை நாடு; ஓரிரண்டாம்—சீர்நடுநாடு;
ஆறோ(டு) ஈரெட்டுத்தொண்டை அவ்வடநா(டு) ஆறிரண்டு
கூறுதிரு நாடாகக் கொள்.[1]

—பிள்ளைப்பெருமாள் அய்யங்கார்.

## சோழநாட்டுத் திருப்பதிகள்—40

கடல்கிழக்குத் தெற்குக் கரைபொரு வெள்ளாறு
குடதிசையில் கோட்டைக் கரையாம்—வடதிசையி
லேணாட்டுப் பெண்ணை இருபத்து நாற்காதம்
சோணாட்டுக் கெல்லையெனச் சொல்.[2]

1. திருவரங்கம் பெரிய கோயில்
2. திருவுறையூர்
3. திருத்தஞ்சை
4. திருவன்பில்
5. திருக்கரம் பனூர்
6. திருவெள்ளறை
7. திருப்புள்ளம் பூதங்குடி
8. திருப்பேர் நகர்
9. திருஆதனூர்
10. திருவழுந்தூர்
11. திருச் சிறு புலியூர்
12. திருச்சேறை
13. திருத்தலைச் சங்க நாண் மதியம்
14. திருக்குடந்தை
15. திருக்கண்டியூர்
16. திருவிண்ணகர்
17. திருக்கண்ணபுரம்
18. திருவாலி
19. திருநாகை
20. திருநறையூர்
21. திருநந்திபுரவிண்ணகரம்
22. திருவிந்தளூர்
23. திருச்சித்திர கூடம்
24. திருக்காழிச்சீராம விண்ணகரம்
25. திருக்கூடலூர்
26. திருக்கண்ணமங்கை
27. திருக்கண்ணங்குடி
28. திருக்கவித்தலம்
29. திருவெள்ளியங்குடி
30. திருமணிமாடக் கோயில்
31. திருவைகுந்த விண்ணகரம்

1. நூற். திரு. அந்-6
2. ஒருபழம் பாடல்.

32. திருஅரிமேய விண்ணகரம்
33. திருத்தேவனார் தொகை
34. திருவண்புருடோத்தமம்
35. திருச்செம்பொன் செய்கோயில்
36. திருத்தெற்றியம்பலம்
37. திருமணிக் கூடம்
38. திருக்காவளம்பாடி
39. திருவெள்ளக் குளம்
40. திருபார்த்தன் பள்ளி.

## பாண்டிநாட்டுத் திருப்பதிகள்-18

வெள்ளா ரதுவடக்கா மேற்குப் பெருவழியாம்
தெள்ளார் புனற்கன்னி தெற்காடும்—உள்ளாரா
வாண்ட கடல்கிழக்காம் ஐம்பத் தறுகாதம்
பாண்டிநாட் டெல்லைப் பதி[3]

1. திருமாலிருஞ் சோலை மலை
2. திருக்கோட்டியூர்
3. திருமெய்யம்
4. திருப்புல்லாணி
5. திருத்தண்காலூர்
6. திருமோகூர்
7. திருக்கூடல்
8. ஸ்ரீவில்லிபுத்தூர்
9. திருக்குருகூர்
10. திருத்தொலைவில்லி மங்கலம்
11. ஸ்ரீவரமங்கை
12. திருத்தென்திருப்பேரை (திருப்பேரெயில்)
13. ஸ்ரீ வைகுண்டம்
14 திருப்புளிங்குடி
15. திருவரகுணமங்கை
16. திருக்குளந்தை
17. திருக்குறுங்குடி
18. திருக்கோளூர்

## மலை நாட்டுத்திருப்பதிகள்—13

வடக்குத் திசைப்பழநிவான்கீழ் தென்காசி
குடக்குத் திசைகோழிக் கூடாம்—கடற்கரையின்
ஓரமோ தெற்காடும் உள்ளெண் பழிகாதம்
சேரநாட்டிற் கெல்லையெனச் செப்பு.[4]

3. ஒரு பழம் பாடல்.
4. ஒரு பழம் பாடல்

1. திருவனந்தபுரம்
2. திருவண்பரிசாரம்
3. திருக்காட்கரை
4. திருமூழிக்களம்
5. திருக்குட்ட நாட்டுத் திருப்புலியூர்
6. திருச்செங்குன்றூர்.
7. திருநாவாய்
8. திருவல்லவாழ்
9. திருவண் வண்டூர்
10. திருவாட்டாறு
11. திருவித்துவக் கோடு
12. திருக்கடித்தானம்
13. திருவாறன்விளை

## நடுநாட்டுத் திருப்பதிகள்—2

1. திருவயிந்திர புரம்
2. திருக்கோவலூர்.

## தொண்டைநாட்டுத் திருப்பதிகள்—22

மேற்குப் பவளமலை வேங்கடநேர்வடக்காம்
ஆர்க்கும் உவரி அணிகிழக்குப் -பார்க்குளுயர்
தெற்குப் பினாகி திகழிரு பதின்காதம்
நற்றொண்டை நாடெனவே நாட்டு[5]

1. திருக்கச்சி-அத்திகிரி
2. திரு அட்டபுயகரம்
3. திருத்தண்கா
4. திருவேளுக்கை
5. திருப்பாடகம்
6. திருநீரகம்
7. திருநிலாத்துண்டம்
8. திருவூரகம்
9. திருவெஃகா
10. திருக்காரகம்
11. திருக்கார்வானம்
12. திருக்கள் வனூர்
13. திருப்பவள வண்ணம்
44. திருப்பரமேச்சுர விண்ணகரம்
15. திருப்புட்குழி
16. திருநின்றவூர்
17. திருஎவ்வுளூர்
18. திருநீர்மலை
19. திருஇடஎந்தை
20. திருக்கடல் மல்லை
21. திருவல்லிக்கேணி
22. திருக்கடிகை

---

5. ஒரு பழம்பாடல்
பா.தி.19

## வடநாட்டுத் திருப்பதிகள்—12

1. திருவேங்கடம்
2. திருச்சிங்கவேள் குன்றம்
3. திருவயோத்தி
4. திருநைமிசாரண்யம்
5. திருச்சாளகிராமம்
6. திருவதரியாச்சிரமம்
7. திருகங்கைக் கரைக் கண்டம்
8. திருப்பிரிதி
9. திருவட மதுரை
10. திருத்துவாரகை
11. திருவாய்ப்பாடி
12. திருப்பாற் கடல்

## திருநாட்டுத் திருப்பதி—1

1. திருநாடு (வைகுந்தம்—பரமபதம்)

**குறிப்பு :** இந்த நூற்றெட்டுத் திருப்பதிகளைப் பேராசிரியர் டாக்டர் ரெட்டியார் சேவித்து மலைநாட்டுத் திருப்பதிகள், தொண்டைநாட்டுத்திருப்பதிகள், பாண்டி நாட்டுத்திருப்பதிகள், சோழநாட்டுத்திருப்பதிகள் (2 பகுதி கள்), வட. நாட்டுத் திருப்பதிகள் என்ற ஆறு நூல்களை வெளியிட்டுள்ளார்: இவற்றில் திருப்பதிகட்குச் செல்லும் வழி, திருப்பதிகளில் தங்கும் வசதிகள், ஆழ்வார் பாசுரங் களின் அநுபவம் முதலியவை விளக்கப் பெற்றுள்ளன· திருத்தலப் பயணிகட்கும் ஆழ்வார் பாசுரங்களை அநுபவிக்க விரும்புகிறவர்கட்கும் பயன்படும் நூல்கள் இவை,

## பேராசிரியர்
## டாக்டர் ந. சுப்புரெட்டியாரின் நூல்கள்

**ஆசிரியம் :**

1. தமிழ் பயிற்றும் முறை
2. கவிதை பயிற்றும் முறை
3. அறிவியல் பயிற்றும் முறை
4. கல்வி உளவியல் கோட்பாடுகள்
5. யுனஸ்கோ : அறிவியல் பயிற்றும் மூலமுதல் நூல்

**இலக்கியம் :**

6. கவிஞன் உள்ளம்
7. காலமும் கவிஞர்களும்
8. காதல் ஓவியங்கள்
9. அறிவுக்கு விருந்து
10. முத்தொள்ளாயிர விளக்கம் (பதிப்பு)
11. பரணிப் பொழிவுகள்
12. அறிவியல் தமிழ்
13. திருக்குறள் கருத்தரங்கு மலர்—1974 (பதிப்பு)
14. கம்பனில் மக்கள் குரல்
15. காந்தியடிகள் நெஞ்சுவிடு தூது (பதிப்பு)
16. திருவேங்கடமும் தமிழ் இலக்கியமும்
17. தமிழ் இலக்கியத்தில்—அறம், நீதி, முறைமை
18. புதுவை(மை)க்கவி சுப்பிரமணிய பாரதியார் ஒரு கண்ணோட்டம்

**சமயம், தத்துவம் :**

**(அ) விளக்க நூல்கள் :**

19. முத்திநெறி (தமிழக அரசு பரிசு பெற்றது)
20. சிலநோக்கில் நாலாயிரம்
21. வைணவமும் தமிழும்
22. சைவசமய விளக்கு
23. ஆன்மிகமும் அறிவியலும்
24. வைணவ உரைவளம் (ஐதிகம், இதிகாசம், சம்வாதம்)
25. கலியன் குரல்
26. கீதைக் குறள் (பதிப்பு)
27. கண்ணன் எழில் காட்டும் கவிதைப் பொழில் (பதிப்பு)
28. ஆண்டாள் பாவையும் அழகுதமிழும் (பதிப்பு)
29. கீதைப் பொழிவுகள்
30. கண்ணன் துதி
31. இராமர் தோத்திரம்.

**(ஆ) திருத்தலப் பயண நூல்கள் :**

32. மலைநாட்டுத் திருப்பதிகள்
33. தொண்டைநாட்டுத் திருப்பதிகள்
34. பாண்டிநாட்டுத் திருப்பதிகள்
35. வடநாட்டுத் திருப்பதிகள்
36. சோழநாட்டுத் திருப்பதிகள் - முதற்பகுதி (த.அ.ப. பெற்றது)
37. சோழநாட்டுத் திருப்பதிகள் - இரண்டாம் பகுதி (ஷை)
38. தம்பிரான் தோழர்
39. நாவுக்கரசர்
40. ஞானசம்பந்தர்
41. மாணிக்கவாசகர்

**திறனாய்வு**

42. பாட்டுத் திறன்
43. கம்பன் படைத்த சிறு பாத்திரங்கள்
44. அகத்திணைக் கொள்கைகள்
45. புதுக்கவிதை - போக்கும் நோக்கும்
46. கண்ணன்பாட்டுத் திறன்
47. பாஞ்சாலி சபதம் - ஒரு நோக்கு
48. பாரதீயம் (த.அ.ப. பெற்றது)
49. குயில்பாட்டு - ஒரு மதிப்பீடு
50. உயிர்தந்த உத்தமன் (பதிப்பு)
51. ஆழ்வார்கள் ஆரா அமுது
52. விட்டு சித்தன் விரித்த தமிழ்
53. பரகாலன் பைந்தமிழ்
54. சடகோபன் செந்தமிழ்
55. தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை

**வரலாறு, தன் வரலாறு :**

56. நினைவுக் குமிழிகள் - முதற் பகுதி
57. நினைவுக் குமிழிகள் - இரண்டாம் பகுதி
58. நினைவுக் குமிழிகள் - மூன்றாம் பகுதி
59. நினைவுக் குமிழிகள் - நான்காம் பகுதி
60. நினைவுக் குமிழிகள் - ஐந்தாம் பகுதி
61. வேமனர்
62. குரஜாட
63. சி. ஆர். ரெட்டி
64. தாயுமான அடிகள்
65. பட்டினத்தடிகள்
66. வடலூர் வள்ளல்
67. பிரதிவாதி பயங்கரம்
68. மலரும் நினைவுகள்

**அறிவியல் :**

69. மானிட உடல்
70. அணுவின் ஆக்கம்
71. இளைஞர் வானொலி
72. இளைஞர் தொலைக்காட்சி
73. அதிசய மின்னணு
74. தமது உடல் (த. அ. ப. பெற்றது)
75. இராக்கெட்டுகள் (த. அ. ப. பெற்றது)
76. அம்புலிப் பயணம்
77. தொலை உலகச் செலவு
78. அணுக்கரு பௌதிகம் (செ. பல்கலைக் கழகப் பரிசு பெற்றது)
79. இல்லற நெறி
80. வாழையடி வாழை
81. அறிவியல் விருந்து (தமிழ் வளர்ச்சிக் கழகப் பரிசு
82. தமிழில் அறிவியல்—அன்றும் இன்றும் பெற்றது)
83. வானமண்டலக் காட்சி

**ஆராய்ச்சி :**

84. கலிங்கத் துப்பரணி ஆராய்ச்சி
85. வைணவச் செல்வம் (தமிழ்ப் பல்கலைக் கழக வெளியீடு)
86. வடவேங்கடமும் திருவேங்கடமும்
87. Religion and Philosophy of Nalayiram with Special Reference to Nammalvar
88. Studies in Arts and Sciences : (61st Birth Day Commemoration Volume)
89. Collected Papers.

## மதிப்புரைகள்

**1. மலைநாட்டுத் திருப்பதிகள் (2-ஆம் பதிப்பு—1988)**
**ரூ. 18 : 00**

"மெய்ப் பொருளோடு ஊடாடுவதற்கென்று ஒவ்வொரு சமயத்திலும் பல உக்திகளை வகுத்து வைத்திருக்கிறார்கள். ஆனால் வைணவ ஞானிகள் வகுத்து வைத்திருக்கும் உக்திகள் தனிச்சிறப்புடையவை. இறைவனோடு ஊடாடித் திளைப்பதற்கு இங்ஙனம் வழி செய்திருக்கிறார்கள் நம் முன்னோர்கள். அவ்வழியிலே நம்மை நடத்திச் செல்கிறது இந்நூல்...ஆசிரியரின் பிடிக்குள் அடங்காத படிப்பு பக்தி என்கின்ற சூரிய காந்தக் கல்லில் புகுந்து ஒருமையும் பயனும் பெற்று விட்டது. வாழ்க "மலைநாட்டுத் திருப்பதிகள்!"

—ஜஸ்டிஸ் எஸ். மகராசன் (அணிந்துரையில்)

"உண்மையில் பக்தர்கட்கு இந்நூல் நல்விருந்து. ஜஸ்டிஸின் அணிந்துரை மிகப் பொருத்தமாக அமைந்துள்ளது... 'திருக்கோயில்' பத்திரிகை தொடக்கமான காலத்தில் "மலைநாட்டுத் திருப்பதியநுபவம்" என்ற என் கட்டுரை இரண்டாண்டளவும் எழுதித் தந்தேன்... அதனிற் சிறந்த அநுபவம் நுமது என்று அறுதியிட்டேன். அடிக்கடி எடுத்து வாசிக்கத் தூண்டும் நூலிது"

—காஞ்சி பிரதிவாதி பயங்கரம்
**அண்ணங்கராசாரிய சுவாமிகள்**

Dr. N. Subbu Reddiar here takes us through 13 holy shrines out of 108 situated all over India, located in the Kerala state near Nagerkoil...The author has not only given an elaborate account of their location, the legend, vivid description of the architectural splendour of the

temples and beauty of the idols, but has vorifually spelt out the visistadvaita doctrine by annotating the psalms of the apostles (Alvars). The book will bc a valuable travel companion to those desiring to visit these sacred temples... The treatment of padmanabha inTrivandrum is excellent.

Hindu (26-12-71)

2. தொண்டை நாட்டுத் திருப்பதிகள் (முதற்பதிப்பு 1973) ரூ. 10 00

"இந்நூலின் வாயிலாக இத்திருப்பதிகளின் சிறப்பைச் சொல்லிக் கொண்டே மானசீகமான திவ்விய தேச யாத்திரைக்கு நம்மை இரயில் வண்டிகளிலும் பேருந்து களிலும் அழைத்துச் செல்லுகின்றார் இந்நூலாசிரியர். திருக்கோயிலிலுள்ள மதில்கள், மண்டபங்கள், மூர்த்திகள், தீர்த்தங்கள் இவற்றையெல்லாம் சுற்றிக்காட்டுகின்றார்; சுட்டியும் உரைக்கின்றார்; திருத்தலங்களின் வரலாறுகளை யும் கூறுகின்றார். அத்துடன் நில்லாது ஆழ்வார் பெரு மக்கள் மங்களாசாசனம் செய்து எம்பெருமான்களை அநுபவித்த நெஞ்சு நெக்குருகும் சில பாசுரங்களையும் பாடி நம்மையும் அவ்எம்பெருமான், எம்பெருமாட்டியார் இவர்கள் எதிரே கொண்டு நிறுத்தி ஆனந்தச் கடலில் ஆழ்த்துகின்றார். இவற்றிற்கிடையே வைணவ சமயக் கருத்துகள் பலவற்றை நம் சிந்தையில் தூவி சிந்தனையை யும் கிளறுகின்றார்... நாமும் மானசீகமாக திவ்விய தேச யாத்திரையை நிறைவு செய்து கொண்டோம் என்ற மகிழ்ச்சிப் பெருக்கில் திளைக்கின்றோம். இத்தகைய நூல் நிலைத்து வாழ்க"

—ஜஸ்டிஸ் என். கிருஷ்ணசாமி ரெட்டியார்

சோழ நாட்டுத் திருப்பதிகள் (2 பகுதிகள்) (அச்சில்)
வடநாட்டுத் திருப்பதிகள் (அச்சில்)

# இந்நூலாசிரியரைப் பற்றி...



பிறப்பு : 27-8-1916

75-அகவையையுடைய இந்த நூலாசிரியர் பி.எஸ்சி., எல் டி., வித்துவான் பி.ஏ., எம்.ஏ., பிஎச்.டி., பட்டங்கள் பெற்றவர். ஒன்பதாண்டுகள் துறையூர் உயர்நிலைப் பள்ளியில் தலைமையாசிரியராகவும், (1941-1950)-பத்து ஆண்டுகள் காரைக்குடி அழகப்பர் ஆசிரியர் பயிற்சிக்கல்லூரியில் தமிழ் பேராசிரியராகவும் (1950-60), பதினேழு ஆண்டுகள் திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தின் தமிழ்த்துறைத் தலைவராகவும், பேராசிரியராகவும் (1960—77) பணியாற்றி ஓய்வு பெற்றவர். 1978-இல் சென்னையில் குடியேறி பதினைந்து மாதங்கள் (1978-பிப்ரவரி - 1979-ஜூன்) கலைக் களஞ்சியத் தலைமைப் பதிப்பாசிரியராகப் பணியாற்றியவர் நாலாயிரத் திவ்வியப்பிரபந்தத்தில் நம்மாழ்வார் தத்துவத்தை ஆராய்ந்து டாக்டர் (பிஎச்.டி) பட்டம் பெற்றவர். தமிழிலும் ஆங்கிலத்திலும் பல ஆய்வுக் கட்டுரைகள் எழுதி வெளியிட்டவர். பெரும்பாலும் இவை நூல்வடிவம் பெற்றன; பெற்றும் வருகின்றன தவிர ஆசிரியம் (5), இலக்கியம் (13), சமயம் (25) திறனாய்வு (12), அறிவியல் (14), ஆராய்ச்சி (6) வாழ்க்கை வரலாறு (14)-என்று 89 நூல்களின் ஆசிரியர். இவர்தம் அறிவியல் நூல்களில் இரண்டும், சமய நூல்களில் மூன்றும், திறனாய்வு நூல்களில் ஒன்றும் தமிழக அரசு பரிசுகளும்: அறிவியல் நூல்களில் ஒன்று சென்னைப் பல்கலைக்கழகப் பரிசும், ஒன்று தமிழ் வளர்ச்சிக்கழகப் பரிசும்-ஆக எட்டு நூல்கள் பரிசுகள் பெற்றவை. இவர்தம் அறிவியல் பணியைப் பாராட்டி குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனம் 'அருங்கலைக்கோன்' என்ற விருதையும் பண்ணிருட்டி வைணவ சபை இவரது சமயப் பணியைப் பாராட்டி 'ஸ்ரீசடகோபன் பொன்னடி' என்ற விருதையும் தமிழக அரசு திரு வி. க. விருதையும் வழங்கிச் சிறப்பித்தன. இனிமை, எளிமை, தெளிவு இவர்தம் நூல்களின் தனிச் சிறப்புகளாகும்.